# பதிப்புரை

பழந்தமிழரின் பண்பாட்டை அறியத் துணைநிற்பன அவர்தம் சுவடிச் செல்வங்ளேயாகும். தமிழில் இன்று நாம் காணும் இலக்கியங்கள், இலக்கணங்கள், மருத்துவ நூல்கள், சோதிட வானநூற் புலமைமிளிரும் நூல்கள் முதலாய பலவும் தமிழ்ச்சான்றோர் சுவடி வடிவில் தந்த அருங்கொடையேயாகும், முன்னையோர் நமக்கு அவற்றை நமக்கு முறையாகப் பதிப்பித்து வழங்கியமையால் இச்செல்வங்கள் குறித்து இன்று பலநூறு ஆய்வுகள் எழுந்துள்ளன. இன்னும் அச்சில்வாரா அரியநூல்கள் பல தமிழகத்தின் சிற்றூர்களிலும் தமிழ்ப்பெருமக்களிடத்திலும் கடல்கடந்த நாடுகளில் உள்ள நூலகங்களிலும் இருக்கக்கூடும். அவற்றையும் சரியான முறையில் கண்டுணர்ந்து பதிப்பித்தால் 'மறைந்து போன தமிழ் நூல்கள்' என்னும் பட்டியலில் அவை இடம் பெறாது காத்தபெருமையும் நமக்கு ஏற்படும் அன்றோ ?

சுவடிகளைப் படித்து அவற்றைப் படியெடுத்துப் பாதுகாக்கும் அரிய கலை இன்று மறைந்து வருகின்றது. இப்பயிற்சியை இன்றைய ஆர்வமிக்க இளைஞர்கட்கு முறையாகப் பயிற்றுவிக்கவில்லையெனில் எதிர்காலத்தில் நமக்குக் கிடைக்கும் பழஞ்சுவடிகளின் பெருமையையும் அதன் தன்மையையும் கூட அறிந்துகொள்ள வாய்ப்பில்லாமல் போய்விடும். தமிழ்காத்த தமிழறிஞர்களும் தமிழ்ப்பதிப்பு முன்னோடிகளுமான ஆறுமுகநாவலர், சி. வை. தாமோதரனார், உ.வே. சாமிநாதையர், ஆகியோர்தம் வழிநின்று உழைப்பதும் அவர்கள் விட்டுச் சென்ற பணியைத் தொடர்வதும் தமிழுக்குச் செய்யும் ஆக்கபூர்வமான பணிகளாகும்.

பழந்தமிழ் நூல்களைப் பதிப்பிப்பதற்கு அவர்கள் பட்ட துன்பங்களை அவர்கள் பதிப்பித்த நூல்களின் அரிய முன்னுரைகளிலே காணலாம், வசதியும் வாய்ப்பும் குன்றியிருந்த சூழலிலும் தமிழுக்காகவே தம்மை ஒப்படைத்துக்கொண்டு ஆற்றிய இவர்களுடைய தமிழ்த்தொண்டு என்றென்றும் நினைவு கூர்தற்குரியதாகும்.

நெடிய கால இடைவெளிக்குப் பின்னர் ஒரு நூலினைப் பதிப்பிக்கும் போது ஆசிரியரின் உண்மைப் பாடத்தைத் தெளிந்து பதிப்பிப்பது என்பது மிகவும் சிக்கலான செயலாகும். கிடைக்கின்ற பல்வேறு சுவடிகளையும் திரட்டி அவற்றில் காணும் பல்வேறு

பாடங்களையும் நுணுகி ஆராய்ந்து உண்மைப் பாடம் கண்டு பதிப்பித்தல் வேண்டும். 'மூலபாட ஆய்வியல்' (Textual criticism) என்னும் துறை இன்று விரிவாக ஆராயத்தக்க துறையாக வளர்ந்துள்ளது. இச்சூழலில் பண்டையோர் பதிப்பித்த நூலின் பதிப்பு நெறி முறைகளைக் காணும்போதுதான் அவர்களுடைய அரிய முயற்சி நன்கு புலனாகும்.

சுவடிகளில் ஒற்றெழுத்துக்களுக்குப் புள்ளியும், நெட்டெழுத்தைச் சுட்டும் கொம்பு வேறுபாடுகளும் சீர் அடி பிரித்து எழுதிய முறைகளும் இரா. இவற்றைச் சுவடி இயல் புலமை கொண்டோரே ஓர்ந்து அறிந்து உணர்ந்து எழுதமுடியும். பொறுமையும், பயிற்சியும் இப் பணிக்கு மிகமிகத் தேவையாகும், இப்பணியில் உள்ள அருமைப்பாடு குறித்து அறிஞர் முருகவேள் பின்வருமாறு கூறுவார் :

ஏடுபடித்தல் என்பது ஒருகலை
எல்லோரும் ஏடுபடித்தல் இயலாது
தனியே அதற்குத் தக்கநற் பயிற்சி
பெரிதும் உழைத்துப் பெறுதல் வேண்டும்
செல்லும் பூச்சியும் ஏட்டைச் சிதைக்கும்
ஏடுகள் ஒடிந்தும் கிழிந்தும் இருக்கும்
மெய்யெழுத்துக்கள் புள்ளி எய்தா
ஒற்றைக் கொம்பும் சுழியின் கொம்பும்
வேறுபா டின்றி ஒத்து விளங்கும்.
காலும் ரகரமும் ஒன்றே போலும்
பகர யகரம் நிகர்உறத் திகழும்
கசதநற என்பவை வசதியாய் மாறி
ஒன்றன் இடத்தை மற்றொன்று கவரும்
எழுதுவோர் பலப்பல பிழைகளைப் புரிவர்
பக்கங்கள் பலப்பல மாறிக் கிடக்கும்
சீரும் தளையும் செய்யுள் வடிவும்
சரிவரத் தெரியா வரிகள் விடுபடும்
இத்தகு நிலைகளால் எத்தனையோ பல
குழப்பமும் கலக்கமும் விளைத்து நிற்கும்
'தொன்று மொழி' அந்தோ 'தோன்றுமொழி' ஆகும்
'எதிபங்கம்' அந்தோ 'எதிர்பங்கம்' என ஆம்!
'யவமத்திமம்' எனும்எழிற் பெருஞ் சொல்தான்
'பவமத்திமம்' எனப் பண்பிற் பிறழும்
'அரிய வழக்கு' அன்னோ 'ஆரிய வழக்காம்'
'போரவை' மாறிப் 'போர்வை' எனப்படும்

'அல்குதடம்' எனும் அழகிய தொடர்
'அல்குற்றடமாய்' அருவருப்புத்தரும்!
தகர சகரம் குறிக்கும் 'தச்சகரம்'
'தாக்கரம்' ஆகித் தரங்கெட்டு நிற்கும்
இனையபல் பிழைகளை யெல்லாம் களைந்து
செப்பன் இட்டுத் திருத்தி அமைத்து
அறிஞர்கள் ஏற்ப ஆய்ந்தாய்ந்து பதிக்கும்
பதிப்பாசிரியர் பணியின் சிறப்பு
பெரிது! பெரிது! மிகவும் பெரிதே.

எனச் சுவடி படிக்கும்போதும் எழுதும்போதும் ஏற்படுகின்ற பல்வேறு இடர்களையும் பாங்குறப் புலப்படுத்துகின்றார். இத்தகு இடர்களையெல்லாம் களைந்து பதிப்புப்பணியில் ஈடுபட்ட தமிழறிஞர்களின் பணியைப் பின்பற்றி உழைப்பதே நாம் அவர்கட்குச் செலுத்தும் நன்றியாகும்.

தமிழகத்திலுள்ள ஒவ்வொரு சிற்றூரிலும் கிடைக்கும் சுவடிகளைத் தொகுததும் வகுததும் வரையறைப்படுத்தி ஒரு தொகுப்பினை உருவாக்கிக்கொள்ளுதல் வேண்டும். இத்தகைய முயற்சிகள் ஆங்காங்கே நடைபெற்று வண்ணமிருக்கின்றன. அவற்றையெல்லாம் ஒருங்கிணைத்து ஆக்கபூர்வமான சுவடியியல் தொகுப்புகளை உருவாக்கித் தகக குழுவினரிடம் அவற்றை ஒப்படைத்து விரைவில் நூல் வடிவில் உருவாக்கினால் பழந்தமிழரின் அருஞ்செல்வம் அழியாமல் இருக்கும், அறிஞர்கள் இத்தகு முயற்சியில் ஆவன செய்வார்களாக!

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை தமிழாய்வு வழி அச்சில் வாரா அருந்தமிழ் வரிசையில் பல்வேறு நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றது. அவ்வகையில் அல்லிகதை என்னும் இந்நூலும் இதுகாறும் அச்சில் வராத அரிய சுவடியாகும். இச்சுவடியைப் படியெடுப்பதில் துணைநின்ற புலவர் வையாபுரி, பதிப்புப்பணி குறித்து அரிய கருத்துரைகள் வழங்கிய டாக்டர் பூ. சுப்பிரமணியம், நூற்பணியின் போது படியெடுத்தும், அச்சுப்படி திருத்தியும், அகரநிரல், நூற்பட்டியல் தயாரித்தும் பெரிதும் உதவிய செல்வி. ந. விசாலாட்சி, ஆகியோர் அனைவருக்கும் நன்றியுரியது. இத்தகு முயற்சிகளில் எங்கட்கு ஆர்வமூட்டியும் ஆற்றுப்படுத்தியும் வருகின்ற தமிழ்மொழித் துறைத்தலைவர் பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்கட்கும் நன்றி. அச்சில்வாரா அருந்தமிழ் வரிசையில் வெளிவரும் இந்நூலினை அறிஞர் வரவேற்றுப் போற்றுவர் என நம்புகின்றேன்.

சென்னை
30—4—85

—இ. சுந்தரமூர்த்தி

# பொருளடக்கம்

# அல்லி கதை

## ஆய்வு முன்னுரை

### கதைப்பாடல்கள்

தமிழில் கதைப்பாடல்களின் தோற்றம் மிகப் பழமையுடையதாய் விளங்குகின்றது. இதன் தோற்றம் குறித்துத் திட்டமாக வரையறுத்துக் கூறப் போதிய சான்றுகள் இல்லை. எனினும் இக்கதைப் பாடல்கள் பலவும் புகழேந்திப்புலவர் இயற்றியதாகக் கூறப்பெறும் மரபும் எண்ணிப்பார்க்கத்தக்கது. இப்பெயரைத் தாங்கிவரும் கதைப் பாடல்கள் பலவாகும். கதைப்பாடலுக்கும் இவருக்கும் இருக்கும் நெருங்கிய தொடர்பினை மட்டும் அறிய முடிகின்றது, மிகப்பழைய பதிப்புகளில் பெரும்பாலும் இவர்தம் பெயர் இல்லாத கதைப்பாடல்கள், அம்மானைகள் இல்லை எனவேகூறலாம்.

கதைப்பாடல்கள் பெரும்பாலும் அம்மானை எனவும், கதை எனவும் மாலை எனவும் முடிகின்றன. (தேசிங்குராஜன் அம்மானை அல்லிகதை, அல்லி அரசாணிமாலை போல்வன) இவையேன்றி வேறு பெயர்களிலும் முடிவதுண்டு. நாட்டுப்புறமக்கள் எளிதாகச் சுவைத்து உணர்ந்து மகிழும் வகையில் அமைந்துள்ள இக் கதைப்பாடல்கள் இசையோடு பாடும்வண்ணம் ஏற்ற சொற்களையும், எளிய வருணணைகளையும் இயல்பான மொழிநடையையும் பெற்று விளங்குகின்றன. வட்டார வழக்குகளை மிகுதியாகப் பெற்று விளங்குவது கதைப்பாடல்களுக்குரிய தனித்தன்மை எனலாம். சில கதைப்பாடல்களின் இடையே விருத்தப்பாடல்களும் அமைந்துள்ளன.

### கதைப்பாடல்கள் வகை

கதைப்பாடல்களின் வகைகளை ஆய்வாளர்கள் பலவாறாக ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளனர். பேராசிரியர் நா. வானமாமலை அவர்கள் வகுத்த நெறியின் அடிப்படையில் அவர்தம் பகுப்பினை ஐந்தாகத் தொகுப்பார் கோ. கேசவன்[1] அவை (1) புராணக் கதைப் பாடல் (2) தெய்வப்புனை கதைப்பாடல் (3) புத்தார்வக் கற்பனைக் கதைப் பாடல் (4) சமூகக் கதைப்பாடல் (5) வரலாற்றுக் கதைப் பாடல். திரு மு. அருணாசலம் அவர்கள் தம்முடைய நூலில் (Ballad Poetry) (1) புத்தார்வக் கற்பனைக் கதைப் பாடல், (2) வரலாற்றுக் கதைப்பாடல் (3) புராணக்கதைப் பாடல் (4) சமூகக் கதைப்பாடல் (5) தத்துவக் கதைப்பாடல் (6) இன்பியல் கதைப்பாடல்

(7) சமணக் கதைப்பாடல் (8) முசுலீம் கதைப்பாடல் (9) கிறித்தவக் கதைப்பாடல் எனப்பகுத்துள்ளார்: இவை அனைத்தையும் தொகுத்து வகைப்படுத்தி ஏழுவகையாகப் பிரிப்பார் கோ. கேசவன்[2] அவை வருமாறு.

1. புராணக் கதைப்பாடல் — பஞ்சபாண்டவர் வனவாசம், வாலிமோட்சம்.
2. புராணச் சார்புக் கதைப்பாடல் — அல்லி அரசாணி மாலை, புலந்திரன் தூது.
3. தெய்வப் புனை கதைப்பாடல் — நீலியம்மன் கதை, சாஸ்தா கதைப்பாடல்.
4. புத்தார்வக் கற்பனைக் கதைப்பாடல் — மதனகாமராஜன் கதை, புலனேந்திரன் அம்மானை.
5. சமூகக் கதைப்பாடல் — முத்துப்பட்டன் கதை, காத்தவராயன் கதை.
6. வரலாற்றுக் கதைப்பாடல் — கட்டபொம்மு கதைப்பாடல், கான்சாகிபு சண்டை.
7. இலக்கியப்புனைகதைப்பாடல் — கோவிலன் கதை, கண்ணகி வழக்குரை.

இங்ஙனம் ஆய்வாளரின் அணுகுமுறைக்கேற்பக் கதைப்பாடல்கள் பலவாயினும் அவையனைத்தும் கிராமிய மக்களின் பண்பாட்டுணர் வோடு ஒன்றி விளங்குவதை அறிந்துகொள்ள முடிகின்றது.

## கிராமியச் சூழல்

கதையடங்கிய நாட்டுப் பாடல்கள் தமிழ் நாட்டில் ஏராளமாக இருக்கின்றன. இவை யாவும் கிராமத்திலுள்ள உழைக்கும் மக்கள் இடையே இன்னும் செல்வாக்குப் பெற்று விளங்குவதைப் பேராசிரியர் நா. வானமாமலை அவர்கள் வீரபாண்டியக் கட்டபொம்மு கதைப் பாடல் முன்னுரையில் கூறுவது குறிப்பிடத்தக்கது[3] ஒவ்வொரு மாவட்டங்களிலும் இத்தகைய கதைப்பாடல்கள் அவ்வச் சூழலுக்கேற்ப அமைந்துள்ளன. விழாக்காலங்களிலும், பிறவேளைகளிலும் இக்கதைப் பாடல்களை அம் மக்கள் உணர்ச்சியோடு ஒன்றிப் பாடுவர். இப் பாடல்கள் அம்மானை, சிந்து, கும்மி, லாவணி, வில்லுப்பாட்டு ஏசல் முதலிய பல உருவங்களில் இன்றும் நிலைபெற்றிருக்கின்றன. ஆனால் கிராம வாழ்க்கை நகர்ப்புற வாழ்க்கையாக மாறும் இக்காலச் சூழலில் இவை நலிந்து வருவதை எண்ணும்போது வருத்தம் மிகுகின்றது, தமிழ் ஆர்வலர் இந்நிலையைப் போற்றிப் பாதுகாக்க ஆவன செய்தல் இன்றியமையாததாகும். ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள இத்தகைய பாடல்களைத் தக்கவாறு பதிவு செய்தால் பண் பாட்டு வரலாற்றினை அறிந்துகொள்ள இவை பெரிதும் துணைநிற்கும்.

## புராணக்கதைச் சார்புப் பாடல்கள்

புராணக் கதையைச் சார்ந்து பல கதைப்பாடல்கள் தோன்றி உள்ளன. இவை புராணக் கதைகளைத்தழுவி அவற்றிலுள்ள சில கூறுகளை தொகுத்து கதைப்பாடல்களாக அமைந்து விளங்குகின்றன. இரண்டொரு நிகழ்ச்சிகளைப் புராணக் கதையிலிருந்து தேர்ந்தெடுத்துக் கொண்டு தமிழ்நாட்டு உழைக்கும் மக்களின் கண்ணோட்டத்தில் கற்பனையை ஓடவிட்டுப் பின்னப்பட்டிருக்கும் கதைகளே இவை என்பார் பேராசிரியர் நா. வானமாமலை.[4] மகாபாரதத்தில் அர்ச்சுனன் சித்ராங்கதை என்னும் பாண்டிய குமாரியை மணந்து கொண்டான் என்று வரும் சம்பவத்தை, கற்பனை வளத்தால் அல்லி அரசாணி மாலையாக எவரோ ஒருகவி புனைந்துவிட்டார். அதனைத் தொடர்ந்து தமிழ்க் கலாசாரத்திற்கும் வடநாட்டுக் கலாசாரத்திற்கும் இணைப்பு ஏற்படுத்தும் முறையில் பல கதைகள் தோன்றின என்பார்[5].

இங்ஙனம் புராணக்கதைகளை அடியொற்றித்தோன்றிய கதைப் பாடல்கள் பலவாகும். இராமாயண மகாபாரதக் கதைகளையொட்டிப் பல கதைப்பாடல்கள் தோன்றின. அல்லி அரசாணி மாலை பாரதக் கதையினைத் தழுவியதாகும். பஞ்சபாண்டவர் வனவாசம், பவளக் கொடிமாலை, அபிமன்னன் சுந்தரிமாலை, புலேந்திரன் களவுமாலை, புலேந்திரன் தூது, ஆரவல்லி சூரவல்லிகதை, குருக்ஷேத்திரமாலை, பாரத அம்மானை, முதலான பல கதைப்பாடல்கள் பாரதக்கதையைத் தழுவினவாகும்.

## அல்லி அரசாணி மாலை

பாரதத்தைத் தழுவிய கதைப்பாடல்களுள் இது மிகவும் பெருவழக்கினதாக விளங்குகின்றது. இது பல பதிப்புகளைப்பெற்று விளங்குவது குறிப்பிடத்தக்கதாகும். அல்லி அரசாணி மாலை, கதைப்பாடல்களுள் மிகப்பழமையானதாக இருக்கலாம் என்று கருதுவர்[6] ஏறத்தாழ 5000 வரிகளை உடையதாக அல்லி அரசாணி மாலை விளங்குகிறது.

பன்னிரண்டாண்டுகட்கும் மேலாகச் சோழவள நாட்டில் மழையின்மையால் வறுமை மிகவே சோழமன்னன் பாண்டியமன்னனிடம் செல்கின்றான். இருவரும் இந்திரனிடம் செல்கின்றார்கள், சோழமன்னன் மழைத்தெய்வமான இந்திரனிடம் மனமுருகி வேண்டவே சோழநாட்டில் மழை பொழிகின்றது, பாண்டியமன்னனோ மதுரைச் சொக்கரிடம் தீவிர ஈடுபாடுகொண்டவனாதலால் இந்திரனுக்கு முதன்மை தாராது வழிபாடாற்றவில்லை. எனவே பாண்டியநாடு வறுமையால் வாட சோழவளநாடு செழித்தோங்குகின்றது.

பின்னர்ப் பாண்டியநாட்டிலும் பெருமழைபொழிய வைகை பெருக்கெடுத்தோடுகின்றது. வைகை வெள்ளத்தை அமைதிப்படுத்தவே சொக்கன் பிட்டுக்கு மண்சுமந்த பேரருளாளனாக மாறுகின்றான். பணி

செய்யாமையினால் பாண்டியமன்னனால் பிரம்படி படுகின்றான். சிவனும் சக்தியும் மதுரையின் கடும் வெப்பத்தைத் தாங்காது வில்வ மரத்தடியில் தங்குகின்றனர். அங்கிருந்த நீர்க்காக்கை இருவர் மீதும் குளிர்ந்த நீரைச்சொரிய இருவரும் மகிழ்ந்து வரமளிக்கின்றனர். நீர்க்காக்கை பெண்ணாகிப் பாண்டியனுடன் வாழ்ந்து ஒரு ஆண்மகவைப் பெறவே அவனுக்கு நீள்முகன் எனப்பெயரிடுகின்றனர். பாண்டியர் இவனுக்குப் பட்டங்கட்டிவிட்டுத் தவத்திற்குச் செல்கின்றனர். பின்னர்ப் பாண்டிய மரபில் தோன்றிய அல்லிக்கும் இவனுக்கும் போர் மூளவே அல்லி இவனை வென்று அரசாளுகின்றாள்.

தீர்த்தயாத்திரை வந்த அருச்சுனன் அல்லியின் பேரழகைக் கேள்வியுற்று அவள்மீது மாளாத காதல் கொண்டு திருமணம் செய்ய விரும்புகின்றான். கண்ணபெருமானின் துணையால் அல்லியின் பல்வேறு கொலை முயற்சிகளையும் தந்திரங்களையும் வெல்கின்றான். அல்லியிடம் மாறுவேடம் பூண்டு பாம்பாகவும், வேதியனாகவும் செல்கின்றபகுதி கதைப்பாடலாசிரியரின் கற்பனை வளத்திற்கும் எடுத்துச்சொல்லும் உத்திநெறிக்கும் அருமையான சான்றுகள் எனலாம். இறுதியில் சோபன ஓலை விடுத்து அருச்சுனன் திருமணம் புரிவதாகக் கதை அமைகின்றது. திருமணத்திற்கு அருச்சுனனின் உடன் பிறந்தவர்களும் மற்றவர்களும் உறுதுணை புரிகின்றனர். அவர்தம் இல்வாழ்வின் பயனாகப் புலந்திரன் பிறப்பதாகக் கூறி ஆசிரியர் கதையினை முடிக்கின்றார்.

மதுரையில் வாழ்ந்த பாண்டிய மரபினையும் வடபுலத்தில் வாழ்ந்த அருச்சுனனையும் இணைத்துப் புதிய உறவு படைத்திருக்கும் தொன்மைக் கதையாசிரியரின் கற்பனை வளம் எண்ணியின்புறத் தக்கதாய் இலங்குகின்றது. இக்கதைப் பாடல்களின் வழியே ஆசிரியர் காலத்திருந்த நடைமுறைப் பழக்க வழக்கங்களும் நமக்குத் தெரிய வருகின்றன. படைக்காலக் கருவிகள், அலங்காரம் செய்யப் பயன்படும் பொருட்கள், அக்காலத்திய வழக்குச் சொற்கள் ஆகியன பண்பாட்டு வரலாற்றறிவை உணர்தற்குப் பெருந்துணை புரிவனவாம்.

## அல்லிகதை

அல்லிகதை என்னும் இப்பதிப்பு நூல் கோவை மாவட்டத்தில் வெள்ளலூரில் உள்ள கப்பினிபதிபிள்ளை என்பார் எழுதியதாக ஏட்டின் இறுதியில் உள்ள குறிப்பின் மூலம் அறிய வருகின்றது. அக்குறிப்பு வருமாறு :

> "இந்த அல்லி கதையேடு ஒரடியாயிருந்ததை இரண்டு பங்கு ஈரடிப் படுத்தியும் ஒரு பங்கு ஒரடியாயும் சோபகிருது வருடம் ஆடி மாதம் 31 ஆம் தேதி வெள்ளலூரிலிருக்கும் கப்பினிபதி பிள்ளை கையெழுத்தாக யெழுதி முடிந்தது. சந்திரவாரத்தில் சம்பூரணம், சொக்கனாத சுவாமியும் எம்பெருமாளும், மீனாட்சி அம்மனும் பூர்ணகடாட்சமாய்த் துணையிருந்து ரெட்சிக்கவும். வெற்றிவேலுற்றதுணை"

இக்குறிப்பினால் ஏடு எழுதப்பட்டகாலம் சுமார் 150 ஆண்டுகட்கு முற்பட்டதாக இருக்கலாம் எனத் தெரியவருகின்றது. ஏற்கெனவே இருந்த பாடலை மாற்றிய எழுதிய செய்தியும் இக்குறிப்பினால் அறியமுடியும்.

## வேறுபாடுகள்

இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ் பதிப்பித்துள்ள பெரிய எழுத்து அல்லியரசாணி மாலை பதிப்பிற்கும்[7] அல்லிகதை என்னும் இப்பதிப்பிற்குப் வேறுபாடுகள் உள. அல்லிகதை முழுவதும் பல வேறு பாடுகளுடன் இப்பதிப்பு அமைந்துள்ளது[8] அல்லியரசாணி மாலையில் கூறப் பெற்ற முன்பகுதிக்கதையமைப்பு முழுவதும் இப்பொழுது பதிப்பித்துள்ள அல்லிகதை நூலில் இல்லை என்பது குறிப்பிடத் தக்கது. அவ்வாறே மொழிநடையமைப்பும் முன்னர்க் கூறிய அல்லியரசாணி மாலையை விட அல்லிகதையில் மாறுபட்டு விளங்குவது குறிப்பிடத்தக்கது. சிலபகுதிகள் இலக்கிய நயத்தோடும் சிறப்போடும் விளங்குகின்றமை கருதுதற்குரியது.

அல்லிகதையில் அல்லியரசாணி மாலையில் கூறப்பட்ட முன் பகுதிகள் சோழநாட்டு வறுமை, சொக்கரின் திருவிளையாடல், நீர்க் காக்கை, நீள்முகன் தோற்றம், போர் முதலியன பலவும் நீக்கப் பெற்று அருச்சுனனின் பெருமையோடும் நாககன்னியோடு வாழ்கின்ற இன்ப வாழ்வோடும் தொடங்குகின்றது. அருச்சுனன் தீர்த்த யாத்திரை செய்வது முதலான பகுதிகள் ஏறத்தாழ இரு சுவடிகளிலும் ஒத்து வருகின்றன. ஆனால் பாடலின் நடையமைப்பில் பெருமாற்றங்கள் காணப்படுகின்றன. அல்லிகதையில் ஓரளவு இலக்கிய நயம் வாய்ந்த தன்மை அமைந்துள்ளது எனலாம். நாட்டுப்புறப்பாடலின் தன்மையும், பிற்காலத்தே தோன்றிய கவிதை அமைப்பின் தன்மை ஓரளவும் கலந்த அமைப்பினதாக அல்லிகதை விளங்குகின்றது.

அல்லிகதைப் பாட்டில் இறுதியில் காணப்படும் குறிப்பிற்கேற்பக் கதை சுருக்கப்பட்டிருக்கக் கூடும். ஆனால் கதையின் இன்றியமையாத பகுதி பிற்பகுதியேயாகும். அல்லியின் வீரமும், தன்முனைப்பும், அருச்சுனனின் காதல் உணர்வும், கண்ணனின் தந்திரமும் முதலாயின பிற்பகுதியில் நன்கு விளக்கமாக உரைக்கப்பட்டுள்ளன. புராணக் கதையேயாயினும் அருச்சுனனுக்கும் கண்ணனுக்கும் இடையே நடக்கும் உரையாடல்களில் இலக்கியச் சூழலின் மணம் கமழ்கின்றது. மாமன்-மச்சான் உறவில் காணும் ஏளனப் பேச்சுக்களை கிராமியச் சூழலுக்கேற்பக் கதைப்பாடலில் விளங்குவதைக் காண முடிகின்றது. (அல்லிகதை வரிகள் : 1046—1059)[9] இக்கதைப்பாடலில் அமைந்துள்ள சில சிறப்பான பகுதிகளைக் காணலாம்.

## உணர்ச்சி

அல்லியின் மீது பாம்பாக உருமாறி ஆடி விளையாடினதினால் அவளுடைய மேனியின் மணம் அருச்சுனனை விரக வேதனையில் ஆழ்த்துகின்றது. அப்பகுதியில் அமைந்துள்ள பாடல் வரிகள் கதைப் பாடலாசிரியரின் உணர்ச்சியோட்டத்தை நன்கு காட்டும்.

"மார்பெல்லாம் செண்பகப்பூ வாசமே வீசுதையா
சென்னிமே லெல்லாம் செந்தாழைப்பூ வீசுதையா
கண்ணிமை யெல்லாம் கத்தூரி வீசுதையா
செந்தா மரைமலர்போல் சிறந்த திருவாயில்
மந்தார மாலையைப்போல் வாசமே வீசுதையா
கன்னி யிளங்கழுத்து களபமே வீசுதையா
சொர்ண மிருபுயமுந் தூளிதமே வீசுதையா
பாண்டிப்பெரு மாள்மார்பில் பதிந்தமு லைகளிரண்டும்
தாண்டி ஸ்தனகிரியள் தாழம்பூ வீசுதையா
ஆலிலை போல அமர்ந்த திருவயிறும்
மாலிமைசேர் மல்லிகைப்பூ வாசமே வீசுதையா
மின்னல் கொடிபோல மிகுந்த திருவிடையில்
கன்னி யிடைகளெல்லாங் கத்தூரி வாசமய்யா
தண்ண லிருதுடை செந் தாமரைப் பூவாசம்
கன்னி வரால்போலே கணைக்கா லிரண்டினிட
பாதங்கள் வாசம் பரிமளமே வீசுதையா 1104-1118)

என்னும் அருச்சுனனின் நீண்ட புலம்பலில் மலர்களின் பெயர்களையும் மணத்தையும் குறிப்பிடுவார் ஆசிரியர்'

## அலங்காரப் பொருட்கள்

அல்லிக்கு அலங்காரம் செய்ய முனைந்த தோழியர் அவளுக்கு அணிவித்த அணிகலப் பொருட்களைப் பாதாதிகேசம்முதல் பட்டிய லிட்டுக் காட்டுவார். சல்லடம், சரிகை, ரவிக்கை, சரிகைப் பொன் பட்டு, முதலான துணி வகைகளும், குப்பி, முத்துக் கோவை அசைந்தாடும் நெத்திச்சுட்டி, கொப்பு, தளஓலை, கண்டசரம், கழுத்துப் பதக்கம், சீனிமணி, சிந்தாக்கு, தங்கச்சரம் துலங்கும் தாளவடம், மார்புப் பதக்கம், தோள்வந்தி, ஒட்டியாணம், பாடகம், பொன் வளையல், திருக்காப்பு, கணையாழி, கொலுசு, ஆடகப் பொன் சலங்கை, பாதசரம் எனக்குறிப்பிட்டு பாதாதி கேசம்முதல் பணுதி வர்க்கம் உள்ளதெல்லாம் அல்லி அணிந்தாள் என்கின்றார் (வரிகள் 1206-1227).

## பழமொழிகள்

கதையின் போக்கிலே மக்கள் வழங்கிவரும் பழமொழிகளை இடையே பெய்து கூறுவது நயமுடன் விளங்குகின்றது, பாமர மக்களின் சொல் வழக்குகள் இங்ஙனம் கதை கூறும் மாந்தரின் வாய் மொழியாக வருவது எண்ணத்தக்கதாகும்.

மதுரைக்குச் செல்வதாக அருச்சுனன் கூறியதும் நாககன்னி தன்னைப் பிரிந்து செல்ல வேண்டாம் என்று கூறுகின்றாள், அப்பொழுது,

> 'என்னிலும் பார்க்க அவள் இதமோ கனரதியோ
> பெண்ணை விட்டுப் பெண்ணை நத்திப் போறீர் பெருமானே
> பெண்பாவம் பொல்லாது பின்தொடரும் கண்டீரே' **(153-155)**

எனக் கூறி இரந்துநிற்பாள். 'பெண்பாவம் பொல்லாது' என வழக்கு இங்கு வருவதைக் காணலாம்.

கண்ணன் நாககன்னிக்கு ஆறுதல் கூறுவது போல் அமைந்த மொழியிலும்,

'ஆனைக்குக் கோமணந்தான் கட்டுவாரோ ஆரணங்கே' (176) என்னும் பழமொழியினைக் காணலாம்.

அல்லியிடமிருந்து பாம்பாய் நின்ற அருச்சுனன் வர மறுத்து, கண்ணனை ஏளனம் செய்கின்றான். உதவி செய்தபின் தன்னையே ஆழம் பார்ப்பதைக் கண்ட கண்ணன் அவனை நோக்கி,

'தீட்டு மரத்திற் கதுமை திறம் பார்த்த சேவகன் போல்' (1060)

என்னும் பழமொழியைக் கூறி வருந்துவான். தீட்டியமரத்திலேயே பதம்பார்க்கும் உவமைப் பழமொழியைக் காணலாம்.

## வட்டாரப் பேச்சு வழக்குகள்

அல்லிகதையேடு கொங்கு நாட்டில் கிடைத்தமைக்கேற்ப இக் கதையில் வழங்கும் பல சொற்கள் அவ்வட்டார வழக்குச் சொற்களைப் பெற்றுத் துலங்குவதையும் காணமுடிகின்றது. தோர்வில்லா (10), வசந்த (11) கிட்டநின்று (102) எதுத்த (141), வாரவழி (234), நாமசேருவைபண்ணி (571), விகிஞ்சுகட்டு (575), சொங்கு (621), அனந்தி (853), வித்துப் போடுவேன் (886), காருங்கோ (895), முடுக்கி (1055), வாதாக (1086), இந்த விசை (1128, 2092), எக்கச்சக்கம் (1246), விறுக்கு விறுக்கெனவே (2418) முதலான பல சொற்களும் மொழியியல் நோக்கில் பார்க்கத்தக்கனவாம்.

## உவமைகள்

பொருளை விளக்குதற்குப் பயன்படும் உவமைகளைக் கதைப் பாடல்களில் ஆங்காங்கே இழையோடுமாறு அமைத்துச் சொல்வதும் பாடல் மரபாகும், அங்ஙனம் கூறும் உவமைகளில் சமுதாயப் பண் பாட்டுச் சூழலுக்கு ஏற்ப உவமைகள் அமையக்கூடும். பழைய புராணக் கதைகளும் உவமையாக்கப்படும்.

அருச்சுனன் நாககன்னி இன்ப வாழ்வினை 'மன்மதனும் ரதியும் போல் வாழ்ந்து இருக்கையிலே' என்று குறிப்பார் ஆசிரியர் (27). அல்லியின் அழகுவருணனைகளிலும் உவமைநயம் சிறப்பதைக்காண முடிகின்றது (52-60)

'செப்பமுள்ள சூரியன் போல் சிறந்த வலுக்காரி' (140)
'வள்ளைக் கொடிபோல் வளைந்த திருக்காது' (254)
'உருக்கிய தங்கம் ஒளிபோல் திருமேனி' (691)

அல்லியின் அழகைக்கண்டு மயங்கிய அருச்சுனனின் நிலையை 'வேரற்ற தென்னைமரம் வீழ்ந்த பாவனைபோல' (675) என்பார். அருச்சுனனைப் பாம்பாய் மாற்றியதும் ஒளிவீசித் திகழ்வதை 'ஆயிர மாற்று அபரஞ்சிப் பொன்னிறம் போல், ஆயிரஞ் சூரியன் அணைந்து திரண்டாப்போல் (784, 785) எனும் உவமையால் காட்டுவார்.

அல்லி, பாம்பின் ஆட்டத்தால் மயங்கியதைச் 'சொக்குப் பிடித்தாப் போலத் தாபமாய்ப் பஞ்சணைமேல் சாய்ந்தாளே (1035) என்று கூறும் உவமை சுவடி எழுதப்பட்ட மண்ணின் பின்னணியாய் விளங்கு வதைக் காணலாம். சோளப் பயிர் கதிர் பிடிக்கும் நிலையில் இருப்பதைக் 'சொக்குப் பயிர்' என்பர். இதனை உண்ணும் மாடுகள் மயங்கி நோய்வாய்ப்படும். சொக்குதல் என்பதற்கு மயங்குதல் என்னும் பொருளும் உண்டு.

அல்லியின் சீற்றத்திற்கு 'மதயானை போலெழுந்தால்' (1071) என உவமிப்பர். வேதியன் உருவில் இருக்கும் அருச்சுனன் அல்லியிடம், 'கந்தருக்கு வள்ளியம்மன் கலந்து மிகச் சேர்ந்தாப்போல்' என்று இறை மணத்தை உவமை காட்டித் தன்னை மணக்குமாறு வேண்டுவான். அல்லியின் விரக வேதனையை 'அலைகடலில் துரும்பதுபோல் ஆரணங்கு வீற்றிருந்தாள்' (2421) என உவமை நயம் பொதுளக் கூறுவார். உலக வழக்கான 'பாம்புக்குப் பால்வார்த்தாலும் அது விஷத்தைக் கொட்டும்' என்பதனைப் 'பாம்புக்கமிர்தம் பலநாள் கொடுத்தாலும் காட்டுமே அவ்விஷத்தைக் காரியம்போல் மெய்யாச்சு' (1061-1062) என்று பாம்பு உருவில் இருக்கும் அருச்சுனன் திரும்பி வர மறுத்ததைக் கண்ணன் வாயிலாக மிகப் பொருத்தமான உவமை கொண்டு விளக்கும் திறம் எண்ணி மகிழ்தற்குரியது. இங்ஙனம் இன்னும் பல்வேறு உவமைகள் இக்கதைப் பாடலில் விளங்குவதைக் கண்டு மகிழலாம்.

## மீண்டும் மீண்டும் கூறல்

நாட்டுப்புறப் பாடல்களின் இன்றியாமையாத கூறுகளில் ஒன்று பாடிய வரிகளையே மீண்டும் மீண்டும் அமையப் பாடுதலாகும். கேட்போர் உணர்ச்சி வயப்படுதற்கேற்ற இசைச்சூழலை உருவாக்கும் பெற்றியது இத் திருப்புரைகளாகும்.

மதுரைநகர் நோக்கித் திரும்பும் பெண் பெருமாளான அல்லியைப் பின் வருமாறு காட்டுவார் ஆசிரியர்.

'மதுரை நகர்நோக்கி வருகிறாள் பெண்பெருமான்
நடவும் நடவுமென்று நகாருகள் தான்முழங்க
நடவும் நடவுமென்று நவரிகள் தான்முழங்க

நடவும் நடவுமென்று நாகசுரம் தான்முழங்க
நடவும் நடவுமென்று ராசமக்கன் தேர்நடக்க
நடவும் நடவுமென்று ராணுவங்கள் முன்போக
நடவும் நடவுமென்று நடத்தி வருவோரும்
செல்லும் செல்லுமென்று திறமாய் நடப்போரும்
மெள்ள மெள்ளவென்று விலகி நடப்போரும்' (1583-1591)

என்று ஒரே சொல்லைத் திரும்பத்திரும்பப் பெய்து பாடலுக்கு உணர்ச்சி வேகமும் நடை வேகமும் ஊட்டுவது காண்க.

தூணின் வருணனையைக் கூறும் போதும் ஆசிரியர் இவ்வாறே திருப்பித் திருப்பிக்கூறும் மரபினைப் பின்பற்றுவதைக் காணலாம்.

தூணுக்குத் தூணு தூபப் புகையேற்றி
தூணுக்குத் தூணு தூண்டாமணி விளக்கு
தூணுக்குத் தூணு தொடர்மாலை பொன்மாலை
தூணுக்குத் தூணு சோதிரத்தின மலைகளும்
தூணுக்குத் தூணு தோரணங்கள் தானும்கட்டி
தூணுக்குத் தூணு சோதிவிடுஞ் சித்திரங்கள்

எனத் தூணை அழகுபடுத்தும் காட்சியை அழகுடன் கூறுவது இன்பம் பயப்பதாய் அமைந்துள்ளது.

## அரிய தொடர்கள்

கதைப்பாடலேயானலும் நயமிக்க தரம் வாய்ந்த பல பகுதிகளை அல்லிகதையில் காணமுடிகின்றது, நாட்டுப்புறக் கூறுகளும் இலக்கியக் கூறுகளும் இணைந்த நிலையில் விளங்குவதற்கு இக்கதைப்பாடலில் பல சான்றுகளைக் காட்டலாம். அவற்றுள் சில வருமாறு :

அல்லியின் அழகை வருணிக்கும் போது

'ஒருபிடிக்கு ளடங்குமிடை உயிர்கொடுக்குங் கரியகுழல்
ஒருவிரலுக்குள் மறையு முகம்' (77-78)

என மிகச் செறிவான நடை மிளிரப்பாடுவது குறிப்பிடத்தக்கது. அவ்வாறே பிரிவு நிலையை,

'பொய்க் கூட்டை விட்டுப் போனீரே யாமாகில்
கையில்வளை சோர்ந்துவிடும் கலையிடையில் நில்லாது
உண்ணோ னுடுக்கேன் ஒருபொழுதுங் கண்ணுறங்கேன்'
(149-151)

என உணர்ச்சி மிக்க தொடர்களால் எடுத்துக் காட்டுவதும் காண்க. விரகதாபம் மிகுந்த மகளிரின் நிலையை,

'கைசோர்ந்து நிற்பாரும் கலைசோர்ந்து நிற்பாரும்
மெய்சோர்ந்து நிற்பாரும் மேல்விழுவோம் என்பாரும்' (243-244)

என அவர்தம் துன்பத்தை வருணிப்பார்,

'மாலை மயங்காமல்-என் மங்கிலியங் குன்றாமல் (196) (441)' வரவேண்டிய நிலையை ஈரிடங்களில் புலப்படுத்துவார், மதுரைநகர்ப் பெண்களின் விரக நிலையைப் பின் வருமாறு காட்டுவார் :

'மதுரைத் தெருவீதி மன்னர் வருகையிலே
எதிரில்லா மன்னிரிருவரையுங் கண்ட பெண்கள்
கைசோர்ந்து கலைசோர்ந்து கையில் வளைசோர்ந்து
மெய்சோர்ந்து குழல்சோர்ந்து வீரியமும் தான்சோர்ந்து
எட்டிநின்று தான் பார்ப்பார் ஏங்கி மனம்விடுவார்
கட்டின சேலை கலைத்து உடுப்பாரும்
தாகமென்று வாராரோ தாகந் தணியோமோ' (532-556)

அர்ச்சுனன் ஆயனாகிய கண்ணனைப் பார்த்து,

'வித்தும் நீ பயிரு நீ விளைவும் நீ செங்நெல்லும் நீ
கொத்தும்நீ குலமும் குழந்தை தந்தை தயன்னையும்நீ' (1092-1093)

என உரைக்கும் போது திருமுறைப்பாடல்களின் தாக்கத்தையும் உணர முடிகின்றது.

மதுரையின் சிறப்பை எடுத்துரைக்கும் போது பல்வேறு கொடைச் சிறப்புகளையும் குறிப்பிடுவார்.

கொடுப்பாரே யல்லாமல் கொள்வா ரொருவரில்லை
எடுப்பார்கள் தானம் ஏற்பா ரொருவரில்லை (534-535)

என்னும் வரிகள் கம்ப இராமாயணப் பாடலை நினைவூட்டும் வண்ணம் அமைந்துள்ளன.

நாகங்கள், அல்லியின் ஏவலின்படி அருச்சுனனைத் துன்புறுத்த வருகின்றன. இவை அவனைக் கடிப்பதற்காக வரும்போது ஒன்றை யொன்று முந்திக் கொண்டு வருகின்றன. இதனை மிகவும் நயமாக,

என்னைவிடு உன்னைவிடு என்றுவரும் வேளையிலே (2043)

என்று சுட்டுவார். இங்ஙனம் பல நயமான தொடர்களும் வழக்குச் சொற்களும் அல்லிகதைக்குச் சிறப்பைத் தருகின்றன எனலாம்.

## முடிவுரை

கதைப்பாடல்களினின்றும் அவ்வட்டார பண்பாட்டுச் சூழலையும், அவர்கள் பேசிவரும் வழக்குச் செற்களையும் காணமுடிகின்றது. உழைக்கும் மக்களின் பொழுது போக்கிற்கும் நம்பிக்கைக்குமுடைய இக்கதைப் பாடல்களின் வழி அவர்தம் பழக்க வழக்கங்கள் புலனாகின்றன.

'அல்லிகதை' என்னும் இந்நூல் அல்லியரசாணி மாலையின் சுருக்கமான கதையமைப்பைக் கொண்டு விளங்குவதாயினும் மொழி நடையிலும் கற்பனை நயத்திலும் இலக்கியச் சிறப்பாலும் சிறந்து விளங்குகின்றது என்பது வெள்ளிடைமலை. இதுபோன்ற கதைப் பாடல்கள் பல இன்னும் அச்சாகாத நிலையில் இருக்கக்கூடும், இவற்றை நன்கு போற்றிப் பாதுகாத்து அச்சு வடிவில் கொண்டுவருவது வளரும் தமிழுக்குச் செய்கின்ற தலையாயபணியாகக் கொள்ளுவது நம்முடைய கடமையாகும்.

## குறிப்புகள்

1 கோ. கேசவன், கதைப்பாடல்களும் சமூகமும், பக் 45

2 ,, பக் 46—48

3 நா. வானமாமலை, வீரபாண்டியக்கட்டபொம்மு கதைப் பாடல், பக். 17-19

4 ,, ,, பக். 18

5 ,, ,, பக். 18

6 M. Arunachalam, Ballad Poetry p. 99

7 1979-ஆம் ஆண்டில் வெளிவந்த பதிப்பு; இந்நூலில் முன்பதிப்பு விவரங்கள் குறிக்கப்பெறவில்லை

8 காண்க — பின்னிணைப்பு 1

9 கட்டுரையின் இடையேவரும் அடைப்புக்குறியில் அமைந்துள்ள எண்கள் அல்லிகதையின் தொடர்வரி எண்களாகும்

## பின்னிணைப்பு 1: வேறுபாடுகள்

| அல்லி அரசாணி மாலை | அல்லி கதை |
|---|---|
| காப்பு, சரஸ்வதி தோத்திரம் | விநாயகர் துதி, நூல் |
| நாட்டுச் சிறப்பு, பாண்டியன் பெருமை | அருச்சுனன் பெருமை |
| சோழராஜன் வறுமை அல்லது சிறுமை | அருச்சுனன் நாககன்னி இன்ப வாழ்வு |
| சோழராஜன் பாண்டியனைக் காண்கிறது | பிராமணர்கள் வருகை, வரவேற்பு, |
| சோழராஜன் பாண்டியனிடத்தில் சொல்வது | மதுரையின் பெருமையினைக் கூறல் |
| பாண்டியனும் சோழனும் சொக்கரிடம் வந்து பணிவது, | அல்லியின் அழகு வருணனை |
| சொக்கர் சொல்வது | அல்லியின் அழகைக் கேட்டதும் அருச்சுனன் மயக்கமுறல் |
| இந்திர லோகங் காண்கிறது, இந்திரனைக் கண்டது | நாககன்னியிடம் மதுரை செல்வதாகக்கூறல் |
| இந்திரன் கெண்டி மாலை சூடினது | மதுரையின் அழகை வருணித்தல் |
| இந்திரன் கோபித்துச் சோழன் பெருமை படவும் பாண்டியன் சிறுமை படவும் செய்தது | பல்வேறு பொருள்கள் வாங்கி வருவதாகக்கூறல் |
| சோழராசன் பெருமைப்பட்டது | நாககன்னி மறுமொழி |
| பாண்டியன் வறுமையடைந்தது | நாககன்னி புலம்பல், |
| பாண்டியன் வைகையாற்றில் அணைகட்டியது | அருச்சுனனின் மறுமொழி |
| வாணிச்சி பிட்டுக்குச் சொக்கர் மண் சுமப்பது | கண்ணனின் உதவி |
| சொக்கர் பிரம்பாலடிபட்டது | கண்ணன் நாககன்னிக்கு அறிவுரை கூறல் |
| சொக்கரும் மீனாட்சியும் கானகம் வந்தது | நாககன்னி துன்பமீதூர விடை கொடுத்தல் |
| நீர்க்காக்கையைக் கண்டது | அரவான் வருகை |
| சொக்கர் நீர்க்காக்கைக்கு வரங் கொடுத்தது | அரவானிடம் பொருள்கள் வாங்கி வருவதாகக்கூறல் |
| நீர்க் காக்கை பெண்ணாகிப் பாண்டியனை அடுத்தது | துவாரகாபுரி நோக்கிச் செல்லல் |
| நீர்க்காக்கை நீன்முகனைப் பெற்றது | அருச்சுனனைப் பெண்கள் வரவேற்றல் |
| நீன்முகனுக்குப் பட்டங்கட்டி | மகளிர் நிலை |
| பாண்டியர்கள் தவசுக்குப் போனது | சுபத்திரையிடம் தாதி சென்றுரைத்தல் |
| | அருச்சுனரை வரவேற்றல் |
| | அருச்சுனனின் துன்பம், சுபத்திரை வேண்டுதல் |
| | பெருமாளின் வருணனை |
| | கண்ணன்-சுபத்திரை உரையாடல் |
| | அல்லியின்மேல் அருச்சுனன் கொண்டகாதல் |

**அல்லி அரசாணி மாலை**

பாண்டியற்கு ஈசுவரி புத்திரவரங் கொடுத்தது
நீன்முகராஜனுக்குப் பாண்டியர் பகுதி கட்டத் தீர்மானித்தது
அல்லியம்மாள் மல்லர்களை அவமானஞ் செய்தனுப்பியது
நீன்முகராஜனுக்குத் தூதர்கள் சேதி சொல்லுதல்
நீன்முகராஜன் அல்லியின் பேரில் படையெடுத்தது
அல்லியம்மாள் சொக்கரையும் அம்மனையும் தொழுதுவரம் பெற்றது
அல்லியம்மாள் நீன்முகனைச் சங்கரித்தது
அல்லியம்மாள் மதுரைக்குவந்து பட்டங்கட்டிக்கொண்டது
மாயனும் அர்ச்சுனனும் தீர்த்த யாத்திரை போகிறது
அருச்சுனன் அல்லியின் மேலாசை கொண்டது
அல்லியரசாணி வேட்டைக்கு வருகிறது
அல்லிக்கு அருச்சுனன் அம்பு பொறுக்கித்தருவது
அருச்சுனன் அல்லியர்க்குக் கதை சொல்லல்
அருச்சுனன் பேரில் அல்லி யரசாணி கோபித்தது
கிருஷ்ணபகவான் படமெழுதிக் குளத்தோரம் மரத்தில் கட்டிவிட்டு அருச்சுனனைத் தண்ணீர் கொண்டுவரச்சொன்னது
அருச்சுனன் திருக்குளத்தில் மருந்திழைத்தது
அருச்சுனனுக்கு அல்லியரசாணி முதலாவது ஆக்கினையிட்டது
அருச்சுனனுக்கு அல்லி இரண்டாவது ஆக்கினையிட்டது
கிருஷ்ணமூர்த்தி பெருச்சாளி ரூபங் கொண்டு வந்து ஏணியைத் தள்ளி விட்டது

**அல்லி கதை**

கண்ணன் அல்லியிடம் போகா வேண்டாமெனல்
சுபத்திரை தன் அண்ணனையும் உடன்போகக் சொல்லுதல்
அருச்சுனனும் கண்ணனும் புறப்பட்டுச்செல்லல்
சோலை, வயல்; துறைச்சிறப்பு மதுரை மகளிர்நிலை, வீதி வருணனை
அர்ச்சுனன் கண்ணன் அலங்காரம் தூண்வருணனை, இசைக் கருவிகள் முழக்கம்
அருச்சுனன் கண்ணன் சொக்கரை வழிபடல்
அல்லி வருகை, அல்லி அலங்காரம்
அல்லி கண்ணனை வரவேற்றல்
விசயனிடம் அல்லிபற்றிக் கூறியதும் அவன் மயங்குதல்
அல்லியழகினைக்கண்டு புலம்புதல்
கண்ணன் அருச்சுனனைப் பாம்பாக மாற்றுதல்
பாம்புப்பிடரானாகக் கண்ணன் தோற்றம்
முகுந்தன் அருச்சுனனைச்சுமத்தல்
பாம்பாட்டியின் பெருமை–மகுடி வாசித்தல்
பாம்பின் அழகிய ஆட்டம் பாம்பை அணிகலன்களுக்கு மாற்றாக அல்லியின் தோழியரிடம் தருதல் பெண்கள் ஏமாற்றம், அல்லியிடம் கூறுதல்
அல்லி அழைத்துவரச் செய்தல்
மாயவரின் கிழத்தோற்றம், அல்லி அரவத்தை ஆடுமாறு வேண்டுதல்
பாம்பாயிருந்த தனஞ்செயன் அல்லியின் மடிமீது படுத்து ஆடுதல்
அல்லியின் மயக்கம்
கண்ணன் பாம்பாகிய அருச்சுனனைத்திரும்பி வருமாறு அழைத்தல், அவன் மறுத்தல்

### அல்லி அரசாணி மாலை

அருச்சுனனை மூன்றாம்தரம் காளிக்குப் பலியிடச் செய்தது

அருச்சுனனுக்கு நான்காவது தண்டனையிட்டது

கிருஷ்ணபகவான் பெண் ரூபங் கொண்டு அழைப்பது

அருச்சுனன் குறத்தியிடஞ் சென்று தான் கொடுத்ததை வாங்கினது

அருச்சுனன் ஆண்டிவேடங் கொண்டு மடலூர்ந்தது

பவள சேனை பாண்டியர் களடைந்த துன்பத்தை அல்லி யரசாணிக்குக் கதையாகக் கூறியது

ஆண்டியைச் சர்ப்பங்களாற் கொல்ல நினைத்தது

யானையினால் ஆண்டியைக் கொல்ல வகை தேடினது

கிருஷ்ணபகவான் பாம்புப் பிடாரனைப் போலவும் அருச்சுனன் பாம்பாகவும் வடிவுகொண்டு வந்தது

பாற் குடங்களனைத்திலுமுள்ள பாலையெல்லாம் பாம்பு உண்டது

அல்லியரசாணி பாம்புப்பிடாரனை வரவழைக்கச் சொன்னது

அருச்சுனன் பாம்புருக் கொண்டு அல்லியரசாணியை மருவினது

கிருஷ்ணபகவான் மூதேவியை அழைத்து அல்லியின்மேல் பிரவேசிக்கச் செய்தது

கிருஷ்ணபகவான் அருச்சுனனாகிய பாம்பை எடுத்துப் போனது

கிருஷ்ணபகவான் மறுபடியும் மிருகங்களை உண்டுபண்ணியது

அல்லியம்மாள் மறுபடியும் இரண்டாம் தடவை வேட்டைக்குப் போனது

அருச்சுனன் காசிப்பிராமணனாய் வந்து அல்லிக்குக் காசி தீர்த்தம் வார்த்தது

### அல்லி கதை

கண்ணனின் கோபம், அருச்சுனன் கண்ணனிடம் மன்னிப்பு வேண்டல்

அல்லியின் மேனிவாசம் தன்மீது வீசுதல் எனல்

அல்லியினை மணம் முடித்து வைக்க வேண்டல்

அல்லி பாம்பாட்டியை மகிழ்வித்தல்

பன்றி வேட்டைக்கு அல்லியின் புறப்பாடு

அருச்சுனன் தானும் செல்வதாகக் கூறல்

விசயன் பிராமணர் வடிவம் கொள்ளல்

அல்லி பிராமணவடிவம் பூண்ட விசயனைக் கண்டு அழகில் மயங்கல்

வேட்டைக்குச் சென்றுவந்தபின் தானம் தருவதாகக்கூறல்

அருச்சுனனும் வேட்டைக்குச் செல்லுதல்

அல்லி அவனைப்படைத்தளபதி யாக்குதல்

பன்றியின் பெருமை, ஆற்றல்

பெண்பன்றியின் கனா, அறிவுரை

பன்றியினை அல்லி வீழ்த்துதல்

மயங்கி வீழ்ந்த விசயனை அல்லி உபசாரித்தல்

அருச்சுனனின் தந்திரம் அல்லியிடம் ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுதல்

தனஞ்செயன் நாராயணனிடம் மணமுடித்துவைக்க வேண்டல்

ஆயனின் மறுமொழி, ஆறுதல்

அருச்சுனன் அல்லியின்படம் எழுதுதல், இந்திராணி வாழ்த்து

இந்திராணி பொன்தகடு, நாராசம் தருதல்

அல்லியின் பட அழகைப் பார்த்துப் பிதற்றுதல்

## அல்லி அரசாணி மாலை

கிருஷ்ணபகவானும் அருச்சுனனும் மாறுவேடம் கொண்டு தண்ணீர்ப் பந்தல் வைத்தது

அருச்சுனன் அல்லியம்மாளைச் சூதாகத் தாலிகட்டி விருதறுத்துப் போனது

கிருஷ்ணபகவானும் அருச்சுனனும் தருமாபுரம் வந்து சேர்ந்தது

அல்லியரசாணி மங்கிலியத்தைக் கண்டு பரதவிக்கிறது

பாண்டியர்கள் அல்லியரசாணிக்கு மனந்தேறுதல் சொல்லுதல்

இராஜாக்களுக்குத் திருமுகமெழுதி அனுப்புதல்

கிருஷ்ணபகவானும் வீமராசனும் மதுரைக்குப் போகுதல்

வீமராஜன் நெய்யைக் குடித்து விட்டுக் கொப்பரையை உருட்டி விட்டது

அல்லியரசாணி பஞ்சபாண்டவரோடு சண்டைக்கு வருகிறது

பாண்டவர் அல்லியரசாணியோடு சண்டை செய்யவருதல்

கிருஷ்ணபகவான் யுத்தம்

சகாதேவன் யுத்தம்

சகாதேவன் அல்லியைப் புலிக் கூண்டு செய்து அதில்பிடித்தது

துரோபதை முதலானவர்கள் அல்லியரசாணியை மாலையிடச் செய்தது

கலியாண ஓலை எழுதி இராசராசருக்கு அனுப்புதல்

அல்லியரசாணியை அருச்சுனன் மாலையிடுதல்

பாண்டியரும் அல்லியும் விடை பெற்று மதுரைக்கு வந்தது

அல்லியரசாணி பாலகனைப் பெற்றது

## அல்லி கதை

படத்தோடு சோர்ந்து வீழ்தல்

தேவேந்திரன் வச்சிரத்தேர் அளித்தல்

தென்மதுரையில் தேரூர்ந்துவரல்

அல்லி பவளசேனையை அனுப்பிப் பார்த்துவரச் செய்தல்

பவளசேனையோடு போர்

மாயனின் தந்திரங்கள்

படைகள் விடுத்தவரையே தாக்குதல்

அல்லி நாகங்களை அருச்சுனன் மீது ஏவுதல் அவை வணங்கிச் செல்லுதல்

சூரியனை அனுப்ப அவன் வாழ்த்துதல்

மல்லர்களை அவர்கள் கொண்டு வந்த இரும்புலக்கைகளே தாக்குதல்

வெள்ளானையை ஏவ, அது அருச்சுனனை ஏற்றிவந்து அல்லியருகே அமர்த்துதல்

ஆதிநாராயணன் அருச்சுனனிடம் அல்லிக்குப் பூவினைத்தருமாறு கூறல

பூவினை முகர்ந்ததும் அல்லிக்கு விரக வேதனை ஏற்படுதல்

மாயன் அல்லிக்குச் சொப்பனம் உண்டாக்குதல்

அருச்சுனனின் மோகினி வேடம்

சிரிப்பால் அல்லியை மயக்குதல்

அல்லியின் கனா, தோழியின் விளக்கம்

சோபன ஓலைவிடல்

துரியோதனன் வருதல், அல்லியின் சீற்றம்

அல்லியின் வெற்றி

அல்லி அருச்சுனருக்கு மாலையிடல்

மங்கலநாண் சூட்டல்

இல்வாழ்க்கை வாழ்த்து.

## பின்னிணைப்பு : 2

**நீர்மகனைக் கொன்ற வரலாறு (வரி 45)** பாண்டிய நாட்டில் வெப்பத்தைத்தணிக்கும் பொருட்டு மரத்தடியில் தங்கியிருந்த போது சிவபெருமானுக்கும் சக்திக்கும் நீர்க்காக்கை குளிர்ந்த நீரைப்பொழிந்து மகிழ்விக்கச்செய்தது. கடவுளரும் மகிழ்ந்து வரம் அளிக்க நீர்க்காக்கை பெண்ணாகமாறிப் பாண்டிய மன்னனிடம் வாழ்ந்து ஒரு மகவைப் பெற்றது. அம்மகவே நீள்முகன் பின்னர்ப் பாண்டிய நாட்டை ஆண்டவன். அவன் கொடுமையினைப் பொறாது பிற்காலத்தே அல்லி அவன்மேல் போர்தொடுத்துக் கொன்றாள்.

## பயன்பட்ட நூல்கள்


**அல்லியரசாணி மாலை** ந. இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ், சென்னை, 1979.

கேசவன் கோ. **கதைப்பாடல்களும் சமூகமும்**, தோழமை வெளியீடு, கும்பகோணம், 1985

சுப்பிரமணியின் & பகவதி கே. (ப-ர்) **தமிழ் இலக்கியக் கொள்கை : 8** "அ. நா. பெருமாள்: கதைப்பாடல்கள்", உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983

வானமாமலை நா. **வீரப்பாண்டியக் கட்டபொம்மு கதைப்பாடல்**, மதுரைப் பல்கலைக் கழகம், 1976,

Arnuchalam, M. **BALLAD POETRY** Gandhi Vidyalayam, Tiruchitrambalam, 1976.

# அல்லி கதை

## விநாயகர் துதி

அல்லி யரசானை அர்ச்சுனர்க்கு மாலையிடும்
நல்லதோர் வாசகத்தை நான்பாட—வல்லமைசேர்
ஐந்துகர முடைய ஆனைமுக னைப்பணிந்து
பஞ்சவற்கு மாலைதனைப் பாடு.

வெள்ளை வாரணப்
பிள்ளை யார்பதம்
விள்ளு வார்மனக்
கள்ள மாறுமே
அத்தி முகவனை
நித்த மலர்கொடு
துத்தி யங்கள்செய்
வித்தை வருகுமே

## நூல்

திருமாலும் நான்முகனுந் தேடுதற்குத் தானரிய
மருமேவு கொன்றை மகாதேவர் தன்னருளால்
வேழ முகத்து விநாயகனே முன்னடவாய்
காளையெனும் பார்த்தன் கனிவாகக் காதல்கொண்டு
அல்லிதனை மாலையிட்ட தன்புடனே பாடுகிறேன் 5
வல்லமைசே ரைந்துகர வாரணமே காத்தருள்வாய்

### அருச்சுனன் பெருமை

தாரார் தனஞ்செயனார் தர்மருக்கு நேரிளையோன்
போரானை வென்ற போர்வீம னுக்கிளையோன்
ஆளா லழகு மன்னன் அர்ச்சுன சுவாமியவன்
தோளா லழகன் தொய்வில்லாப் புகழ்வீரன் 10

---

1 'திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை' எனத் திருவாசகத்தில் (திருத்தெள்ளேணம். 1) வருவதும் ஒப்புநோக்கத்தக்கது.

10:3 தோர்வில்லா

மெட்டான வில்லி விசையன் பெருமாள்காண்
வட்டாரஞ் சுற்றும் மன்மத வுல்லாசன்
ஒப்பில்லா மன்னன் உசந்த திருவழகன்
செப்பமுடன் மங்கையர்க்குச் சீரான மன்மதன்காண்
தோறா வழகி துரோபதைக்கு நாயகனார் 15
வீறான பேரழகி மின்னொளியாள் தன்கணவன்
சொர்ணப் புயமாது சுபத்திரையாள் தன்கணவன்
மின்னும் பிரகாசி விளக்கொளியாள் தன்கணவன்
ராசாதி ராசனார் பெண்க ளொருகோடி
தேசாதி தேசத்தில் செட்டிப்பெண்க ளொருகோடி 20
குருகுலத்துப் பெண்கள் கோடிமகா கோடியுண்டு

## அருச்சுனன்-நாககன்னி இன்பவாழ்வு

நரகதிரும் பூவுலகில் நாகராசன் றன்மகளாம்
நாககன்னி யென்னுமந்த நாயகியை மணம்புணர்ந்து
இராகவர் பதம்புரியநல் லராவானைப் பெற்றெடுத்து
மகிழ்ச்சி யுடனே வாழ்வு பிரியாமல் 25
சுகிட்சி யதாகச் சுகித்து இருக்கையிலே
மன்மதனும் ரதியும்போல் வாழ்ந்து இருக்கையிலே
அன்புடைய வில்விசையன் அம்பலத்தில் தானிருந்து
நீதியுடன் செங்கோல் நிச்சயமாய்த் தவறாமல்
போதிமையா யெங்கும் பிழைகள் வராதபடி 30
தன்மர் செலுத்தத் தம்பியார் வீற்றிருந்தார்

## பிராமணர்கள் வருகை

தென்மதுரை தனிலிருந்து தீர்க்கமுள்ள பிராமணர்கள்
தீர்த்தக் கரைபோகச் சிவபூசை தானெடுத்து
பார்த்தனையும் அம்பலத்தில் பண்பாகச் சென்றுகண்டு
ஆசீர் வாதமென்று அட்சதையுந் தான்கொடுத்து 35
பூசிதமாய் அருச்சுனரைப் போற்றிசெய்து நின்றார்கள்

## அருச்சுனனின் வரவேற்பு

குங்குமப் புயமார்பன் குளிர்ந்ததொரு முகமாய்
இங்கிதமுட னேயிருக்க இடங் கொடுத்து
எவ்வூர் எப்பதிகாண் எனக்கறியச் சொல்லுமென்றார்

---

12:2 சுத்தும்
13:3 உசந்த—உயர்ந்த
26:1 சுகிட்சியதாக—சுகமான வாழ்வுடையதாக
31:1 தன்மர்—தருமர்
36:1 பூசிதமாய்—வழிபாடுசெய்து

## மதுரையின் பெருமையினைக் கூறல்

அவ்வார்த்தை கேட்டு அன்புடைய வேதியர்கள் 40
மீன வளநாடு மேலான தென்மதுரை
மானமுள பாண்டியர்கள் வாகான நன்னாடு
அல்லி மலரில் அவதரித்த நன்னாடு
மெல்லியலாள் தானிருக்கும் வீரமுள்ளாள் தன்னாடு
நீர்மகனைக் கொன்ற நீதியுள்ள நன்னாடு 45
பேர்புகழும் காசிக்குப் போகிறோங்காண் காவலரே
அந்த மொழிகேட்டு அருச்சுனனா ரென்சொல்வார்
சிந்தைதெளி வேதியரே திரவியங்க ளேதேதும்
தாரேனா னுங்களுக்குத் தயவும்படி யாகஅவள்
சீரழகும் பாவனையுஞ் சேதிபடச் சொல்லுமென்றார்-அப்பச் 50

## அல்லியின் அழகு வருணனை

செப்புவார் அர்ச்சுனர்க்குச் செயமாக வேதியர்கள்—அவள்
செப்புச் சிலையழகி சிந்தூரப் பொட்டழகி—அவள்
கூடு புருவமுங் கொன்னைக்காய் போல்தலையும்—அவள்
ஆடு புருவமும் அம்மானைக் கண்மலரும்—அவள்
காமன் சிலைபோலே கன்னியிடமேல் புருவம்—அவள் 55
தனமுமிளந் தேங்காய் போல்தானிரண்டு முழியழகும்-அவள்
அழுத்தமுள்ள பல்லொளியும் அவள்முகமோ சோதிமின்னனார்
கழுத்தழகும் பாவனையுங் கன்னிக் கமுகதுபோல்
காரைகொள்ளுங் கழுத்தும் கதிரவன்போ லேயொளியும்
சூரைகொள்ளுங் பொற்கடையந் தோளழகும் பாவனையும் 60
தங்கக் குடம்போல் கவித்தனமார் பிரண்டும்
மொங்கை முதாரி முழங்கைத் திருவழகும்

---

45:5 நீர்மகனைக் கொன்ற வரலாறு: காண்க—பின்னிணைப்பு

50:2 பாவனை—பண்பு—இயல்பு

5 அப்ப– 'அப்பொழுது' என்னும் சொல்லின் சிதைவு; கொச்சைமொழி

52: 'போல்த்தலை, மேல்ப்புருவம்' என ஒற்று மிகுந்தே இச்சுவடியில் பல் வேறிடங்களில் காணப்படுகின்றன.

55:3 கன்னியிடமேல்புருவம்—கன்னியினுடைய மேல்புருவம்

56: 'தாமுமிளந்' எனச்சுவடியில் உள்ளது

59:1 காரை—சுண்ணச்சாந்து

60 சூரை—மீன் வகை
கடையம்—கடகம்; தோளணி

62 மொங்கை—முன்கை
முதாரி—முன்கை வளையல்

ஆலிலை போலே அமைந்த திருவயிறும்
வால வயதும் வர்ணக்கொடி போலிடையும்
செவ்வாழைத் தண்டதுபோல் சேர்ந்த யிருதுடையும் 65
கவ்விரால் போலே கணைக்கால் திருவழகும்
சீரான புத்தகம்போல் சேர்ந்த திருவடியும்
பாரான விரல்கள்பத்தும் பசும்பொன் கதிரவன்போல்
ஆதித்த ராயிரம்போல அழகொளிரு பெண்பெருமாள்
மாது பொருஅல்லி மணிமகுடம் தான்சூடி 70
அரசு முறைசெலுத்தும் அதர்சூரப் பெண்பெருமாள்
சருவா பரணமின்னத் தகதகென்று சோதிமின்ன
முத்தா பரணமின்ன மோகன மாலைமின்ன
அஸ்தக் கடையமின்ன அணையாழி சோதிமின்ன
காலிற் சிலம்போசை கைவளைக ளோலமிட 75
மூவுலகிற் பெண்கள் அவள் முகத்தழகுக்குக் கொவ்வாது
ஒருபிடிக்கு ளடங்குமிடை உயிர்கொடுக்குங் கரியகுழல்
ஒருவிரலுக்குள் மறையுமுகம் உலகேழுஞ் சோதிமின்ன
கோதுபடாப் பெண்பெருமாள் கொலுவி லலங்காரி
வாதுசெய்தார் முடியறுக்கும் வனசவுக்குந் தாப்பணியும் 80
எதிர்த்தாரைச் சங்கரிக்கும் எமன்கொடுத்த மந்திரவாள்
பகைத்தாரைச் சங்கரிக்கும் பரன்கொடுத்த பாசுபதம்
குன்றுகளைத் தான்துளைக்கும் குமரர்தந்த வெற்றியின்வேல்
தண்டெதிர்க்கும் வில்லுடையாள் தக்கமிடும் சக்கரத்தாள்
மதுரையம்பத் தாறுகாத மரசாளும் நாயகியாள் 85
பதினெட்டுப் பாசை பண்பான ராகமுடன்
சற்பன்ன பாசை சதுர்வேத சாஸ்த்திரங்கள்
விற்பன்ன மான விபரீதப் பெண்பெருமாள்
இந்திர சாலம் இசையான கோகரணம்
மந்திர சாலம் மதிமயக்க வித்தைகளும் 90
எழுத வரிதான எல்கையாள் தன்வடிவை
பழுதில்லா வேதியர்கள் பத்தினியா ளென்றுரைக்க

---

வாலவயது—இளமை
'தலைப்புல்லின வால் வெண்டோட்டு'—சிலப். 16.35

66 கவ்விரால்—மீன்வகை

70 மாதுபொரு அல்லி—வீரப்பெண்ணான அல்லி

71 அதர்சூரப்பெண்—திறமைமிக்க பெண்

74 அஸ்தக்கடையம்—கைக்கடகம், அணி
அணையாழி—மோதிரம்

79 கோது—குற்றம்

80 சவுக்கு, தாப்பணி—சாட்டை

84 தண்டு—படை, சேனை

91 எழுத வரிதான எல்கையாள் தன்வடிவை—எழுத முடியாத அளவிற்கு மிகுந்த அழகு பெற்றுத்திகழும் பெருமையினை உடையவள்

## அல்லியின் அழகைக்கேட்டதும் அருச்சுனன் மயக்கமுறல்

அல்லி அழகையெல்லாம் அர்ச்சுனனார் தான்கேட்டு
சொல்ல மதிமயங்கிச் சுந்தரப் பூமுடியான்
மாலைபோல் வாடி மயங்கியே போய்விழுந்தான் 95
கோலமுள்ள வெண்கவரி வீசினார் கொற்றவற்கு
மாமயக்கம் தெளிந்து மதயானை போலெழுந்து
காமக்குரோதங் கண்ணு ரெண்டும் பஞ்சடைந்து
அல்லி யெங்கேயென்று அறிவுகளும் மெய்மறந்து
வில்லி யருச்சுனனார் வெகுவாய் பிதற்றலுற்றார் 100
சற்றே யறிவுவந்து தன்னரமனையி லுள்புகுந்து

## நாககன்னியிடம் மதுரைசெல்வதாகக்கூறல்

நற்றா மரைப்புயத்தாள் நாககன்னி கிட்டநின்று
கொம்பே ரிடையாளே கூறுதற்கு அஞ்சுவனான்
அம்பாய மொழியாளே ஆனாலுங் கூறுகிறேன்

## மதுரையின் அழகை வருணித்தல்

மதுரை நதியாம் மகாதீர்த்தப் பொய்கைகளாம் 105
சதுராக நால்திசைக்கும் தா......கேள் கோபுரமாம்
மிக்கான நால்திசையும் வெண்முத்தால் கோபுரமாம்
சொக்கருட சன்னதியாஞ் சுடரொளிபோ லேயொளியாம்
அங்கயற்கண் சன்னதியாம் அபரஞ்சிக் கோபுரமாம்
பங்கயம்சேர் மீனாட்சி பார்ப்பதியாள் சன்னதியாம் 110
தீர்த்த மலையாந் திருவானைக் காவலராம்
சேர்த்த விடமெங்குஞ் செங்கழுநீ ரோடைகளாம்
பார்த்த விடமெங்கும் பசும்பொன்னின் மேடைகளாம்
தீர்த்தங்க ளாடித் திருப்பதியைத் தெண்டனிட்டு
மகா தீர்த்தமாடி மதுரை நதிமுழுகி 115
வகாச் சீரமம்நாடி வைகையிலே ஸ்நானம்பண்ணி
அங்கயற்கண் ணம்மனையும் ஆலவாய்ச் சொக்கரையும்
கண்குளிரச் சேவித்துக் காரிழையே நான்வாரேன்

## பல்வேறு பொருள்கள் வாங்கிவருவதாகக்கூறல்

உனக்கான சேலைகளும் உசத்திமுத்துத் தாவடமும்

---

102 கிட்டநின்று—கிட்டே நின்று—பேச்சுமொழி

103 கொம்பேரிடை—கொம்பு போன்ற இடை
கொம்பனார்—கொம்பு போல் ஒல்குந்தன்மையுள்ள பெண்டிர்
'கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே' (திவ். திருப்பா. 17)

108 சொக்கருட—சொக்கருடைய

119 உசத்தி முத்து—உயர்ந்த முத்து
தாவடம்—தாழ்வடம், மாலை

தனக்கான ஆபரணந் தருமோ கனமாலை 120
ஆணிப் பவழம் அபரஞ்சிச் சேலைகளும்
மாணிக்க மாலைகளும் வச்சிரமுத்துத் தாவடமும்
தம்பிக்கி யான் தங்கமுத்துத் தாவடமும்
கம்பிமுத்துக் கடுக்கண் கதிருலகேழ் சோதிமின்ன
இங்கில்லா வஸ்து எடுத்து உள்ளதெல்லாம் 125
மங்கையே வாங்கிவர மாதழம்பூ மேனியரே
அட்சதையும் வெள்ளிலையும் அடைக்காயும் நீர்கொடுத்து
உட்சிதமா யென்னையும்நீர் உகந்து அனுப்புமென்றார்

## நாககன்னி மறுமொழி

அதுகேட்டு நாககன்னி அன்பாக யேதுரைப்பாள்
மதுரையில் தீர்த்தம் மகாதீர்த்தம் நானறிவேன் 130
அல்லியிட தீர்த்தம் அழகுதீர்த்த மென்று சொல்வார்
கொல்லி மதுரையிலே குமரிதீர்த்த மென்றுரைப்பார்
சீரழகும் பாவனையும்-அவள்-சேவுகமுங் தெள்ளிமையும்
பாராளுஞ் சேவுகம்-அவள்-பாவனையு மெத்தவுண்டு
அல்லி மலரில் அவதரித்த பெண்பெருமாள் 135
மெல்லியர்க்குச் சொக்கரருள் மிகுந்த மணிமுடியாள்
அங்கயற்கண் ணம்மன் அருள்பெற்ற பெண்மயிலாள்
தங்கப்பூ மேனி சமத்தியென்று கேட்டிருப்பேன்
விற்பன்ன மானபரு வீரியென்று கேட்டிருப்பேன்
செப்பமுள்ள சூரியன்போல் சிறந்த வலுக்காரி 140
ஏழு பிராயத்தி லெதுத்ததொரு நீர்மகன்
கொளுபடக் கொன்றுவிட்ட குலவீர லெட்சுமியாள்
ஆதித்தன் தன்னொளிபோல் அழகுள்ள பெண்கொடியாள்

---

121 ஆணிப்பவழம்—உயர்ந்த பவளம்
அபரஞ்சி—பொன்

125 வஸ்து—பொருள்

127 அட்சதை—மங்கல அரிசி
வெள்ளிலை—வெற்றிலை
அடைக்காய்—பாக்கு
'வெள்ளிலை யடைக்காய் விரும்பி' (தாயு. சச்சி. 11)

128 உட்சிதம்—உசிதம்

133 பாவினை—பாவனை
சேவுகம்—சேவகம், தொண்டு.
தெள்ளிமை—தெளிவு

138 சமத்தி—திறமைசாலி

139 விற்பன்னம்—சாமர்த்தியம், திறமை
பருவீரி—மிகுந்த வீரமுள்ளவள்

141 எதுத்த—எதிர்த்த

சேதிதனைக் கண்டுஇப்பத் தீர்த்தக் கரைபோறீர்
அங்கவளைக் கண்டாலே அங்குறைவீர் மன்னாநீர் 145
திங்கள் முடியாரே திலும்பிவரப் போறதில்லை
ஆசையைப் பூட்டி ஆனஉயிர் கொள்ளைகொண்டீர்

## நாககன்னியின் புலம்பல்

நேசமுடன் என்னைவிட்டு நீதியுடன் போறேனென்றீர்
பொய்க்கூட்டை விட்டுப் போனீரே யாமாகில்
கையில்வளை சோர்ந்துவிடுங் கலையிடையில் நில்லாது 150
உண்ணே னுடுக்கேன் ஒருபொழுதுங் கண்ணுறங்கேன்
கண்ணிமையில் சீர்வடிவைக் கட்டிவைத்துப் போறீரோ
என்னிலும் பார்க்கஅவள் இதமோ கனரதியோ
பெண்ணைவிட்டுப் பெண்ணைநத்திப் போறீர் பெருமாளே
பெண்பாவம் பொல்லாது பின்தொடருங் கண்டீரே. 155
பெண்முகந்தான் பாராட்டால் பிள்ளைமுகம் பாராரோ
பிள்ளையுமைக் காணாட்டால் பித்தெடுத்து யேங்கிவிடும்.
கள்ள மனதறியேன் கைகொடுத்தே னும்மைநம்பி
பொய்யுரைத்தீர் தீர்த்தமென்று போகவிடேன் மன்னவரே
மெய்யாக என்னுயிரை விட்டுவிடு வேனென்று 160
கண்ணைப் பிசைந்தழுது கடைக்கண்ணில் முத்துதிர்த்தாள்

## அருச்சுனனின் மறுமொழி

சொன்னே னறியாமல் தோகையரே நீர்பொறுப்பீர்
மதவாள் வீமன்மேல் மனதா யிருக்குதுகாண்
துவராகா புரிக்குநான் தோகையரே போய்வாரேன்.

## கண்ணனின் உதவி

அவருரைக்க மெய்த்தோழன் ஆதிநா ராயணனார் 165
தவநெறியை நீங்காத தனஞ் செயற்கு உதவிசெய்ய
பண்பைவர் சகாயர் பாரளந்த இரகுராமர்
பின்பா யருச்சுனருக்குப் பிரியா விடையாக
பச்சை நிறமொளித்துப் பாங்கான தோழனைப்போல்
இச்சையுடன் வடிவும் யாவர்க்குந் தெரியாமல் 170

---

**144** இப்ப—இப்பொழுது

**146** திலும்பி—திரும்பி, போறதில்லை—போவதில்லை; பேச்சுமொழி

**153** ‘என்னிலும் பார்க்க அவள் இதமோ கனரதியோ’ என்பதை ‘என்னிலும் பார்க்க அவள் இதமோகனரதியோ’ என்று பிரித்தும் நயம் காணலாம்.

**154** நத்தி—விரும்பி

**156** பாராட்டால்—பார்க்காவிட்டால்
காணாட்டால்—காணாவிட்டால்

உபாயமுடன் முப்பிறப்பும் உகந்திருக்கும் மாயவரும்
அபாயம் வராதபடி அர்ச்சுனரைப் பிரியாதார்
பாகமே வந்துநின்று பவழநிறத் தோழன்

## கண்ணன் நாககன்னிக்கு அறிவுரை கூறல்

நாககன்னி தங்காநீ நல்லபுத்தி நீயுரைத்தாய்
ஆனை மதவானை அறியா மதமெடுத்தால் 175
ஆனைக்குக் கோமணந்தான் கட்டுவாரோ ஆரணங்கே
காசினியில் மன்னவர்கள் காரியமாய்ப் போரமென்றால்
வாசமாய்ப்போய் வாருமென்று வாழ்த்தி யனுப்பாமல்
பெண்கள் மரிப்பரோ பிராணஅபா யம்வந்தால்
உன்சேத மல்லவோ உத்தமியே நாககன்னி 180
பதிங்காத மாகிலும் பத்தாவிருந்து தென்றால்
இதமர்கப் பொட்டுமிட்டு எற்கையாய் மையெழுதி
தாலிகட்டித் தலைமுடித்துச் சம்பிரமாய்ச் சேலைகட்டி
வாலிபத்துப் பெண்களுடன் வகையுடனே வாழ்ந்திருப்பாய்
அடைக்காயும் வெள்ளிலையும் அட்சதையும் நீகொடுத்து 185
தடுக்காமல் நீயுந் தயவா யனுப்பிவிடு

## நாககன்னி துன்பமீதூர விடைகொடுத்தல்

தோழ நிலையுரைக்கச் சொல்மறுக்க மாட்டாமல்
தாழ யெழுந்திருந்து தனபாரம் ரெண்டும்விம்ம
கண்ணீர் ததும்பக் கடைக்கண்ணில் முத்துதிர
வண்ணமண் டபஞ்சென்று மடப்பள்ளி தாள்திறந்து 190
அடைக்காயும் வெள்ளிலையும் அட்சதையுந் தானெடுத்துக்
கொடுக்க மனதாகிக் கொண்டுவந்தா ளுத்தமியாள்
அதிககண்ணீர் முத்துதிர அருச்சுனனார் கிட்டவந்து
மதுரைக்குப் போனாலும் மங்கையரைக் கொண்டாலும்
ஆலையங்கள் தீர்த்தக்கரை அடைவாகப் போனாலும் 195
மாலை மயங்காமல்-என்-மங்கிலியங் குன்றாமல்
வலிய யெனைத்தேடி வரவேணு மென்றுரைத்து
நிலையாகவே வாழ்த்தி நிச்சயமாய் விடைகொடுத்தாள்
பொற்கொடியாள் வார்த்தை பொய்யொரு நாள்வாராது
சிக்கென்ற சேலைச்சிறகைச் சிக்கெனவே தான்முடிந்து 200

---

174 தங்கா—தங்காய்
177 போரமென்றால்—போகிறோமென்றால்
181 பதிங்காதம்—பத்துக்காதம்
பத்தா—கணவன்
189 தனபாரம்—'ஸ்தனபாரம்' எனச் சுவடியில் உள்ளது
195 அடவாக—அடைவாக
198 'நிட்சயமாம்' எனச் சுவடியில் உள்ளது
200 சேலைச்சிறகு—முந்தானை

பத்தினியாள் சொல்லும் பழுதுவா ராதுஎன்று
மெத்த மனமகிழ்ந்து வல்விசைய னன்னேரம்
அட்சதையுந் தான்வாங்கி அணைந்து திருமுகத்தில்
மச்சினனுந் தானும் மண்டபத்தை விட்டிறங்கி
பொன்னின் படிகடந்து பொற்கோபு ரங்கடந்து 205
மின்னு மணிவாசல் வெள்ளிப் படிகடந்து
தேரோடும் வீதியிலே புறப்பட்டார் தெருவழியே

## அரவான் வருகை

வீரோடு விசையன் மைந்தன் மிகுத்தநல் லரவானும்
அன்பாக ஐந்துவய தறியா மதலையவன்
முன்குடுமி முத்துருளப் பின்குடுமி பூமுடிந்து 210
வீரதண்டை யோசையிட விதமாய்ச் சிலம்புகொஞ்ச
சார்வா பரணமின்னச் சந்திரன் போலொளியும்
சித்திரத்தே ருண்டாக்கிச் சிறுவரெல்லாம் கூட்டமிட்டு
வச்சிரத் தேர்மேலே வரிசையுள் ளரவானும்
தெருவிலே வல்லதோர் தேர்ப்பாகன் தேரூர்ந்து 215
இருவருக்கு முன்னே எதுக்கவிளை யாடிவந்தார்
பரிவுடன்தேர் விட்டிறங்கித் தன்-பதாதிகளைக் கூட்டமிட்டு
அறிவுள்ள ராவானும் அர்ச்சுனனார் பக்கல்வர
ஆர மணிமார்பன் அய்யா வெனத்தழுவி
வாருமையா வென்று மகிழ்வா யணைக்கலுற்றார் 220
மெச்சி யெடுத்தணைத்து வில்விசைய னப்போது
உச்சி முகந்து ஒளிமாலை கைகொடுத்து
மதுரைக்குப் போறேன் மகாதீர்த்த மாடிவர

## அரவானிடம் பொருள்கள் வாங்கிவருவதாகக் கூறல்

இதமா யுனக்கு யின்பமுள்ள பட்டுகளும்
தலைக்கான குல்லாவுந் தங்கத்தால் சல்லடமும் 225
விலைக்கான மணிமாலை மேதினியோர் தான்புகழ
கைக்கிசைந்த வில்லுங் கடியதொரு நற்கணையும்
மெய்க்கிசையாய் வாங்கிவர மேவுமென ராவானும்
அய்யரே நம்ம அரமனைக்குப் போகுமென்றான்
மெய்யாப் புகழுடையோன் வில்விசைய னப்போது 230
புத்திசொல்லிப் புத்திரரைப் போக அனுப்பிவிட்டு

## துவாரகாபுரி நோக்கிச் செல்லல்

எத்திசைக்கும் வில்லி யிணைதோழ னுந்தானும்

---

216 எதுக்க—எதிரே
225 சல்லடம்—இடுப்பினின்று அடித்தொடைவரைத் தரிக்கும் காற்சட்டை
227 கணை—அம்பு
229 அரமனை—அரண்மனை

துவாரகா புரிநோக்கித் துருசாக வந்தார்கள்
யிவரேகி வாரவழி யெங்குமே பூங்காவில்
நீடு வனம்புகுந்து நிரைசோலை தான்கடந்து 235
காடு கடந்து கருமலையுந் தான்கடந்து
சோதி மணிமுடியின் துவாரகா புரிபுகுந்தார்

## அருச்சுனனைப் பெண்கள் வரவேற்றல்

வீதியில் செட்டிப்பெண்கள் வெகுதிரளா யோடிவந்து
முத்தினா லாலாத்தி முன்னாகச் சுத்திடுவார்
அத்தெருவை விட்டு அப்புறமே போகையிலே 240
இராசாதி ராச ஸ்ரீகளெல்லாந் தான்கூடி
வீரரா சாதிராச வில்விசைய னைப்பார்த்து

## மகளிர் நிலை

கைசோர்ந்து நிற்பாரும் கலைசோர்ந்து நிற்பாரும்
மெய்சோர்ந்து நிற்பாரும் மேல்விழுவோ மென்பாரும்
அந்தவீதி விட்டு அப்புறமே போகையிலே 245
வந்து நிறைந்தார்கள் மன்னர் படைத்தலைவர்
சங்கீதம் பாடத் தனுராகந் தான்பாட
இங்கித மாக இராசமன்னர் தான்சூழ
சமத்தமாய் வேடிக்கையாய் தனஞ்செயனார் வருகிறதை

## சுபத்திரையிடம் தாதி செல்லுதல்

சுபத்திரியாள் தாதி சுகலீலை வனிதைவல்லி 250
கண்டுவிரு சாயநடந்தாள் கனக கிரிகுலுங்க
அண்டர் புகழும் அபரஞ்சி நற்கடையம்
வெள்ளிச் சிலம்பு வீரதண்டை கொஞ்சிவர
வள்ளைக் கொடிபோல வளர்ந்ததிருக் காதுரெண்டும்
செம்பொன் சிறுபணிதி சீரடிகள் கொஞ்சிவர 255
பைம்பொன் சரிகை பருசேலை கொய்துடுத்தி
சருவா பரணமுந் தகதகென்று சோதிமின்ன
வரிசையுள்ள தாதி வருமந்த வேளையிலே
திரளாய் மணிபதித்த சிங்கா சனம்மீதில்
சுரலோக வஷ்த்து சுபத்திரியாள் கொலுவிருக்க 260
கனகரத் தினமாலை காளாஞ்சி யேந்திநிற்க

---

233 துருசாக—விரைவாக
234 வாரவழி—வருகின்றவழி
239 சுத்திடுவார்—சுற்றிடுவார்
241 ஸ்ரீகள்—ஸ்திரீகள், பெண்கள்
255 பணிதி—ஆபரணம்
261 காளாஞ்சி—தம்பலர் துப்பும் கலசம்

கனக பவளக் கவரியிடும் ரம்பையரும்
முத்துக் கவரியிடும் மோகரத்தின மாலைகளும்
சித்துடுக்கை கொட்டச் சிவகீர்த் தனமுழங்க
பாடவல்ல பெண்கள் பசும்பொன்னின் தோழியர்கள் 265
ஆடலில்லாப் பெருமாள் அச்சுதனார் தங்கையவள்
முதிராய் விளைந்த முருக்கம்பூ மேனியரும்
சதிராய் முகுந்தர் தங்கை சுபத்திரையாள்
சீராமர் நங்கை தீர்க்கமுள்ள தெய்வகன்னி
நாரா யணன்தங்கை நவசக்தி பெண்பெருமாள் 270
ஆசிரியர் குலத்து அர்ச்சுனனார் தேவியவள்
வீரியமாய்க் கூத்தும் விதவிதமாய்த் தான்பார்த்து

## தாதியுரைத்தல்

அந்தநல்ல வேளையிலே அவள்தாதி ஓடிவந்து
விந்தையுடன் துகிலொதுக்கி விதமாக வேவிழுந்தாள்
தெண்டன் பணிந்து தென்மொழியாள் தானெழுந்து 275
வண்டார் குழலாரும் வாய்புதைத்துக் கைகள்கட்டி
சீர்பவழ வாயைத் திறந்து அழகாக
கூறுகிறேன் கண்டபடி குணமான வாசகத்தை
ஆச்சியரே விண்ணப்பம் அடியே னுரைகேளீர்
பேச்சி முலையுண்ட பெருமா ளுடதோழன் 280
மெல்லியரே நாயகியே வில்விசையன் வாரார்காண்

## அருச்சுனரை வரவேற்றல்

வில்விசைய னென்றளவில் வித்தாரப் பெண்பெருமாள்
சேல்கெண்டை பாய்ந்தாற்போல் சிங்கா தனங்குதித்து
வேல்பொருதுங் கண்ணாளும் வில்விசையன் வாரதுக்கு
பவழக் கால்நாட்டி பரப்பு வளைபோட்டு 285
நவரத்தின பொன்தூணு நாலுபக்கஞ் சோதிமின்ன
வெள்ளி திரட்டி மேல்மாரு தான்பரப்பி
உளப்பந்தல் மேல்கட்டி உயர்பசும்பொன் துகிலாடை
மாணிக்க மாலை மகாதோ ரணங்கள்கட்டி
ஆணிக்கை யாயருகில் அலங்காரச் சுடரொளிபோல் 290
கண்ணாடி தூக்கிக் கவரிசல்லி தொங்கல்விட்டு
நண்ணாய மலரெடுத்து நற்பூவா லலங்கரித்து
முன்னாடிச் சாம்பிராணி முழுதுக்குந் தூபமிட்டு
பொன்னாடை கொண்டு போதவெங்குந் தான்விரித்து
புஷ்பங்கள் தானும் பொன்னாடை மேல்பரப்பி 295
புஷ்பகமாய்ச் சாம்பிராணி வீதியெங்குந் தூபங்கட்டி

---

280 பேச்சிமுலையுண்ட பெருமாள்—பூதகி முலையுண்ட கண்ணனின் வரலாறு

284 வாரதுக்கு—வருவதற்கு

எத்திசையு நற்புழுகு வீதியெங்குந் தான்தெளித்து
முத்தினா லாலாத்தி முன்னாகச் சுத்திவைத்தார்
வெள்ளிமலர் பொன்மலரும் விதமாகக் கொண்டுவந்து
தெள்ளியதீர்த் தஞ்சொரிந்து சீர்பாதந் தெண்டனிட்டு 300
வல்லி மலர்சொரிந்து மன்னவர்பா தம்பணிந்து
அல்லிமே லாவல் அறிவு தெரியாமல்
சமத்துமோ மெய்மறந்து தலைகுனிந்து கிலேசமதாய்
சுபத்திரையைப் பாராமல் சோபமுற்று நிற்கிறதை
கண்டு சுபத்திரையாள் கண்திஷ்டி பட்டதென்று 305
வண்டார் குழலாளும் வகையாகத் தான்நோக்கி
பட்டுகளைச் சுற்றிப் பலதிக்காய்ப் போடுமென்றாள்
பட்டுப்பட் டாவளிகள் சுற்றி யெரிந்தார்கள்
என்னதான் சுற்றிடினும் ஏக்கம் மிகுதியுமாய்

## அருச்சுனனின் துன்பம்

மன்னனுக்குத் தலைவலியும் மனநடுக்க மிடுங்குளிரும் 310
இடுப்பு வலியு மிதங்கெட்ட காய்ச்சலுமாய்
நடுப்பு மெய்யெல்லாம் நடுங்கி உதறியது
வெளியிற் பலர்கூடி விருசா யெடுத்துவந்து
பளிங்குமா மண்டபத்தில் பஞ்சணைமேல் போட்டார்கள்
காவென்று வில்விசையன் காய்ச்சல் பொறுக்காமல் 315
கோவென்ற சத்தங் கூக்குரலுந் தானாகி
மாயனுட தங்கை வடிவமான பேரழகி
ஆயனுட தங்கை அழகுள்ள பெண்பெருமாள்
தோரா வழகி சுபத்திரா தேவியம்மன்
சூரியன்போல் மேனி துடித்துப் பதைபதைத்து 320

## திருமாலைச் சுபத்திரை வேண்டல்

அலைகடலில் பள்ளிகொண்ட ஆதி குருநாதர்
தலைகாத்து நாயகனைத் தற்காத்து ரட்சிஅய்யா
அரிராம ராமா அச்சுதா அனந்தசேனா
ஸ்ரீராம ராமா எம்பெருமாள் மாயரென்று

---

297 புழுகு—வாசனைப் பொருள்
303 கிலேசம்—துன்பம், மனவருத்தம்
304 சோபம்—சோகம், துன்பம்
305 கண்திஷ்டி—கண்திருஷ்டி; கண்ணேறுபடல்
313 விருசாய்—விரைவாய்
317 மாயனுட—மாயனுடைய
322 ரட்சி—பாதுகாக்க (சுவடியில் 'லெட்சி' எனக் கொச்சைமொழியாய் உள்ளது)

வண்டு குழலாள் மனசுழன்று வாடுரதை 325
கண்டு பெருமாள் கபடாக வேஷங்கொண்டார்

## பெருமாளின் வருணனை

நிசாருகள் தொட்டு நீலவர்ணச் சட்டைகட்டி
விசாரமுற் றுக்களபம் மிகப்புழுகு வாசனையும்
மெய்நிறையப் பூசி மேனி யழகாக
கைநிறையப் பூசி கஸ்தூரிப் பொட்டுமிட்டு 330
சரிகைத் தலைப்பாகுந் தகதகென்று சோதிமின்ன
வரிசை யுத்தரீகம் வகையுள்ள மாலைகளும்
காதில் நிறைந்த கடுக்கன்கள் சோதிமின்ன
மோது நவரத்தினம் முத்தா பரணமின்ன
ராச பதக்கம் நடுமார்பில் சோதிமின்ன 335
நேச வயிரம் நிரைபொதிந்த மோதிரங்கள்
வாய்த்து அஷ்த்தக் கடையஞ் சோதிமின்ன
தாயத்து பொன்கவுடந் தளதளென்று சோதிமின்ன
ஒன்பது ரத்தினமும் ஒளிவு நிழல்காட்ட
கொம்பு குறிப்பாருங் கோல மயில்போல 340
கட்டியங் கள்கூறக் கவரி பணிமாற
முட்டக் கவரியிட மோகாதி போல்நடந்தார்
சங்கீதம் பாடத் தனுராகந் தான்பாட
இங்கிதமான யிணையில்லா ராசரைப்போல்
தலம்புகழ வேநடந்து தண்மைமணி மண்டபத்தில் 345
வலம்புரிச் சங்கோசை வையகங்கள் தானதிர

## கண்ணன்—சுபத்திரை உரையாடல்

பேர்பெரிய ராமர் பெருமாளைத் தான்நினைந்து
கார்மேக வண்ணன் கடுவிசையன் செவிகேட்க
ஆதிநா ராயணனே அரக்கர்குல மறுத்தோனே
சோதனையா இரணியனைத் துருசாக மாய்த்தோனே 350
காட்சி தரும்போலே கார்மேகவண் ணாதிரும்பு
மாட்சிமை செய்யாதே மாயவரே என்றுரைத்து

---

325 மனசுழன்று—மனம் வருந்தி
வாடுரதை—வாடுவதை
326 கபடாக—வஞ்சனையாக
327 நிசார்—காற்சட்டை
328 களபம்—மணப்பொருள்
332 உத்தரீகம்—மேலாடை
337 அஷ்த்தக்கடையம்—ஹஸ்தம்—கைக்கடகம்
338 பொன்கவுடம்—பொன்னாலாகிய அணிகலன்
350 துருசாக—விரைவாக

என்னடி ஆச்சியரே என்காது கேளாது
வண்ண மணிமாதே வயசெனக்கு மெத்தாச்சு
சொல்லடி தங்கா சுபத்திரா தேவியம்மா 355
அல்லடி உன்கணவன் ஆளா லழகனுக்கு
காய்ச்சல் குளிருங் கடியத் தலைவலியும்
மூச்சுமுழங் காலுரெண்டும் மூட்டுவிட்டுப் போகுதடி
கணைங்காலு ரெண்டுங் கட்டுவிட்டுப் போகுதடி
ஆணங்கே உடல்முழுதும் அனலா யிருக்குதடி 360
பன்னும் பணுதியல்ல பணுதிவர்க்கம் போனதல்ல
கன்னியால் வந்த கலக்கமிது தப்பாது
காய்ச்சல் நிறுத்தக் களிப்புண்டு தங்காநீ
சூச்சமாய்க் கைபார்க்கத் துருசா யழையுமென்றார்
ஆயிரந் தாதி அடைவாகத் தானோடி 365
காயல் மிகுந்த கடியபெரு அருச்சுனரை
தட்டி யெழுப்பினார் தனஞ்செயரே யென்றுசொல்லி
கெட்டி மனது கிலேசம் பொறுக்காமல்
அல்லியென்ற ஆவல் அரியதிரு மேனியெல்லாம்
வில்லி யருச்சுனனார் வெதுப்பம் பொறுக்காமல் 370
எழுந்திருக்க மாட்டாமல் எண்ணம் மிகுதியுமாய்
சுளுந்து பதைபதைக்கச் சொக்குப் பிடித்தாற்போல்
மாரடித்துக் கொண்டவர்கள் மங்கைநல்லாள் தாதியர்கள்
வீரடித்துச் சுபத்திரையாள் மெய்தொடங்கி கால்பிடித்து
அண்ணாவி கோடங்கியிந்த ஆபத்துக் கார்த்தாலே 375
பண்பாகச் சிலவுக்குப் பதினாயிரம் பொன்தாரேன்
அதுவெல்லாம் அநியாயம் அபிஷேக நாயகியே
சதுராயென் கொப்பாழ பொட்டிறொப்புந் தங்கையென்ன
நல்லதடா அண்ணாநீ சொன்னபடி நான்தாரேன்
மெல்ல நடந்தான் வில்விசையன் பக்கலிலே 380
கைபார்த்துத் தாது கதித்து நடக்குதென்றார்
மெய்பார்த்துச் சுக்கு விதமா யழைப்பியென்ன
சுக்குத்தான் கொண்டுவந்தார் சுந்தரப்பூஞ் சாயல்நல்லாள்
சுக்குவா யில்கடித்துச் சூட்சமாய் என்பெருமாள்

---

354 மெத்தாச்சு—மிகுதியாக ஆயிற்று
361 பணுதி—பணிதி—வேலை
364 சூச்சமாய்—சூட்சுமமாய்
364 துருசாய்—விரைவாய்
366 காயல்—காய்ச்சல்
370 வெதுப்பம்—வெப்பம்
372 சொக்கு—மயக்கம்
375 கார்த்தாலே—காத்திடின்

## கண்ணன் அருச்சுனனிடம் கூறல்

பாதமண் டிபோட்டுப் பார்த்தனையும் மார்பணைத்து 385
காதிலூதும் பாவனைபோல் காதுகடி பேசுகிறார்
அருச்சுனரே மைத்துனரே ஆணழகா மாபாவி
சச்சூது என்னினைந்தாய் தங்கையென் சுபத்திரைக்கு
கள்ளக் குளிரு காய்ச்சலும் விட்டுவிடு
கொல்லவந்த பேரைஅல்லி கூறுரெண்டாய் வெட்டிடுவாள் 390
பிராணம் பிழைத்தல்லவோ பெண்சுகங்கொண் டாடுவது
காரவானை வென்ற காரணனும் தானுரைத்து
பின்னுமவ ரேதுசொன்னார் பிசகாய விசையாவின்று
என்மேல்பழி போடாதே எழுந்திரடா அருச்சுனனே
இத்தனைநாள் கொண்டபெண்கள் இழுக்கவுண்டு
போத்தவுண்டு 395

## அருச்சுனன் மறுமொழி

சற்றுநேரங் கேட்டிருந்து தனஞ்செயரு மேதுரைப்பார்
ஓரடிய ளந்தசுவாமி ஒட்டாரம் பண்ணாதே
காருமென்னை யிப்போது கடாட்சம் மிகுதியுமாய்
அல்லிமே லாசையங்கம் ஆக்கைவிட்டுப் போகுதுகாண்
கல்லிகா மக்குரோதங் கண்வெறுத்துப் போகுதையா 400
நாளைப்பொழு தில்மதுரை நாயகியைக் காணாட்டால்
வாளை நிறுத்தி வாளிலே நான்விழுவேன்
பாதமறி யட்டும்பழி போடுவேன் பார்த்திருநீ
வாதுரைத்துக் காலுரெண்டும் பிடித்தானே வாள்விசையன்
மேலையென் சிரசுதொட்டால் விடுவேனா னல்லவென்று 405
காலைப் பிடித்தபிடி கண்முழிகள் தான்பிதுங்க
வாளி பெருத்த வாள்விசையன் மேல்மனதாய்
ஆழி தரித்தகையால் அறைந்தான் தலைமேலே
நம்பினே னென்று நடுங்கி யெழுந்திருந்தான்
வம்பி லுயிர்போக யிருந்ததடி மன்னனுக்கு 410
எழுப்பினே னின்னம் இசகாகத் தோற்றுகுது
விழுப்பமாய்ச் சொல்லுகிறேன் வில்விசையன் மன்னனுக்கு

## அல்லியின் மேல் காதல்

மதுரையில் கன்னியின்மேல் மனைவித்தாபங் காணுகுது
மதுரைக்குப் போயொழிய வாட்டங் தணியாது
தண்டாமல் நாளை யனுப்பிவிடு தங்காநீ 415

---

386 காதுகடி—ரகசியம்
393 பிசகாய—குற்றமாய
397 ஓரடிளந்தசுவாமி—மாபலிகதை வரலாறு
397 ஒட்டாரம்—பிடிவாதம்
398 காரும்—காத்தருளும்

கொண்டார்நமக் குரைத்தபடி கொப்பாழப் பெட்டிவைத்தார்

## பெட்டியில் அணிகலன்களை நிரப்புதல்

பசும்பொன் குலப்பணங்கள் பத்துக் கிடாரமுண்டு
வசம்பெருக அவ்வளவுங் கொட்டினாள் வல்லியரும்
மிச்சப்படப் பாதியில்லை மிதக்கொப்பாழப் பொட்டியது
அச்சப் பழமதுரை அஞ்சு கிடாரமுண்டு 420
அத்தனையுங் கொட்ட அரைப்பொட்டி யாயிருக்கும்
கொத்துமுத் துமெத்தக் கோர்வை யிருக்குதென்றாள்
கொட்டிக்கொ ளுத்துதங்கா கூடைரொம்பி னால்போதும்
பொட்டிமுக் காலாச்சு பொன்முத்தெல் லாமுகிஞ்சும்
பண்ணு முடைமையண்ணே பணிதி யிருக்குதென்றாள் 425
எண்ணுமெனத் தங்கச்சிபோ லிருக்குதடி தங்காநீ
உனக்காக நான்விட்டேன் உத்தமியே போறேனென்று
துணுக்காகக் கோடங்கி போனபின் சுபத்திரையாள்
விந்தையுடனே விதமாக வார்த்தை சொல்வாள்

## அருச்சுனனை அல்லியிடம் போக வேண்டாமெனல்

எந்தனுட நாயகரே எளிதல்ல தென்மதுரை 430
சவுரியமும் அல்லியாள் சாஞ்ச முடியழகும்
பவனி வருவாள் பதினெட்டக் குரோணியுடன்
கண்ணினால் கண்டீரால் கடுகியவள் மேல்விழுவீர்
எண்ணி ரெண்டுதுண்டா யிருபிளவு செய்திடுவாள்
போகாதே யென்று பொற்பாதம் பூண்டுகொண்டாள் 435

## அருச்சுனனின் உறுதிமொழி

ஞோகாதே வார்தைசொல்லி நுண்மையாய்க் கைப்பிடித்து
எண்ணியெட்டு நாளையிலே வருவேன்கா ணேந்திழையே
தன்னாணை யென்று தலையிலே தானடித்தார்
அந்த மொழிகேட்டு ஆயன் சகோதரியாள்
சிந்தை குளிர்ந்து திருநீறு தானணிந்து 440
விந்தை யுடனே வெள்ளிலையு மரிபிளவும்
வந்துகையில் தானெடுத்து வன்கண்ணில் முத்துதிர

## சுபத்திரை தன் அண்ணனையும் உடன்போகச் சொல்லுதல்

தூயனே அருச்சுனருக்குத் துணைத்தோழன் நீயாக
கூடவே சென்றவர்க்குக் குத்தம் வராதபடி 445
மாயனே யென்னுடையே வரிசைச் சகோதரனே

---

416 கொப்பாழப் பெட்டி—அணிகலன்கள் நிறைந்த பெட்டி
423 ரொம்பினால்—நிரம்பினால்
430 எந்தனுட நாயகரே—என்னுடைய நாயகரே
432 அக்குரோணி—படையெண்ணிக்கை
445 குத்தம்—குற்றம்

கூடவே கைப்பிடியைக் கொண்டுவரு மண்ணாவி
மாலை மயங்காமல்—என்—மங்கிலியங் குன்றாமல்
ஆலைய மேவிளங்க—என்—அண்ணாவி காருமென்றாள்
மன்னன் பெருமாள் மனமகிழ்ந்து நன்றாக
சின்னப் பண்டாரத் திரவியத்தைத் தானெடுத்து 450
களஞ்சியத்தை மெள்ளக் கக்கத்தி லேயிடுக்கி
தனஞ்சியரே போய்வாரேன்—தய—விருக்கட்டுந் தங்கையரே
நின்பாசை தன்னாலே நிண்ணையமோ சுவாமியென்றாள்
நின்தலையில் தனிலடித்தும் நீசந்தேக மெண்ணாதே
தவணையில்லை நாளைத் தண்ணிப்பந்தல் வந்துநில்லு 455
கெவுனபாஷை யாலுரைத்துக் கிஷ்டணரும் நடக்கவுற்றார்
பொழுது விடியளவும் பொறந்து துயில்பேணாமல்
பழுது படாப்பெருமாள் பார்த்தனுங்கண் மூடாமல்

## அருச்சுனன் விடைபெறுதல்

ஆதித்த வாரம் அதிகால மெழுந்திருந்து
சோதி மணிமுடியான் துணுக்கென் றெழுந்திருந்து 460
மாய னுடன்பிறந்த வாண்மயிலைத் தான்பார்த்து
நேயமுள்ள பெண்ணே நீலக் கருங்குயிலே
வாய்மொழியைக் கேளீர் மகரரத்தினக் குழல்மடவீர்
தாய்மொழிபோ லேயுரைத்துத் தயவும் படியாக
கோடங்கி சொன்ன குறிப்பொருநாள் தப்பாது 465
தேடக் கிடையாது தென்மதுரைச் சொக்கருட
கோவிலுக்குப் போய்வாரேன் குரும்பை முலையாரே
தாவியே வாழ்த்திவிடை தாரா யிளங்கொடியே

## சுபத்திரை விடைகொடுத்தல்

அந்த மொழிகேட்டு ஆயன் சகோதரியாள்
சிந்தை கலங்கிச் செம்பவள வாய்திறந்து 470
மச்ச வளநாடு வலுவான தென்மதுரை

---

453 நின்பாசை—உன்னுடைய மொழி
நிண்ணையம்—உறுதி

454 தலையில் தனிலடித்தல்—சத்தியம் செய்தல்

456 கெவுனபாஷை—கவனமாய்ச் சொன்னமொழி

457 கிஷ்டணரும்—கிருஷ்ணரும்—கொச்சைமொழி

458 பொழுது விடியளவும் பொறந்து துயில் பேணாமல்—விடியும் வரை விழித்திருந்து

459 ஆதித்தவாரம்—ஞாயிற்றுக்கிழமை

461 வாண்மயில்—சுபத்திரை

466 சொக்கருட—சொக்கருடைய

துச்சனங்கள் செய்யாமல் துடுக்கு நடவாமல்
ஒழுக்க முடன்சென்று ஒழுங்குடனே வாருமென்று
விளக்கமாய் அட்சதையும் வெள்ளிலையுந் தான்கொடுத்து
உருக்கமுடன் போய்வாரு மென்றுரைத்தாள் உத்தமியாள் 475

## அருச்சுனனும் கண்ணனும் புறப்பட்டுச் செல்லுதல்

பருக்க மணிவாசல் படியேழுந் தான்கடந்து
பொன்னின் படிகடந்து பொற்கோபு ரங்கடந்து
தென்னலும் வீதி தெருவெங்குந் தான்கடந்து
சாலை கடந்து தண்ணீப்பந்தல் போய்ப்புகுந்தார்
காலைப் பொழுது கடும்பயணம் போகவென்று 480
கண்டு பெருமாளைக் கையார வேதொழுது
வண்டுறையும் மார்பன் வாருமென நடந்தார்
ஒருவ ருக்கிருவர் உற்றதுணை சேர்ந்துகொண்டு

## இருவர்தம் வருணனை

மருவிப்பிரி யாதமன்னர் மாயவருங் கைசேர்ந்து
சங்குடனே சக்கரமும் தனுவுடனே தானெடுத்து 485
பொங்கமாய் அருச்சுனருக்குப் புகழான ஆபரணம்
வலதுகையில் சங்கும் இடதுகையில் சக்கரமும்
வலதான மால்தனக்கு மாணிக்கக் கிரீடமுடன்
மன்ன னருச்சுனற்கு மாணிக்கக் கிரீடமுடன்
வர்ணமணி மாயருக்கு மார்மேலே பூணூலும் 490
கார்மேக வண்ணருக்குக் காதிலே கவசகுண்டலம்
காம னருச்சுனருக்குக் காதிலே கவசகுண்டலம்
அச்சுதற்கும் அருச்சுனற்கும் அன்பாய்த் துளசிமாலை
மெச்சிதமாய்க் காண்டாவன மெரித்தவற்கு மாயவற்கும்
நெற்றியிலே நாமம் நிறையவே தான்துலங்க 495
பற்குணற்கும் மாயவற்கும் பருவலது துடையில்மச்சம்
இடதுடைசெங் தாமரைப்பூ இருவருக்கு மேதுலங்க
அடவெதிரே வருமுனிவர் அலரிவரா ரென்பாரும்

---

472 துச்சனங்கள்—குறும்புகள், துஷ்டத்தனம்

474 வெளியூர் செல்வோருக்கு அட்சதையும் வெற்றிலையும் கொடுத்து வழியனுப்புதல் மரபு

476 பருக்க —பருத்த, பெரிய

478 தென்னலும்—தெற்கிலும்; தென்னல்-தென்றல்

486 பொங்கமாய்—மிகுதியாய்

496 பற்குணன்—அருச்சுனன்

498 அலரி—சூரியன்
வராரென்பாரும்—வருகிறார் என்பாரும்

இருவரையும் நமஸ்காரம் ஏற்றமுட னேதொழுவார்
கருவரையுங் காடு கதித்த மலைகடந்து 500
தேசங் கடந்து தென்மதுரை யெல்லைகண்டார்

## சோலை வருணனை

வாசங் குளிர்சோலை வளர்ந்த யிருள்காவும்
எங்கெங்கும் பூங்காவும் எண்ணவொண்ணாப் பூமலரும்
எங்கெங்கு மல்லிமுல்லை இருவாச்சி மருக்கொழுந்து
அல்லி மலரும் ஆனசிறு செண்பகமும் 505
மெல்லிய செந்தாழை வெண்தாழைப் பூமலரும்
மணமான புன்னை மகிழம்பூ வாசனையும்
துணிவான வண்டு தும்பியளுந் தேன்குடித்துத்
தேசமெங்கும் வாசந் தேடரிய செண்பகமும்
வாசமாய் நின்று வண்டுகள் கீதமிட 510
பூவாசம் வீசப் பொன்வண்டு தான்பாட
மேவாசங் கொம்புதொறும் மின்குறிஞ்சித் தேனொழுகும்
நெல்லி நிழலாட நெல்லிக்காய் சூதாட
மெல்லிய செவ்விளநீர் விரும்பிக் குலைசாயும்
ஆறுங் குளமும் அடிக்கடி சத்திரமும் 515
சேறும் பயிருஞ் செந்நெல் விளைவுகளும்
நின்ற விடமெங்கும் நிழலான சோலைகளும்
சென்ற விடமெங்கும் செங்கழுநீ ரோடைகளும்
திங்கள்மும் மாரி தேசமெங்குந் தான்பொழிய
பெண்கள் பெருமாள் பேர்விளங்கும் நன்னாடு 520
புலியும் பசுவும் பொருந்தி விளையாடும்
எலியுமந் தப்பூனை இலங்கி விளையாடும்
ஆளியுஞ் சிங்கம் அணைந்து விளையாடுந்
கோழியும் பருந்துங் கூடி விளையாடும்

## வயல் வருணனை

வண்ணலு மிஞ்சியும் மஞ்சளு மாமரமும் 525
கன்னலுஞ் செந்நெலுங் கதித்து விளைவாகி
கருத்த பயிர்தனிலே களையெடுக்கும் பள்ளிகளும்
அறுப்பு விடுவாரும் அரிகூட்டி நிற்பாரும்
ஆனை யடிமறைய அடிராசி நெல்விடுவார்
ஆனவிரு மூன்றுபங்கில் அரமனைக்குப் பங்கொன்றுபோம் 530
கட்டுக் கலங்காணுங் கதிருழக்கு நெல்காணும்

---

521-524 வரிகள், நாடு பூசலின்றி விளங்கியதை விளக்கும்

528 அறுப்பு—அறுவடை
அரி—அறுத்ததாள்

529 அடிராசிநெல்விடல்—நெல் அறுத்த கூலியாட்கள் கீழே சிந்திய நெல்லை இலவசமாக எடுத்துக்கொள்ளுமாறு செய்தல்

### கொடைச்சிறப்பு

இஷ்டமாய்த் தானம் இதமான சொர்ணதானம்
அன்னதானம் கோதானம் ஆடை யுடைதானம்
கன்னிய தானம் கடுகிய பூதானம்
கொடுப்பாரே யல்லாமல் கொள்வா ரொருவரில்லை 535
எடுப்பார்கள் தானம் ஏற்பா ரொருவரில்லை
ஆதிநா ராயணரும் அருச்சுனரும் பார்த்துநின்று
சோதி மணிமுடியார் சொல்லுறுதி கொண்டாடி

### துறைச்சிறப்பு

கரைதுறை யோரங் கால்கடுகி வந்தார்கள்
நிரைகப்ப லங்கு நேர்வந்து சேருவதும் 540
முத்துக் குமித்து முத்துச்சேர நிக்கிறதும்
பட்டுப்பட் டாவளிகள் வந்திறங்கும் பாவனையும்
எட்டுத் திசைக்கும் எண்ணறியாத் தோணிவர
தெப்ப மிடுவாருந் தென்கரையில் நிற்பாரும்
பற்பராகஞ் சோதி மின்னப்படங்கு விரிப்பாரும் 545
நீரெல்லாம் முத்து நிலமெல்லா மாணிக்கமும்
ஊரெல்லாஞ் செம்பொன் உலகமெல்லா மாணிக்கமும்
அந்த அதிசயத்தை அதிசயமாய்ப் பார்த்துநின்று
சிந்தை மகிழ்ந்து சிறந்து யிருவருமாய்
எதிரில்லா மன்னர் இராசா புறப்பாடாய் 550
மதுரை புரிநகரை வந்து அணுகினராம்

### மதுரை மகளிர் நிலை

மதுரைத் தெருவீதி மன்னர் வருகையிலே
எதிரில்லா மன்னரிருவரையுங்கண்ட பெண்கள்
கைசோர்ந்து கலைசோர்ந்து கையில் வளைசோர்ந்து
மெய்சோர்ந்து குழல்சோர்ந்து வீரியமும் தான்சோர்ந்து 555
எட்டிநின்று தான்பார்ப்பார் ஏங்கி மனம்விடுவார்
கட்டின சேலை கலைத்து உடுப்பாரும்
தாகமென்று வாராரோ தாகந் தணியோமோ
பாகம் பிரியார் பரமசிவ னென்பாரும்

---

535 "கொடுப்பாரே யல்லாமல் கொள்வா ரொருவரில்லை எடுப்பார்கள் தானம் ஏற்பா ரொருவரில்லை" என்னும் வரிகள் கம்பராமாயணப் பாடல்களை நினைவூட்டும்

541 குமித்து—குவித்து
நிக்கிறதும்—நிற்பதும்

545 பற்பராகம்—பதுமராகம்; மாணிக்க வகை
படங்கு—வீடு

554 கலைசோர்ந்து—ஆடை நழுவி

559 பாகம்பிரியார்—உமையை என்றும் பிரியாதவர்

## வீதி வருணனை

அந்த வீதிவிட்டு அழகுத்தெரு வீதிவந்தார் 560
விந்தை தெருவீதியெங்கு மிகுசெம்பொன் மதில்களும்
வீதிக்கு வீதி விதமாய்க் குறிஞ்சிகளும்
வீதிக்கு வீதி விதமான சித்திரத்தேர்
தேரோடும் வீதியெங்குஞ் செங்கயலுஞ் சங்கினமும்
நீரோடுலாவி வரும் நீதியுள்ள நன்னாடு 565
சுத்து மதில்களுஞ் சூழ்ந்தநிலைக் கோபுரமும்
பத்தி பத்தியாகப் பவழக்கால் மண்டபமும்
கடையும் கடைத்தெருவுங் கண்ணாடி மண்டபமும்
மதுரை நதியில் வைகையிலே ஸ்நானம்பண்ணி

## அர்ச்சுனன், கண்ணனின் அலங்காரம்

எதுரிளைய பட்டுடுத்தி ஈரத் துகில்களைந்து 570
நாமசே ருவைபண்ணி நலத்துளசி மாலையிட்டு
சோமனொளி போல்ரத்தினந் துலங்கக் கிரீடந்தரித்து
அஸ்த கடையமின்ன ஆபரணஞ் சோதிமின்ன
பத்திரப் பொன்மிடைதார் பற்பராகஞ் சோதிமின்ன
பாசிவர்க்கம் பச்சடமும் பாங்காய் விகிஞ்சுகட்டி 575
இராச செருவிதமாய் நடைநடந்தார் கோவிலுக்கு
ஆணைக் கண்டவர்கள் அஞ்சி யொதுங்கிடுவார்
பேணவும் பெண்கள் பேதலித்து நிற்பார்கள்
பொன்னின் படிகடந்து பொற்கோ புரங்கடந்து
மின்னு மணிவாசல் வெள்ளிப்படி கடந்து 580

## சுற்று மண்டபம் வருணனைகள்

உள்சுத்துக் குள்ளே உலாவி நடந்தார்கள்
தளச்சுத்து மெள்ளத் தயங்கி நடந்தார்கள்
திக்குக்குத் திக்குத் திசையோடு கோபுரமும்
திக்குக்கு மண்டபமுஞ் சிங்கார முன்குறடும்

---

566 சுத்துமதில்கள்—சுற்றுமதில்கள்
571 நாமசேருவை பண்ணி—வழிபாடுசெய்து
572 சோமனொளி—சந்திரனின் ஒளி
574 பத்திரப்பொன்—பொன் இலை ஆபரணம்
575 பாசிவர்க்கம்—மணிவகை
பச்சடம்—சேலை வகை
விகிஞ்சுகட்டி—இறுக்கிக்கட்டி
576 இராச கருவிதம்—இராச கம்பீரம்
581 உள்சுத்து—உள்சுற்று
தளச்சுத்து—தளச்சுற்று
584 சிங்கார முன்குறடு— அழகிய சுவர் முதலியவற்றிலுள்ள எழுதகம்

ஆயிரக்கால் தூணும் அடவாகத் தானிருக்கும் 585
பாயிரக்கால் பாவுகல்லும் பாங்காக வேபதித்து
உத்திரமும் போதிகையும் ஒளிவு நிழல்காட்ட
உத்திரத்துக் குத்திரம் ஒளியுள்ள சித்திரங்கள்
பாவுகல்லு முத்திரமும் பாங்காய் முலாம்பூசி
மேவுகல்லு முத்திரமும் வெள்ளிமுலாம்பூசி 590
ஏழுநிலைக் கோபுரமும் யெழுதிநல்ல பொன்னாலே
தாழுமதி முத்தமெலாஞ் சவாதுகள பந்தெளித்து

## தூண் வருணனை

தூணுக்குத் தூணு தூபம் புகையேற்றி
தூணுத்குத் தூணு தூண்டாமணி விளக்கு
தூணுக்குத் தூணு தொடர்மாலை பொன்மாலை 595
தூணுக்குத் தூணு சோதிரத்தின மாலைகளும்
தூணுக்குத் தூணு தோரணங்கள் தானுங்கட்டி
தூணுக்குத் தூணு சோதிவிடுஞ் சித்திரங்கள்
நாணப் பிரிமுறுக்கி நவகோடி முத்தழுத்தி
தோணிப் பிரிமுறுக்கி சோதிரத்தினத் தொங்கல்விட்டு 600
புதுசாய் மலரெடுத்துப் பூவா லலங்கரித்து
எதுராய் முகம்நோக்கி எங்கெங்கு பார்த்தாலும்
அதிசய மான அலங்காரம் சித்திரங்கள்
உதய ரவியொளிபோல் உகந்தரவின் மணிதுலங்க
எங்கெங்கு பார்த்தாலும் இணைரத்தினஞ் சோதிமின்ன 605
இங்கித மாக யிசைந்து வரும்போது
அங்கயற் கண்ணம்மன் அழகிய சொக்கருக்கும்
அங்கேயந் திக்கொலுவு அலங்கார மாச்சுதப்போ

## இசைக்கருவிகளின் முழக்கம்

நட்டுமுட் டுக்கொட்ட நாக சுரமூத
கட்டியங்கள் கூறக் கவரி பணிமாற 610
பாட்டுகள் பாடப் பாவாணர் தான்புகழ
மீட்டிய ராகம் விதவிதமாய்த் தான்பாட

## அருச்சுனன்—கண்ணன் சொக்கரை வழிபடல்

அந்த நல்லவேளை அர்ச்சுனரும் மாயவரும்
சிந்தை குளிரத் தரிசித்து நிற்கையிலே

---

587 உத்திரம்—விட்டம்
போதிகை—தூண்மேல்வைக்கும் தாங்குகட்டை
592 முத்தம்—முற்றம்
சவாது—சவ்வாது, நறுமணப் பொருள்
602 எதுராய்—எதிராய்
604 உதயரவியொளி—எழு ஞாயிற்றின் ஒளி

## அல்லிவருகை

மதுரை நகருடையாள் மகுடமுடிப் பெண்பெருமாள் 615
எதிரில்லாப் பெண்கொடியாள் ஏந்திழைமார் தன்னுடனே
சொக்கருட சன்னதிக்குத் தோகையரும் போகவென்று
அக்காளுந் தங்கையும்போல் ஆறாயிரந் தாதியர்கள்

## அல்லி அலங்காரம்

சல்லடந் தொட்டுச் சதிராகக் கச்சைகட்டி
நல்ல சரிகை நவனிதமாய்த் தலைப்பாகு 620
பட்டுக் கச்சைகட்டி பார்க்கவே சொங்குவிட்டு
எட்டு வகைச்சூரி யிடையில் சமுதாடு
சீரான செப்பரிசை சிறக்கவே மந்திரவாள்
பேரான வல்லவட்டம் பீதாம் பரமுடனே
அங்கியம் மின்ன ஆபரணஞ் சோதிமின்ன 625
முங்கை மூதாரி முழுக்கடையஞ் சோதிமின்ன
நாக மணிகள் நவமணிகள் சோதிமின்ன
மோகன மாலை முத்தா பரணமின்ன
திங்கள் நுதலில் திருநீறு சோதிமின்ன
பங்கயம் கஸ்தூரிப் பாவனைப் பொட்டழகும் 630
தட்டுப் புனுகு சவ்வாது களபமுடன்
கொட்டிய சாந்து குமுகுமென்று வாசமுடன்
மல்லிகை பூச்சரங்கள் வகையா யசைந்தாட
மெல்லிய செண்பகப்பூ விதமா யசைந்தாட
சூழ்ந்த யிருள்தனிலே சூரியன்வந் துதித்தாப்போல் 635
பாய்ந்த யிருள்தனிலே பகவான்வந் துதித்தாப்போல்
ஒருவருக் கொருவர் ஒருநாளுதித்தாப் போல்
ஒருவருக் கொருவர் ஒருமரத்துப் பூவதுபோல்
நாலாம் பிறையை நட்சத்திரம் சூழ்ந்தாப்போல்
மேலாம் நவமணிக்குள் மின்மாணிக்கம் பதித்தாப்போல் 640
ஆணிக்கை யான அபுரூபப் பெண்பெருமாள்

---

617 சொக்கருட—சொக்கருடைய

620 நவனிதமாய்—புதுமையுடையதாய்

621 சொங்கு—சுங்கு, கொசுவம், கொய்சகம், ஆடையைத் தொங்கவிட்டுக் கட்டும் மூலை

622 சூரி—கத்தி; சமுதாடு—ஈட்டி

624 வல்லவட்டம்—வல்லவாட்டு; பூணூல்போல இடத்தோளின் மேலிருந்து அணியும் ஆடை

626 முங்கை—முன்கை

641 ஆணிக்கை—மேன்மை
அபுரூபம்—மிகுந்த அழகு

பேணிக்கை யாகப் பெண்பெருமாள் அல்லியரும்
அதர்சூர வீர ராதித்தன் தன்னொளிபோல்
சதிர்சோலை செய்ய வந்தாளே தையல்நல்லாள்
தீபரா தனைவேளை சேவிக்கப் பெண்பெருமாள் 645
தாபரனார் கோவிலுக்குத் தையல்நல்லாள் போற்றி செய்ய
வந்து புகுந்தாள் மணிமுடியாள் பெண்பெருமாள்
சிந்தை மகிழ்ந்து தேர்விசையன் மாயவரும்
விந்தையுள்ள சொக்கரையும் விதமாக வேதொழுது
தந்திரமாய் மீனாட்சி சன்னதியில் போய்ப்புகுந்தார். 650

## அல்லி வரவேற்றல்

அண்ணர்வந் தாரென்று ஆலித்து வாருமென்றாள்
வண்ணர் மால்பிறகே வாகான அர்ச்சுனரை
கண்டுதான் மீனாட்சி கடாட்சமுடன் தான்பார்த்து
பெண்டுகளுக்கு மன்மதன் பேரழகனென்று சொல்லி
மங்கையெனும் அல்லியர்க்கு மணவாள னென்றுகண்டு 655
தங்கைமண வாளனென்று சாச்சாள் திருமுகத்தை
அல்லிமண வாளனென்று அறுதியிட்டா ளீசுபரியும்
மெல்லியாள் அல்லிஅந்த வேளையிலே போய்ப்புகுந்தாள்
பிரம்பால் விலக்கிப் பெண்பெருமா ளுள்புகுந்து
வரம்பாலுஞ் சொக்கரையும் வாகான அம்மனையும் 660
முக்கால் வலம்வந்து மூவிருகால் தெண்டனிட்டு
அக்காலும் வெள்ளிபொன்னால் அடவாய் மலர்சொரிந்து
தானே வணங்கித் தாள்பணிந்து தெண்டனிட்டு
தேனே மிகமொழியாள் தெரிசித்து நிற்கையிலே

## விசயன் கண்ணனிடம் வினாவுதல்

சாதுவாய்ப் பார்த்துத் தன்மையுடன் வில்விசையன் 665
காது கடியாக்க கண்ணரைக் கைதொழுது
என்பெரு மாளே எனக்கான மைத்துனரே
நன்பெரு மாளே நாரா யணமூர்த்தி
யிந்த யிளவரசை எனக்கறியச் சொல்லுமென்றார்

## அச்சுதனின் மறுமொழி

அந்த மொழிகேட்டு அச்சுதருந் தானகைத்து 670
ஆறாயிரம் பாண்டியர்கள் அருமைத் தவமிருந்த
பேரான அல்லி பெண்பெருமா ளென்றுசொன்னார்

---

642 பேணிக்கை—போற்றுதல் (?)
650 ஆலித்து—ஒலித்து, மகிழ்ந்து
656 சாச்சாள்—சாய்த்தாள்
662 அடவாய்—முறையாக

## அல்லியென்றதும் மயங்குதல்

அல்லியென்று சொல்ல ஆணழகன் வில்விசையன்
வில்லி யருச்சுனனார் விதமாகச் சோபமுற்று
வேரற்ற தென்னை மரம் வீழ்ந்தபா வனைபோல 675
சீருற்ற மன்னன் தேர்விசயன் போய்விழுந்தான்

## மயக்கம் தெளிவித்தல்

மாய னெடுத்துத்தன் மார்பிலே தானணைத்து
ஆயமாய்க் கண்டு அல்லியங்கே ஓடிவந்து
உள்வாயில் சுக்கடக்கி ஊதுமென்றாள் தோகையரும்
மெல்லவே காதில் விரைந்தூதும் பாவனைபோல் 680
ஏதடா அருச்சுனனே எக்கச்சக்கம் பண்ணுகிறாய்
வாதடா செய்யாதே மங்கையண்டே நிக்குகிறாள்
கள்ள மனதுவிட்டுக் கடைக்கண்ணால் பாருமென்றார்
தள்ளியே ஆரைந் தர்க்கமே செய்கிறாய்
சத்துருவாய் நில்லாதே சதிகேடு பண்ணாதே 685
எத்திசையும் ஆளவல்ல யேந்திழையா ளல்லியவள்
சிங்கா சனத்தில் சிறந்த கொலுவிருப்பாள்
வங்கார வைபோகம் வகையுடனே காணுகிலாம்

## அல்லியழகைப்பார்த்தல்

பச்சைமால் சொல்லப் பதறியே கண்விழித்து
இச்சையுடன் பார்த்தான் இயல்பான பேரழகை 690
உருக்கிய தங்கம் ஒளிபோல் திருமேனி
பெருக்கிய காது பேரான பூங்கடுக்கன்
வட்ட முகத்தழகும் வளர்பிறைபோல் நெற்றிகளும்
இட்ட திருநீறும் இலங்கியகஸ் தூரிகளும்
காமன் சிலைபோலக் கன்னியிட மேல்புருவம் 695
சோமன் மிடைதாருஞ் செம்பொன் னொளிகாட்ட
சருவா பரணஞ் சரப்பணியி லுள்பதக்கம்
மருவான தில்லை மருவுற்ற திருமேனி
கணைக்காலு ரெண்டழகுங் கடைந்த மரமதுபோல்
இணைக்கான பொன்சிலம்பு எறக்கையாய்ப் போலடியும் 700
முத்துப் பதித்தாப்போல் முழங்கால் திருவழகும்
வெத்திப் புயமார்பன் வில்விசையன் கண்டெழுந்து
மேல்விழுவோ மென்று விசையனு மோடலுற்றான்
வேல்பொருதுங் கண்ணாள்மேல் வீழாமல் பிடித்திழுத்தார்
அலங்கோலப் படாதேயென்று அருச்சுனரைப் பார்த்துரைத்தார்

674 சோபமுற்று — மூர்ச்சையுற்று
679 உள்வாயில் சுக்கடக்கி ஊதுதல் — ஒருவகை மருத்துவ மரபு
700 எறக்கை — இறக்கை — இறகு போன்ற பாதம்
702 வெத்தி — வெற்றி

பெலங்கொண்ட அல்லியரும் பிரிதியாய்ப் பார்த்துநின்று
இருவரையும் பார்த்தாள் ஏறிட்டுப் பெண்பெருமாள்
மருவடிவு ராச வணிதமும் தான்பார்த்து
எவ்வூரு எப்பதியார் இயல்பா யுரையுமென்றாள்

## கண்ணன் அல்லிக்கு மறுமொழி கூறல்

அவ்வூரு மாற்றி ஆய னெடுத்துரைப்பார் 710
உத்திர பூமி உயர்ந்த அயோத்திபுரம்
சித்திரத் தேரேருந் தசரத ராமருக்கு
புத்தியுள்ள வீரர் புகழ்ராம ராசருக்கு
பத்தியாய்ப் பஞ்சாங்கப் பதிவான வேதியர்கள்
செஞ்சன எந்தன் சேரிழையாள் தங்கையர்க்கு 715
மஞ்சார் குழலாட்கு மணவாளன் காணுமிவன்
மாலையிட்ட நாள்முதலாய்—என் தங்கை—மையுறங்குங்
குடிவாழ்க்கை
மாலையிட்ட போதே—என் தங்கை—தாரையிட்ட கண்ணீர்கள்
ஆணழகன் மைத்துனற்கு ஆனை மதவலிப்பு
வேணளவும் பார்த்து மீறியிங்கே வந்தோமென்றார் 720

## தங்க இடம் கொடுத்தல்

அந்த மொழிகேட்டு அல்லியரும் ஏதுசொல்வாள்
சிந்தை கலங் கியிது சிவனார் செயலுமென்று
அழகு சவுரியமும் அனங்கனைப் போலிருக்க
சுழகு வலிப்புவந்து சூழ்ந்தமங்கை பாவமிதோ
பாதி மதிசூடும் பரம ரருளாலே 725
சோதி மணிமுடியார் சொக்க ரருளாலே
ஆதிபர மேசுவரி அங்கயற்கண் தன் னருளாலே
மேதினியில் தெய்வம் மீனாட்சி யருளாலே
வலிப்பு நிறுத்தி வரங்கொடுப்பாள் தப்பாது
பலிட்புண்டு உந்தனுக்குப் பஞ்சலெட்ச ணத்தாலே 730
அக்சரை யாய்க்கருமம் அகலுங்காண் பிராமணரே
சொக்கரைப் பூசைபண்ணுஞ் சுந்தரரைத் தான்பார்த்து
சிந்தை குளிரச் சிவனை வரங்கேட்டு
விந்தையுடன் கேட்டவரம் விதமாக வேகொடுக்க 735
இந்தப் புரோகிதர்க்கு இல்லிடமுந் தான்கொடுத்து
உந்த னருகில் உதவிசெய்யு மென்றருளி
எத்தனை நாளிருந்து ஏதேது கேட்டாலும்
அத்தனை நாள்சென்று அவரிருவர் போகமட்டும்

---

706 பெலங்கொண்ட அல்லி—பலம் பெற்று விளங்கும் அல்லி
708 வணிதம்—செப்பம், அழகு
719 ஆனை மதவலிப்பு—வலிப்பு நோய்
730 பலிப்புண்டு—வெற்றியுண்டு

சிந்தைமகிழச் சிவனாய் வைத்தீரென்று 740
சுந்தரர்க்குச் சொல்லிச் சுரிகுழலா ளல்லியரும்
உண்ணும் படிக்கும் உடுத்ததொரு சோமனுக்கும்
திண்ணுஞ்சில வுள்ளபணஞ் சீக்கிரமாய்த் தான்கொடுத்து
நன்றாக வைத்தீரென்று நாயகியாள் தான்கூறி
நன்றாகச் சுந்தரையர் நல்லதென்று கூறியபின் 745
வாக்குக் கொடுத்தாள் மதுரைக்கு நாயகியாள்
வாக்குப் பலித்ததென்று மன்ன ரருச்சுனரும்
தாக்கிச் சிறகைத் தலையில் முடியலுற்றார்
பாக்கியஞ் சேரல்லி பரிவாகப் போகியபின்
அற்றைநாள் சுந்தரைய்யர் அரமனையில் போயிருந்து 750
மற்றைநாள் ஆதித்தன் வந்துதித்த பின்பாக
சித்த மகிழ்ந்து ஸ்ரீராமர் சினேகிதரும்
பொற்றாம ரைக்குளத்தில் போய்த்தானம் பண்ணியபின்
பித்த னருச்சுனரும் பேய்பிடித்துக் கொண்டாப்போல்

## அருச்சுனனின் புலம்பல்

அத்தனே மைத்துனரே அறிவான அச்சுதரே 755
வலிமை யல்லி வடிவு திருவழகை
மெல்லி யரசு விளங்கு திருமுகத்தைக்
கண்டா லொழியக் கவலை தணியாது
வண்டுலவும் பூந்துளசி மாலை யணிமார்பா
கொண்டுபோ யென்னைவிட்டுக் குரோத மறுத்திருந்தால் 760
தெண்ட னிடுவேன் தேவரீர் பாதத்துக்கு
கண்ணரே யென்று கையெடுத்துத் தான்தொழுதான்

## கண்ணன் அருச்சுனனுக்குத் தரும் மறுமொழி

வண்ணப் புயமார்பன் மாயவரு மேதுரைத்தார்
அல்லடா அருச்சுனனே ஆணழகா நீகேளாய்
சொல்லடா சொல்லுகிறாய் சோர்வாய் தப்பாமல் 765
ஓடங்கடந்தால் ஓடக்காரனுக்குச் சொட்டு என்பார்
கோடங்கி சொன்னாலுங் கூட்டியே போறதில்லை
ஐய்யோ பெருமாளே அநியாயம் பண்ணாதே
பொய்யொருநாள் சொல்லேன் பொற்பாதம் நானறிய
என்னநீர் சொன்னாலுங் கேழ்க்கிறே னென்னாணை 770
வன்ன மணிமார்பா மாயவரே உம்மாணை
தூணைவிட் டேபிறந்த சுவாமிதனைத் தீண்டுகிறேன்
ஆணைவிட்டேன் தோஷமில்லை—யென்—அண்ணர்தர்மர்—
தானறிய

742 சோமன்—துணி
770 கேழ்க்கிறேன்—கேட்கிறேன்
771 வன்ன—வண்ண
772 தூணைவிட்டே பிறந்த சுவாமி—நரசிம்ம அவதார வரலாறு

## மாயன் அருச்சுனனைப் பாம்பாக மாற்றுதல்

மாயன் பெருமாள் மனதிலு பாயமுற்று
நேயமாய்க் கூட்டிவந்து நீண்டதொரு அவ்வனத்தில் 775
பழுதில்லா மாயவரும் பச்சைமூங்கில் தான்பிளந்து
எழுதறியாப் பெட்டி எண்ணறியாச் சீம்படக்கி
தெத்தினான பெட்டி தேடக் கிடையாது
எத்திசையும் போற்ற இமையோர்கள் கொண்டாட
பச்சைமூங்கில் பெட்டி பசும்பொன் ஒளிவிடவே 780
இச்சையுடன் பெட்டி யிலங்கு நவமணிகள்
மந்திரிச்சு நீரை மனத்தினிலே திஷ்டிச்சு
தந்திரமாய்ப் பார்த்தன்மேல் தப்பாமல் விட்டெறிந்தார்
ஆயிர மாற்று அபரஞ்சிப் பொன்னிறம்போல்
ஆயிரஞ் சூரியன் அணைந்து திரண்டாப்போல் 785
பாங்கான வில்விசையன் பண்பா யரவானான்
தீங்கில்லா நாகந் திசையெங்குஞ் சோதிமின்ன
அறிவு மறவாத ஐந்தலை நாகமதாய்
நெறிவு மறவாத நிசமாகப் பாம்பானான்
சீராம ராமர் சித்தரென வடிவுகொண்டார் 790
பேரான ராமர் பிரபலங்கள் கொண்டாட
பஞ்சுபட நரைத்துப் பழுத்த கிழவனைப்போல்

## முனியீசுபரனைக் கருங்குரங்காக மாற்றுதல்

கொஞ்சியே பாம்பாட்டக் குரங்கொன்று வேணுமென்று
மூங்கில் வனத்தில் முடுகியே தானடைந்து
மூங்கில் வனத்தில் முனியீசு பரனொருவன் 795
தீங்கொன்று மில்லாமல் சிவபாதஞ் சேரவென்று
பாங்காய்த் தவசிருந்தான் பச்சைமால் கண்டுகொண்டார்
கருத்த குழல்களைந்து கம்பிளிக் கயிறெடுத்து
கருத்தகுரங் காகவென்று வீசினார் கண்ணருமே
கடியமுனி யேசுரனார் கருங்குரங்கு தானானார் 800
நெடிய முகுந்தர்முன்னே நிசக்குரங்கு போல்நடக்க

## பாம்புப்பிடாரனின் தோற்றம்

பாம்புப் பிடாரன் பழுத்த தொருகிழவன்
பாம்புடையோன் மேல்விருது பத்துக்குத்துச் சல்லடமும்

---

778 தெத்தினான பெட்டி—தெத்து—ஏமாற்றுதல்
782 திஷ்டிச்சு—நினைத்து
786 அரவு—பாம்பு
790 சித்தரென வடிவு கொண்டார்—பாம்பாட்டிச் சித்தர்
795 முனியீசுபரன்—முனிவன்
803 சல்லடம்—இடுப்பினின்று அடித்தொடைவரைத் தரிக்கும் காற்சட்டை

பித்துப் பிடித்தலைக்கும் பேய்ச்சுரைக் குடுக்கையிலே
சித்தன் பிடித்தகையில் சீட்டிப்பதி னாருகண்ணு 805
சிக்கெனவே கச்சைகட்டிச் சிறக்கவே சொங்குவிட்டு
பக்கெனவே வல்லவட்டம் பாங்குடனே தான்போட்டு
காதிலே குண்டலமும் கதிரவன்போ லேதுலங்க
போதிலே நேமம் பூசித்து நேசமுடன்
துளசி மணிமாலை தோள்புரளத் தாவடங்கள் 810
பழைய பீதாம்பரம் பக்கமெங்குந் தொங்கவிட்டு
மோடி விருது முன்சல்லி சோடிணைகள்
நாடி தளர்ந்த நரைக்கிழவன் றாமதாசி
பவழவர்ணப் பெட்டியிலே பாம்பு தனைப்படைத்து
பவழவர்ண மூங்கில்தன்னைப் பாங்குடனே தப்பைபண்ணி 815
காலடிகள் கட்டிக் கணுமூங்கில் தண்டுணி

## முகுந்தன் அருச்சுனனைச் சுமத்தல்

மூவடிமண் தாரைகொண்ட முகுந்தர் மிகநோக்கி
பேடி யருச்சுனரைப் பெட்டியிலே தானடைத்து
நாடி நரைக்கிழவன் தள்ளாடித் தடுமாறி
வாள்கொண்ட கண்ணி மணவாளன் அருச்சுனனை 820
தோள்கொண் டெடுத்துச் சுமக்க விதியாச்சே
பாங்கான யென்பெருமாள் பதிவான பட்டணத்தில்
தீங்கில்லா ராமர் சினேகிதரைத் தான்சுமந்து
கருங்குரங்கு கைப்பிடித்துக் காவடியும் தோளில்வைத்து
திருவளருந் தென்மதுரை தெற்குத்திரு வீதியிலே 825
ஆம்பாரும் வேல்விழியாள் அல்லி கொலுமுகத்தில்
பாம்பாட்டிச் சித்தர் பதினா யிரம்பேரும்
கோலை முழுங்குங் கொளுமுழுங்கிச் ,சித்தரென்றும்
மாலை முழுங்கு மழுமுழுங்ச்கி சித்தரென்றும்
நூறுமார் சங்கிலியை நூல்போல வேமுழுங்கும் 830
பேருபுகழ் சித்தர்கள் பிரபலங்கள் மெத்தவுண்டு
மலக்கட்டுக் கட்டி மலைமுழுங்குஞ் சித்தரென்று
கலக்கட்டுப் போலிருக்குங் கடியதொரு சித்தர்களும்
பாம்பாட்டுஞ் சித்தர்கள் பதினாயி ரங்கோடி

---

805 சீட்டி—ஊதுகுழல்

807 வல்லவட்டம்—பூணூல் போல இடத்தோளின் மேல் அணியும் ஆடை

809 நேமம்—நித்திய கருமானுஷ்டானங்கள், விரதம் வழிபாட்டு முறைகள்

810 தாவடங்கள்—உருத்திராக்க மாலை
மோடி—மகுடி
விருது—பட்டம், வெற்றிச்சின்னம்
முன்சல்லி—ஆபரணத்தொங்கல்
சோடிணைகள்—காலணிகள்

817 மூவடிமண் தாரை கொண்ட முகுந்தர்—திருமால் வரலாறு

தாம்பாட்டுங் களம்போல ராமதாசி தள்ளாடி 835
சித்திகள் வாழுஞ் சிறந்ததொரு வீதியிலே

## பாம்பாட்டி மகுடி வாசித்தல்

பத்தி யிரங்கிப் பாம்புப்பொட்டி முன்னைவைத்து
பாம்புநல்ல சீட்டியைப் பாங்குடனே வாயில்வைத்து
பாம்புநல்ல சீட்டியைப் பாவகமாய் ராகமிட்டு
ஊதினான் மெள்ள உற்ற தொனிஎழுப்பி 840
ஊதினான் வித்தாரம் உத்திக்க விந்தைவிந்தை

## பல்வேறு ராகங்களில் மகுடி ஊதுதல்

வயிரவி ராகம் மதன கலைபாடும்
நயமுள்ள ராகம் நன்றாகத் தான்சேர்த்து
ஆம்போதி ராகம் அனுராகம் பாடுகுது
காம்போதி ராகம் கனத்த குரலெழுப்பி 845
சிற்றின்ப ராகஞ் சீராகப் பாடுகுது
பத்திய பேரின்பம் பரிவாகப் பாடுகுது
சூதிலே பதினெட்டு ராகமுஞ் சூட்சமதாய்

## மகுடி இசைகேட்ட கன்னியர்கள் நிலை

காதிலே கேட்ட கன்னியர்கள் சோர்ந்துவிழ
உதட்டியாய்க் கேட்ட பெண்கள் உடைகுலைந்து
சோர்ந்துவிட்டார் 850
பதற்றிக் கலைசோர்ந்தார் பதினாயிரஞ் சித்தர்பெண்கள்
கைசோர்ந்து மெய்சோர்ந்து கனக வளைசோர்ந்து
அய்யோ வெனவே யனத்தி வருவாரும்
மெய்ம்மறந்து யாரெனவே வினவியே பார்வையிட்டு
கையை நெறித்துக் கன்னத்தின்மேல் வைப்பாரும் 855
நெகிழ்ந்த கலையுடுக்க நினைவுகெட்டு நிற்பாரும்
நெகிழ்ந்த கலையை நேரே கிழிப்பாரும்
பதினாயிர ரம்பேரும் பாங்குடனே கூட்டமிட்டு
பதினாயி ரம்பேரும் பத்தி மனங்தேறி
ஒண்ணுமொண் ணாயொருவர் ஒருபுத்தி யாய்நினைந்து 860

## பாம்பாட்டிக் கிழவனின் பெருமை

இன்னு கெடுத்தாண்டி இவனொரு வன்கிழவன்

---

835 நாமதாசி—இராமதாசி—நாமம் தரித்த தோற்றம் நாமதாரி என்பதன் மரூஉவாக இருக்கலாம்.
841 வித்தாரம் உத்திக்க—திறமை விளங்குமாறு
853 அனத்தி—முனகி
856 கலை—உடை
861 இன்னு—இன்று

நரைக்கிழ வன்மேனி நவமணிபோல் துலங்குதடி
உரைக்கலா மெள்ளளவு ஒளிவுள்ள பாம்புமீது
பாம்பினிட சீட்டி பல்விதங்கள் பாடுதடி
பாம்பை விலைகொடுத்துப் பறித்து விடாதேவிட்டால் 865
நம்மகுடி கெட்டுதடி நாயகியே யின்றுமுதல்
அம்மடி ராகமிதை அல்லியருந் தான்கேட்டால்
தலையைச் சிரைப்பாள் தார்விலங்கு போடவைப்பாள்
உலையில் மெழுகாய் உருகியே உள்ளழிந்து
சேர் ஒருமித்துச் சித்திகள் தான்கூடி 870
பார் நரைக்கிழவன் பக்கத்தி லோடிவந்து

## பாம்பைத் தருமாறு வேண்டல்

நரைத்த கிழவர் ராமசோகிப் பாட்டாநீ
நரைத்த தலையிலே விதித்த விதியிதுவோ
பாமபைச் சுமக்கிறது பாட்டாவே ஞாயமல்ல
பாம்பைக் கொடுத்தால் பதினாயிரம் பொன்தருவோம் 875
ஊழியுள்ள காலமட்டும் உனக்குமுங்கள் பாட்டியர்க்கும்
மாளமட்டு முண்ணலாம் வாகாய்ப் பிழைத்திடலாம்
கூறுங்கோ பாட்டா கொடுத்துவிடு பாம்புதனை

## பாம்பின் பெருமை

வாருங்கோ சித்திகளே மதிகெட்ட வார்த்தை சொன்னீர்
பதினாயிரம் பொன்னும் பாம்புபல்லு விலையில்லையடி 880
பதிவான லட்சம்பொன் பாம்புவால் விலையாமோ
பொய்யாத லோகம் பொன்னுலோகப் பாம்பிதுகாண்
மெய்யா யடையாளம் பாருங்கோ வீரியனே
சற்சனமாய்ப் பொட்டினைத் தட்டியே ஊதலுற்றார்

## பாம்பைத் தரமாட்டேன் எனல்

அருச்சுனா மைத்துனா ஆணழகா கேட்டருளாய் 885
வித்துப்போடு வேனென்று வெதுப்புப் பிடியாதே
சித்திகளைப் பக்கீரி சீக்கிரமே யாக்கிவிட்டு
இராசகொலு அல்லியிட ரத்தினகொ லுவிலேதான்
வாசமுடன் கொண்டுசென்று மனத்துயர்மாத்தி வைப்பேன்
காவடிப் பெட்டியுடன் கட்டி நிறுக்குகிறேன் 890

---

874 ஞாயமல்ல—நியாயமல்ல
877 மாளமட்டு முண்ணலாம்—சாகும் வரையில் உண்ணலாம்
வாகாய்—வசதியாய்
886 வெதுப்பு—வாட்டு
887 பக்கீரி—பரதேசி
889 மாத்திவைப்பேன்—மாற்றிவைப்பேன்
890 நிறுக்குகிறேன்—நிறுக்கின்றேன்

மூவடியாய் மண்ணளந்த மூர்த்தி முதல்வனுந்தான்
காசுமுத லில்லாமல் கடுகப் பிரித்துவிடு
மோசமுடன் சித்தர்களை முடிவாய்க் குடிகெடுக்க

## பாம்பின் அழகிய ஆட்டம்

பாருங்கோ வென்று பாம்புப்பெட்டி தனைநீக்கிக்
காருங்கோ வெனத்தொழுதார் கடிதான அர்ச்சுனரும் 895
பாரளந்த மாயவரும் பாம்புச்சீட்டி ஊதலுற்றார்
தாரளந்த கால்தனையே சதிராக மண்டியிட்டு
மாயவருந் தான்துணிந்து வலதுதுடை யாட்டலுமே
ஆயிரஞ் சூரியன்போல் அழகுள்ள நாகமது
அஞ்சு சிரசும் அகலப் படம்விரித்து 900
கொஞ்சிவிளை யாடுகுது கோவிந்தர் முன்பாக
ஆடுகிற வித்தாரம்—அதிரே-மடையர்கள் சோர்ந்துவிழ
பாடுகிற சீட்டியும் பாம்பினிட தன்னொளியும்
கண்டறியோங் கேட்டறியோங் கதிரவன்போல் மேனியிது
கண்ட பெண்களெல்லாம் காதல்கொண்டு நிற்பாரும் 905
அம்பா யொருமித்து அனைவருஞ் சித்திகளும்

## பாம்பின் விலை கேட்டல்

இன்பமாய் ராமசோகியிந்த பாம்புவிலை கூறுமென்றார்
காம்புரமாய் மாயவருங் கருதியே யேதுரைப்பார்

## பாம்பின் எடைக்கு எடை பொன் வேண்டல்

பாம்பு மொருதட்டில் பணமுமொரு தட்டிலேதான்
நிறுத்தால் கொடுப்பனடி நீலவர்ணச் சித்திகளே 910
உருத்தாகச் சித்திகளும் உகந்துமே நல்லதென்றார்

## பல்வேறு அணிகலன்களையும் எடைபோடல்

ஒருபுறத்துக் காலடியில்—பாம்புப்—பெட்டி தனைத்தூக்கி
ஒருபுறத்துக் காலடியில் கொப்பாளப் பொட்டிவைத்து
கொண்டுவந்து கொட்டினார் குலப்பணங்க ளுள்ளதெல்லாம்
வண்டுலவும் பெட்டியிலே வகையாகப் பாதியில்லை 915
பண்ணும் பணுதி பணுதிவர்க்க முள்ளதெல்லாம்
எண்ணுரத் தினமாலை ஏற்கவொரு தாவடங்கள்
ஆடை வராகன் ஆனமுத லுள்ளதெல்லாம்

---

891 மூவடியாய் மண்ணளந்த மூர்த்தி—திருமால் வரலாறு
895 காருங்கோ—காத்தருளுங்கள்
896 பாம்புச்சீட்டி—மகுடி
901 வித்தாரம்—அழகு
908 காம்புரமாய்—கம்பீரமாய்
916 பணுதி, பணிதி—ஆபரணம்

தேடிய வெள்ளிபொன்னுந் திகைத்த மணிதிகளும்
தண்டிய செப்பு சட்டிகள் நொறுங்கடிச்சு 920
கொண்டுவந்து கொட்டியுங் குறைச்சல் நிறையாது
ஆலிய சித்திகள் அடிக்கழுத்துத் தாலிகளுந்
தாலியெல்லாம் பிடுங்கச் சரியாய் நிறையாச்சு

## பாம்பினைத் தந்துவிட்டு அணிகலப் பெட்டியை எடுத்துச்செல்லல்

பாம்பாட்டிச் சித்தன் பண்பாய் மனமகிழ்ந்து
பாம்புநல்ல பெட்டியைப் பதறித் தலையில்வைத்து 925
கொப்பாளப் பெட்டியைக் கொடுங்கை கொடுத்திடுக்கி
பூப்பாய் வனம்நோக்கிப் போய்ப்புகுந்தார் மாயவரும்

## பெண்கள் அப்பெட்டியைத்தூக்குதல்

பாங்காகப் பொட்டியண்டே சித்திகளும் பக்கல்சென்று
தாங்கி யெடுக்கத் தங்களால் ஆகாமல்
வருந்தி முடியாமல் மதிகெட்டுச் சித்தியர்கள் 930

## பெண்கள் ஏமாந்து புலம்பல்

இருந்த நலப்பணமும் எல்லாம் பறிகொடுத்து
எத்திப் பறித்தாண்டி ஏழைமதி யானமடி
புத்திகொஞ்சம் பெண்களென்று பூவுலகில் சொல்வார்கள்
அந்தப் புதுமை ஆச்சுதடி நம்மபக்கல்
எந்தவிதங் கண்கட்டு இதமருந்து செய்தானோ 935
மாயவித்தைக் காரனடி வன்கிழவ னென்றிருந்தோம்
ஞாயமாய்ச் சித்தர்கள் நகைப்பார்கள் கேட்டிடிலும்
எத்தனை புத்தி யிருந்தாலு மென்னாச்சு
சித்த னொருவன்வந்து சிறந்த முதல்பறித்தான்
வெக்கம் வெளிப்படுத்த வேண்டாங்காண் சித்தியளே 940
பக்கம் புலம்பிப் பதறியே சித்தியர்கள்
தொடர்ந்தார்கள் சித்தியர்கள் துருசாய்த் திசைநோக்கி
அடர்ந்த வனங்கடந்து அப்புறமே போகையிலே

---

920 தண்டிய—வசூலித்த
922 ஆலியசித்திகள்—ஆலுதல், மகிழ்தல்
932 எத்தி—ஏமாற்றி
937 ஞாயமாய்—நியாயமாய்
940 வெக்கம்—வெட்கம்
942 துருசாய்—வேகமாய்

5

## மாயவனார் பெட்டியை மறைத்துவிடுதல்

சித்தியள வாற் திறமறிந்து மாயவனார்
எத்திய பொட்டிதனை எளிதா யொளித்துவிட்டார் 945
உபாய நடைநடந்தார் உத்தமனார் ராமசோகி
அபாயமே செய்தையென்று அடர்ந்துமிகக் கண்டார்கள்
போகாதே நில்லுமென்று பின்தொடர்ந்தார் சித்தியர்கள்
வாகாகப் போய்வளைந்தார் வந்துநல்ல சித்தியளும்

## பணத்தைக் கேட்டல்

எங்கள் குலப்பெண்கள் எத்தாய்ப் பறித்துவிட்டாய் 950
தங்க உடமைகளுஞ் சருவமு முன்னுதுகாண்
நாக மிருக்கும்பொட்டி நாங்க நகர்த்தமுடியாது
யோகமென்று மாய னுபாய மனதிலெண்ணி
பதினாயிரஞ் சித்தியளிக்கும் பதினாயிரஞ் சித்தரைப்போல்
எதிரே யிழுத்தசித்தர் இல்லைஇல்லை யென்றுகெஞ்சி 955

## பாம்பை எடுத்துப் போகச்சொல்லுதல்

பாம்பை யெடுத்துப்போ பாட்டாநீ யென்றுரைத்தார்
வீம்பை யெண்ணிமீண்டார் விதமான மாயவரும்
பெட்டி யுடன்பாம்பைப் பிரீதியுடன் காலடியில்
தட்டிய தோள்கொண்டு சடுதியில் தானெடுத்து
பட்டணத்து வீதியிலே பாங்காய் நடந்துவந்தார் 960
திட்டமுடன் அல்லியிட தெருவீதி தான்வரவே
கண்ட தொருதாதி கடுகியே ஓடிவந்து

## அல்லியிடம் செய்தியைக்கூறுதல்

தெண்டனிட்டு அல்லிபக்கல் சேதிவகை கூறவென்று
மாலை யொதுக்கி வகையாடை தானொதுக்கி
சேலை யொதுக்கிச் சிறக்கவே தெண்டனிட்டு 965
வாரி யெழுந்திருந்து வாய்பொத்திக் கைகள்கட்டி
பேரில் பெரிய பெருமையுள்ள நாயகியே
திங்கள் நுதலாளே திருவென்னும் பெண்ணரசே
எங்கள் குலக்குருவே இளவரசே கேட்டருள்வாய்
பாம்பாட்டிச் சித்தன் பழுத்த கிழவனம்மா 970
பாம்பு நிறம்பார்த்தால் பதினாயிரஞ் சூரியன்போல்
பாம்புச்சீட்டி பூதுறது பரலோகங் கேட்குதென்றார்
பாம்பி னுடபொட்டி பரஞ்சோதி மின்னுதம்மா

---

958 பிரீதியுடன்—மகிழ்வுடன்

963 தெண்டனிட்டு—வணங்கி

973 பாம்பினுட பெட்டி—பாம்பினுடைய பெட்டி

## அல்லி அழைத்து வருமாறு கூறல்

அந்த மொழிகேட்டு அல்லியெனும் பெண்பெருமாள்
விந்தை யுடனே விதமா யழையுமென்றாள் 975
ஓடி யழைத்தார்கள் ஒருநொடியில் தாதியர்கள்
தேடி யழைத்துவந்தார் சிங்கா சனத்துமுன்னே

## மாயவரின் கிழத்தோற்றம்

இரணியனைக் கொன்ற எம்பெருமாள் ராமசோகி
தரணியில் நாணல்பூப் போலத் தலைமயிரும்
பாகல் பழம்போலப் பழுத்ததிரு மேனியுமாய் 980
ஆகங் குளிரும் அன்பான சீட்டியுடன்
கூனி நடந்து குரங்கொன்று கைப்பிடித்து
நாணியடி வைக்குமுன்னே நாலேழ் விசையிருமல்
தண்டிய அல்லி சமுகசிங் காசனத்தில்
மண்டியிட் டொருகாலை வகையா யிருந்துகொண்டு 985
பதினாறு கண்ணுடைய பாம்புச்சீட்டித் தானெடுத்து
பதிவாக அல்லிமுன்பு பாங்குடனே கைப்பிடித்து

## மகுடி இசை

மண்டலங்கள் பதினாலு உண்டகனி வாயைவைத்து
குண்டலங்கள் தானசையக் குலுங்கவே மூச்சடக்கி
பதினெட்டு ராகம் பாடுகிறார் மாயவரும் 990
எதிரண்டை நிற்கும் ஏந்திழையாள் சோர்ந்துநின்றார்
முத்துக் கவரியிடும் மோகினியாள் சோர்ந்துநின்றார்
பத்திக் கவரியிடும் பாங்கிமார் சோர்ந்துநின்றார்
அல்லி யரசாணி அரக்காகத் தானுருகி
அல்லி யரசாணி ஆனசித்த னைப்பார்த்து 995

## அல்லி அரவத்தை ஆடச்செய்யுமாறு வேண்டுதல்

அண்ணரே ராமசோகி அரவஞ்சற்றே ஆட்டுமென்றாள்
வண்ணரும் வாய்திறந்து வகையேது கூறுகின்றார்
அல்லியர சேஅரவம் ஆட்டுவேன் தப்பாது
மெல்லி யென்தங்கை மீதொருத்தி பேரழகி
வண்ணமார் தோள்மேலும் மருவிவிளை யாடுமிது 1000

---

978 இரணியனைக் கொன்ற எம்பெருமாள்—திருமால் அவதார வரலாறு
983 நாலேழ் விசையிருமல்—விசை—தடவை
988 மண்டலங்கள் பதினாலு உண்டகனி வாயைவைத்து—மாயவனின் [அற்புதச்செயல்
991 எதிரண்டை—எதிரில்
997 வண்ணரும்—கிருஷ்ணனும்
1000 வண்ணமார்—அழகியமார்பு

உன்னையிப்பக் கண்டால் ஓடிவருந் தப்பாது
மயங்கினாப் போலேமணி மெத்தைமேல் சாய்ந்துகொண்டாள்
தயங்கிய வித்தாரந் தயவாய் விளையாடும்
சித்திர மாகத் திரும்பிவருந் தப்பாது
பத்தினியே அச்சம் பரிவாகத் தோணுகுது 1005
அச்சப் படவேண்டாம் ஆதரவாய் விட்டுவிடு
மெச்சு மொழிகேட்டு விபரமா யேதுரைப்பார்

## பாம்பாயிருந்த தனஞ்செயனை ஆடுமாறு மாயவன் பணித்தல்

சற்பன்ன பாசையிலே தனஞ்செயனே கேளுமென்று
விற்பனா மைத்துனரே மேவும் நதிச் சமயம்ப்போ
போவென்றால் போவாய்நீ வாவென்றால் வந்துவிடு 1010
ஆவென்று ஆணையிட்டால் அனுப்புகிறே னிப்போது
அந்த மொழிகேட்டு அருச்சுனரும் கூறுவராம்
எந்த னுயிர்காக்கும் ஸ்ரீகேச வாசவரே
போவென்றால் போறேன் வாவென்றால் வந்திடுறேன்
நானின்று தப்பால் நாரணரே நான்கேட்பேன் 1015
இத்தனை நாள் போலயல்லோ யின்றுமினிச் சொன்னபுத்தி
இத்தனை நேரமுண்டோ யென்னை யனுப்புமையா
நல்லதென்று மாயவனார் ரத்தினப்பொட்டி தனையவிழ்த்து
மெல்லதா யூதினார் விதமாய்த் தொனியெழுப்பி
ஆம்பமாய்ப் பொட்டி அறிவாகத் தாள்திறந்து 1020

## அல்லி மடிமீது பாம்பு ஆடும் அழகு

பாம்பையு முன்னேவிட்டுப் பாம்புச்சீட்டி ஊதலுற்றார்
ஆலித் தெழுந்திருந்து அஞ்சு படம்விரித்து
கோவித் தெழுந்து குடைபோல் படம்விரித்து
வாலிமை யாய்த்தமது வயதுபதி னாறதுபோல்
ஒலிமைசிம் மாசனத்தை உரிமையாய்ப் பார்வையிட்டு 1025
சீரிய நாகஞ் செங்கண்ணால் தான்பார்த்து
மாறி விழுந்துசைகை மாயமாய்ப் படமொதுக்கி
அல்லி யிருக்குமந்த ஆசாரம் போயேறி
அல்லி மடிமீதில் ஆணழகன் போயேறி

---

1001 இப்ப—இப்பொழுது
1008 சற்பன்ன பாஷை—பாம்பு பேசுகின்ற மொழி
1016 இத்தனை நாள் போலயல்லோ-இவ்வளவுநாள் இருந்தது போலன்று
1022 ஆலித்து—ஒலித்து
1024 வாலிமையாய்—இளமையாய்
1028 ஆசாரம்—மாளிகை அல்லது வீட்டின் ஒரு பகுதி

வில்லி யருச்சுனனார் விதமாய்ப் படம்விரித்து 1030
அல்லி மயங்கிடவே ஆடினான் படமழகாய்

## அல்லியின் மயக்கம்

பாம்பி னழகும் படத்தின் முடியழகும்
ஆம்பமாய் அல்லிகண்டு அறிவுகளும் மெய்சோர்ந்து
சோம்பல் வந்துமூடிச் சொக்குப் பிடித்தாப்போல
தாபமாய்ப் பஞ்சணைமேல் சாய்ந்தாளே அல்லியரும் 1035
மேவி விளையாடி விசையனும் போய்ப்படுத்தான்
தாவி விளையாடித் தலைக்குங்கா லுக்குமொன்றாய்
சீராக வேபடுத்துத் திரண்ட ஸ்தனகிரிமேல்
நேராக முகமணைத்து நிதம்பியே முத்தமிடும்
சோர்வாகத் தோளணைந்து துவண்டு விளையாடும் 1040
மார்மேல் புரண்டு மகுடம் பிடித்தாப்போல்
கடுகத் தலைமுலைமேல் கருதிவைத்து மையலினால்
நெடுகப் படுத்தான் நெளிக்கவில்லை அருச்சுனனார்

## கண்ணன் தனஞ்செயனை வருமாறு அழைத்தல்

தற்பமுடன் பாம்பாட்டுங் தாமோ திரப்பெருமாள்
சற்பன்ன பாஷையிலே தனஞ்செயனைத் தானழைத்தார் 1045

## தனஞ்செயன் வர மறுத்துக் கண்ணனை ஏளனம் செய்தல்

போடா யிடையாநான் பொய்சொல்லிப் போட்டுவந்தேன்
கூடா திடையாபோ குட்டிதின்னு முங்கள்குலம்
நாட்டு மிடையாபோ நான்வார தில்லையில்லை
வீட்டுக்கு வீடுமக்கு விதித்தகட னுண்டோடா
வழித்துணைதா னில்லையென்று வந்தனடா உன்பிறகே 1050
வழித்துணை யைப்பார்க்க வாய்ச்சதுணை யாச்சுதிப்போ
வழியே துணையைநத்தி வந்தால் பயனேது?.
பொழுதேதான் போகாட்டால் பூங்கொடியாள் வாசலிலே
கடுக்கிய காராவுங் கண்ணுகளும் மெத்தவுண்டு
முடுக்கிப்போய் மேய்த்துவந்தால் மூன்றுசோ றுண்டுகண்டாய்
கோவில் சோறுண்டு கூடங்கள் மெத்தவுண்டு

---

1034 சொக்குப்பிடித்தல்—மயங்குதல்
1035 தாபம்—விரகதாபம்
1049 வாரதில்லை—வருவதில்லை
1051 வாய்ச்ச துணை—வாய்த்த துணை
1054 காரா—பசுக்கள்
கண்ணுகள்—கன்றுகள்
1055 முடுக்கி—விரட்டி

காவில்தென் மதுரைபோல் கருதினால் கிட்டாது
மார்பைவிட்டு நானும் வாரதில்லை உன்னருகில்
நேர்மையிந்தக் கோவிலிலே நிசமாகப் போயிரென்றான்

## ஆயன் கோபம் கொள்ளல்

ஆம்பமாய்ச் சொற்கேட்டு ஆயனுக்குக் கோபம்வந்து *1060*
பாம்புக் கமிர்தம் பலநாள் கொடுத்தாலும்
காட்டுமே அவ்விஷத்தைக் காரியம்போல் மெய்யாச்சு
தீட்டுமரத் திற்கதுமை திறம்பார்த்த சேவுகன்போல்
இகழ்ந்துமொழி சொல்வதிந்த ஏந்திழையாள் தன்பொருட்டோ
நிகழ்ந்து விடாமல் நேர்செய்த தின்பகையோ *1065*
ஆகட்டுங் கங்கையும் அன்பாக மூன்றுபிழை
போகட்டும் பொறுப்பது பூவுலகில் சொல்வதுபோல்
இன்ன மறிவோம் இவன்மனதை யென்றுரைத்து

## அல்லி கோபப்படுவாள் எனல்

வண்ண மணிமார்பன் மாயன் மனதடக்கி
தன்மா சகோதரனே தனஞ்செயனே வாடாநீ *1070*
வன்மமுள்ள அல்லி மதவானை போலெழுந்தால்
என்னையும் உன்னையும் இருதுண்டாய் வெட்டிடுவாள்
பின்னை வராது பிராண அபாயம்வந்தால்
பாரமில்லை யென்னாதே பதையாதே வாருமென்றார்

## அருச்சுனன் வருவதில்லை என மறுத்தல்

வாரதில்லை வாரதில்லை மாட்டிடையா போடாநீ *1075*
உன்னாலே யாவதென்ன ஊருக்குப் போய்ப்பிழையும்
மின்னாள் தனத்தைவிட்டு மீண்டுநான் வாரதில்லை
என்றுரைத்தான் பார்த்தான் எம்பெருமாள் கோபமுற்று

## ஆயன் கோபமுற்று உன்னை அழிப்பேன் எனல்

நன்றுரைத்த தாலே நன்மை தெரியானென்று
இரணியனைக் கொன்றநக மிருக்குதடா யென்கையிலே *1080*
திரணமாய்ப் பேசுகிறாய் சின்னபின்ன மாய்க்கிழிப்பேன்

---

1059 போயிரென்றான்—போய்விடு என்றான்

1060 ஆம்பமாய்—கர்வமான

1063 கதுமை—கூர்மை;
தீட்டுமரத்திற்கதுமை திறம்பார்த்தல்போல்-தீட்டியமரத்தையே பதம் பார்த்தல்போல் என்னும் பழமொழிப் பொருளைக்கொண்ட உவமை

1070 தன்மா சகோதரன்—தருமருடைய சகோதரன்

1071 மதவானை—மதயானை

1081 திரணமாய்—உறுதியாய்

## அர்ச்சுனன் தெளிவடைந்து மன்னிப்புவேண்டுதல்

அந்த மொழிகேட்டு அர்ச்சுனரு மேதுரைப்பார்
விந்தை அல்லிமையல் விசையனுக்குத் தான்தெளிந்து
என்ன யிருக்க என்னபுத்தி நான்நினைந்தேன்
என்ன மனதில் எண்ணிக் கிலேசமுற்று *1085*
மண்டலங்கள் பதினாலும் வாகாக உண்டவரே
எண்டிசையும் போற்ற இரணியனைக் கொன்றவரே
சங்குடனே சக்கரமுந் தான்தரித்த மாயவரே
இங்குநான் செய்த குற்றம் ஏதேதிருந்தாலும்
மாயனே நீரும் மனம்பொறுக்க வேணுமையா *1090*
ஆயனே என்னை ஆதரிக்க வேணுமையா
வித்துநீ பயிருநீ விளைவும்நீ செங்நெல்லும்நீ
கொத்தும்நீ குலமும்நீ குழந்தைதந்தை யன்னையும்நீ
மற்றொருவர் தானுமுண்டோ வாள்பயிரைத் தான்காக்க
பித்துப் பிடித்தாற்போல்–பெண்–மாய்கையிலே சிக்கிவிட்டேன்
ஒத்துமே நீரெமக்கு யிருமனது மொருமனதாய்
குத்தம்விடில் நான்வருவேன் கும்பிடுவே னுன்பாதம்
ஆட்டினீ ரின்னேரம் அல்லியிட முன்பாக
காட்டிவைத் தீரிந்த கன்னிஅல்லி தன்வடிவை
வாசம் பொறுக்குதில்லை மயக்கம்மெத்த எந்தனுக்கு *1100*

## அல்லியின் வாசம் மேனியில் வீசுதல்

ஆசைகொண்ட பாலியற்கு ஆதரவு பண்ணாமல்
வாருமென்று சொன்னீர் மாயவரே வந்திடுவேன்
மார்பெல்லாஞ் செண்பகப்பூ வாசமே வீசுதையா
சென்னிமே லெல்லாஞ் செந்தாழைப்பூ வீசுதையா
கண்ணிமை யெல்லாங் கத்தூரி வீசுதையா *1105*
செந்தா மரைமலர்போல் சிறந்த திருவாயில்
மந்தார மாலையைப்போல் வாசமே வீசுதையா
கன்னி யிளங்கழுத்து களபமே வீசுதையா
சொர்ண மிருபுயமுந் தூளிதமே வீசுதையா
பாண்டிப்பெரு மாள்மார்பில் பதிந்தமு லைகளிரண்டும் *1110*
தாண்டி ஸ்தனகிரியள் தாழம்பூ வீசுதையா
ஆலிலை போல அமர்ந்த திருவயிறும்
மாலிமைசேர் மல்லிகைப்பூ வாசமே வீசுதையா

---

1085 கிலேசம்—துன்பம்
1086 வாகாக—எளிதாக
1094 வாள்பயிர்—வாடிய பயிர்
1108 களபம்—சந்தனம்
1110 தூளிதம்—பூந்தாது

மின்னல் கொடிபோலே மிகுந்த திருவிடையில்
கன்னி யிடைகளெல்லாங் கத்தூரி வாசமய்யா 1115
தண்ண லிருதுடைசெந் தாமரைப் பூவாசம்
கன்னி வரால்போலே கணைக்கா லிரண்டினிட
பாதங்கள் வாசம் பரிமளமே வீசுதையா

## அல்லியினை மணம் முடித்துவைக்க வேண்டல்

பூதங்க ளைந்தும் புலன்கள் ததும்பாமல்
உன்பெருமை என்மனதி லொருக்காலும் நான்மறவேன் 1120
என்பெரு மாளே எனக்கான மைத்துனரே
ஆசைமிகு அல்லிதனை அறுதியா யெந்தனுக்கு
வாசமிகு மாலையிட்டால் மனது பொறுப்பனையா

## அச்சுதனின் ஆறுதல் மொழி

அந்த மொழிகேட்டு அச்சுதனா ரென்சொல்லுவார்
சிந்தை கலங்காதே தேர்விசையா யுன்னாணை 1125
எந்த விதத்திலேயும் ஏந்திழையாள் அல்லிதனை
உந்தனுக்கு மாலையிட உபாயம்நான் சொல்லுகிறேன்

## இம்முறை திரும்பி வருமாறு அழைத்தல்

இந்த விசைவாடா யிசகுவரப் போகுதென்றாள்
அந்த மொழிகேட்டு அர்ச்சுனன் படமொதுக்கி
வந்தான் சரிரென்று வண்மையுள்ள தேர்விசையன் 1130

## மாயனும் பாம்புப்பெட்டியில் அருச்சுனனை அடக்குதல்

பந்தமாய் மாயவரும் பாம்புப்பெட்டி தனைநீக்கி
மார்பழகன் வில்விசையன் மண்டலமிட்டே படுத்தான்
பாரளந்த ரகுராமன் பாம்புப்பெட்டி தனைவீக்கி
கட்டினார் பெட்டிதனைக் கம்பளிக் கயிற்றாலே
தட்டினார் பொட்டிதனைத் தாமோதரப் பெருமாள் 1135

## அல்லி பாம்பாட்டியை மகிழ்வித்தல்

சோபந் தெளிந்தல்லி துணுக்கென் றெழுந்திருந்து
தாபந் தணிந்துதன் சரீரமெங்கும் தான்பார்த்து
புளகித மாய்மேனி பூரித்துப் பெண்பெருமாள்
அழகிய பாம்பு அணைந்ததிரு மேனியெங்கும்
பொங்கமுடன் கத்தூரி புளகிதமே வீசுதையா 1140
செங்கழுநீர்ப் பூவாசம் வீசுதையா தேன்மொழிக்கு
பொன்னிலோக வாசனை யென்றறிந்து வூங்குழலும்

---

1128 இந்த விசை—இந்த முறை
1136 சோபம்—தூக்கம்
1138 புளகிதமாய்—மகிழ்ச்சியால் பூரித்து

கன்னியரு ளல்லி கண்டார் அகமகிழ்ந்து
பாம்பாட்டிச் சித்தரே பக்கமே வாருமென்று
சோம்பாய்த்தன் ஆபரணஞ் சூட்டினாள் பூஷணங்கள் 1145
வேணுமென்ற திரவியமும் மெய்யாக வேகொடுத்து
பேணு மதுரைவிட்டுப் பிசகாதே யிங்கிரென்றாள்
பத்தி யுடனல்லி பாம்பாட்டி தனையனுப்ப
அத்திசையில் சூரியனும் அஷ்தகிரி போயடைந்தான்
தூண்டிப்பின் மற்றைநாள் சூரியனும் வந்துதித்தார் 1150

## பாண்டிப் பெருமாளின் பன்றி வேட்டை

பாண்டிப் பெருமாள் பன்றிவேட்டை போகவென்று
வெள்ளானை மேலே வீர முரசறைந்தான்
சுள்ளான எக்காளை தூருபிடி போல்முழங்க
அம்பத் தாறுகாதம் ஆளோலை போகவிட்டு
தென்புற்று ராசர் சேதி யறிந்துடனே 1155
அங்கங்கி லுள்ள அதரசூர வீரரெல்லாம்
அங்கங் கிருந்த அரசர்படை ராணுவங்கள்
வேட்டைக் குழல்காரர் வேணடுக் வலைக்காரர்
வேட்டைக்கு நாய்களும் விதவிதமே தான்பிடித்து
அந்தப் பொழுதே அக்கணமே கூட்டமிட்டு 1160
வந்து நிறைந்தார்கள் மகாகோடி மன்னவர்கள்

## அல்லியின் புறப்பாடு

பூங்கொடி யாளெழுந்து பொழுது விடியுமுன்னே
தீங்கில்லா வைகைதனில் தீர்த்தமுந் தானாடி
ஈரத் துகில்களைந்து இளையநல்ல பட்டுடுத்தி
ஈரம் உலத்த இணைகவரி தான்வீச 1165
ஜோதி மயிரைக் குளிர்ச் சிணுக்கறுத்து
மாதுசேர் கூந்தல் மயிர்முடிந்து பின்போட்டு
மாதளம்பூச் சேலை வகையாகக் கொய்துடுத்தி
நீதமுடன் தோழியர்கள் நிறைந்தெங்குஞ் சூழ்ந்துவர

## வழிபாடு

சொக்கருட சன்னதியில் துருசாகப் போய்ப்புகுந்தாள் 1770
சொக்கருட னங்கயற்கண் அம்மனையுந் தான்துதித்து
தக்கால மீனாட்சி பாதமே தான்தொழுது
முக்காலும் வலம்வந்து மூவிருகால் தெண்டனிட்டு
அட்சதையும் விபூதியும் அணிந்தாள் திருமுகத்தில்

---

1149 அஷ்தகிரி—சூரியன் மறையும் மலை
1165 உலத்த—உலர
1166 சிணுக்கறுத்து —சிக்கல் நீக்கி

மெச்சித மாயவர்க்கு விபரித்து அல்லியரும் 1175
பொன்னின் படிகடந்து பொற்கோபு ரங்கடந்து
மின்னு மணிவாசல் வெள்ளிப் படிகடந்து

## உணவருந்தல்

தெள்ளிய தென்மதுரை திறமாளும் நாயகியாள்
ஒள்ளிய போசனம் மாளிகையி லுள்புகுந்தாள்
போசனத்துத் தாதியர்கள் பொன்தடுக்குத் தான்போட்டார் 1180
ஆசனத்து மேலே அல்லியருந் தானிருந்தாள்
மற்றுமுள்ள தோழியர்க்கு வர்ணத் தடுக்குமிட்டார்
இத்துடனே பாங்கியருக்கு யிணைவிரித்தார் பாவாடை
சேந்தயிணைத் தோழியருக்குச் செம்பொன் தளுகைவைத்து
பாந்தள்வெண்சா மரைவீசும் பாவையர்க்கு வெள்ளியினால்
வண்ணமற்ற தோழியற்கு வாழை யிலைபோட்டு
தண்ணீர் தெளித்துத் தங்கப்பூஞ் சாயநல்லாள்
வானுலகுச் சம்பா வகையான போசனமும்
தேனிலும்பா சிப்பருப்புச் சீராக வேபடைத்து
பத்து வகைக்கறியும் பச்சடியுந் தான்படைத்து 1190
கொத்துக் கறியுங் குழம்புவகை யும்படைத்து
புத்துருக்கு நெய்யைப் போதவே தான்சொரிந்து
அத்துட னேஅடிசில் அமுதுசெய்த பின்பாக
சீவுகிண் ணம்வைத்துச் செம்பாலத னைச்சொரிந்து
தாவுபெரு முக்கனியுஞ் சர்க்கரையுந் தான்போட்டு 1195
கொண்டு பிசைந்து கோதைமார் தாதியர்கள்
உண்டு சுகித்து ஒருமித் தெழுந்திருந்து
கைபூசிக் கொண்டு கன்னியர்க ளெல்லோரும்
மெய்பூசி களபமல்லி வீற்றிருந்தாள் தன்கொலுவில்
பொன்பூட்டுந் தாதி பொற்கொடிமார் தானெழுந்து 1200
வன்பூட்டுக் கொண்டு மடப்பள்ளி தாள்திறந்து
பரிமளப் பெட்டி பணுதிவர்க்கப் பெட்டிகளும்
சரிவரத் தாதி சவுந்தரிமார் கொண்டுவந்தார்
திருவாய் மொழியாள் திருமேனி தீண்டவல்லார்
அருகாக நின்று அச்சமாய் மேனிதொட்டு 1205

## அல்லி அலங்காரம்

அல்லிக்கு அல்லி அதிரூப தோழியர்கள்
மெல்லியர்க்குப் பாதாதி கேசமுதல் புனுகணிந்து
சல்லடங் தொட்டுச் சரிகை ரவுக்கைதொட்டு

---

1184 தளுகை — தளிகை, உணவு
1202 பணுதிவர்க்கப் பெட்டிகள் — ஆபரணப்பெட்டிகள்

சல்லடத்து மேலையொரு சரிகைப்பொன் பட்டுடுத்தி
அல்லிக் கிசைந்த ஆபரண மேதேது 1210
வல்லி திருமுடிமேல் வளமான குப்பியிட்டு
குப்பியின்கீழ் முத்துக் கோர்வை யசைந்தாட
ஒப்பிய நெத்திச்சுட்டி ஒளிவுபெறு சந்திரன்போல்
மேல்காதில் கொப்பணிந்து விபரீத அல்லியரும்
நால்காதம் பொன்னொளிவு நளினகெவுந் தளஓலை 1215
கண்ட சரமாலை கழுத்தில் பதக்கம்மின்ன
தண்டமிடு சீனிமணி தரிப்புடைய சிந்தாக்கும்
தங்கச் சரந்துலங்க தாள வடந்துலங்க
மங்கைமார் பில்பதக்கம் வகையா யசைந்தாட
தோள்வந்தி நற்கடையந் துய்ய பவளமிட்டு 1220
மீள்வந்தி பொன்வளையல் மீந்ததிருக் காப்பணிந்து
கைவிரலுக் கேற்ற கணையாழி சோதிமின்ன
மெய்யிடையி லொட்டியாணம் விதமா யொளிகாட்ட
பாடகந் தண்டை பதிந்த கொலுசணிந்து
ஆடகப் பொன்சலங்கை அழகிய பாதசரம் 1225
பாதாதி கேசமுதல் பணுதிவர்க்க முள்ளதெல்லாம்
வேதாவும் கொண்டாடும் மெய்ப்பான அல்லியவள்

## வேட்டைக்குப் புறப்படல்

வேட்டைக்குப் போகவென்று விபரீதப் பெண்பெருமாள்
கோட்டைத்தலை வாசலிலே கூட்டமிட்டாள் ரானுவத்தை
அல்லிவந்தா ளென்று அரசர்படை தெண்டனிட்டார் 1230
வல்லமையா யல்லி வந்து இருக்கையிலே

1211 குப்பி—சடைக்குச்சு, 'குருகையூரார் தந்த குப்பியுந்தொங்கலும்' (குற்றாலக் குறவஞ்சி-124)
1213 நெத்திச்சுட்டி — நெற்றிச்சுட்டி
1214 கொப்பு—மகளிர் காதணிவகை
1215 தளஓலை—மாணிக்கவோலை
1216 கண்டசரம்—கழுத்தணிவகை
1217 சிந்தாக்கு—அட்டிகை வகை
1218 தாளவடம்—மணிவடம்
1220 தோள்வந்தி—தோள்வளை; தோளில் அணியும் வளைவகை
1223 ஒட்டியாணம்—மாதரிடையணி
1224 பாடகம்—காலணி வகை
தண்டை—காலணி வகை
1226 பணுதிவர்க்கம்—அணி வகைகள்

### அருச்சுனன் மாயவனிடம் தானும் செல்வதாகக் கூறல்

அர்ச்சுன ராசன் அரக்குருகும் பாவனைபோல்
தர்ச்சிணமாய் மாயவரைத் தாள்பணிந்து போற்றிநின்று
பஞ்சவர் சகாயனே பாரளந்த மாயவனே(ரே)
துஞ்சிய பாற்கடலில் துயில்பவனே பச்சைவண்ணா 1235
என்பெரு மாளே எனக்கான மைத்துனரே
நன்பெரு மாளே நாராயண சுவாமி
அரசர்க் கரசரான அல்லி யெனும்பெருமாள்
பிறவா முடிதரித்த பொற்கொடியா ளல்லியரும்
வேட்டைக்குப் போகவென்று வீரசின்ன மூதுகிறாள் 1240
தாட்டிமையாள் வீரியம்நான் தயவரிய வேணுமய்யா
தெள்ளிமையுஞ் சேவகமுந் திராணி செலுத்தாதும்
வள்ளல் தனையறிந்து வாரேன்காண் மாயவரே
எந்தனிட மைத்துனனே யெனக்கு விடைதாரீர்

### நாராயணன் மறுமொழி

அந்த மொழிகேட்டு ஆதிநா ராயணனார் 1245
நாடி மகிழ்ந்து நயமாய் மொழியலுற்றார்
பேடி யருச்சுனனே பித்துப் பிடித்ததோடா
பாண்டிப்பெரு மாள்வீரம் பார்த்துவர உன்னைவிட்டால்
ஈண்டிய அல்லிதனை எக்கச்சக்கம் பேசிடுவாய்
வைகை வளநாடி வாளால் துணித்திடுவாள் 1250
சைகையா யல்லி தான்போரு செய்திடுவாள்
பேராவல் கொள்ளாதே பிராண மடிந்துவிட்டால்
தோறாவழகி சுபத்திரைக்கு யென்சொலுவேன்
சுந்தரப் பூமாது துரோபதைக்கு யென்சொலுவேன்
முந்தியப் பெண்பெருமாள் மின்னொளிக்கு யென்சொலுவேன்
நீண்டபுகழ் நாககன்னி நேரிழைக்கு யென்சொலுவேன்
வேண்டாம் விசையா வீண்பாடு மித்தனையும்
அல்லி குணமானால் அக்கினிக்கு யொக்குமடா
அல்லியண்டே செல்லுவது அகோர நெருப்பதுகாண்!
கடிய விரும்புதனைக் கரையா னரியாது 1260
மடியவரும் வேண்டாமென மைத்துனனே விசையாநீ
ஊருபோய்ச் சேருவோம் வாடாவென வுரைத்தார்

---

1233 தர்ச்சிணமாய்—தரிசனம்; வணங்குதல்
1240 வீரசின்னம்—ஊதுகொம்பு
1241 தாட்டிமையாள்—தைரியமுடையவள், சாமர்த்தியமுடையவள்
1242 தெள்ளிமை—அறிவுநுட்பம்
1243 வள்ளல்—சாமர்த்தியம்
1249 எக்கச்சக்கம்—தாறுமாறு
1259 அகோரநெருப்பு—உக்கிரமான நெருப்பு

## உன்னையே நம்பிவந்த என்னை ஏமாற்றாதே எனல்

காருமென்னை யென்று கலங்கினான் வில்விசையன்
வஞ்சனையா லந்த வாலிதனைக் கொன்றுவிட்டாய்
மோகினியாய் வந்து முனியை யெரித்துவிட்டாய் 1265
வாகினியா யும்மை நம்பினேன் மாயவரே
நம்பின பேரை நட்டாற்றில் விட்டிடுவீர்
நம்பி ஒருத்தனுமாய் நானிங் கிருப்பேனோ
என்தலையி லேயடித்து என்னையிங்கே கூட்டிவந்து
பந்தயமுந் தப்பியே பாரபட்சம் பண்ணுகிறீர் 1270
கட்டபத்தம் பண்ணாதே கையல்ல காலிதுகாண்
இஷ்டபதம் போற்றிசெய்வேன் எந்தனுக்கு விடைதாரும்
டேசாமல் பின்தொடர்ந்து அவள்பிரபலமுந் தானறிய
கூசாமல் தானடுக்கேன் குருபாதம் சாட்சியய்யா
அல்லவென்று சொன்னால் ஆவியுயிர் விட்டிடுவேன் 1275
நல்லதென்று அனுப்புமென்று நற்பாதம் பூண்டுகொண்டான்
புத்தி மதியுரைத்து போய்வா வெனவுரைத்தார்
பத்தமுடன் சொலக்கேட்டுப் பாரித் திருபுயமும்
ஆலித்து அருச்சுனனார் அறிவா யழகாக

## வில்விசயன் பிராமணர் வடிவங் கொள்ளல்

வாலித் தெழுந்து வயதுபதி னாறாக 1280
வேதப் பிராமணர்போல் மிகுந்த வடிவாகி
நீதப் புகழுடைய நேரான மன்மதன்போல்
சூரியன் போலே துலங்குகின்ற மார்புதனில்
சூரியப் பிரகாசந் துலங்கும் நவமணிகள்
தங்கம்போல் மேனி தரித்தபூ ணூலழகும் 1285
குங்குமம் அட்சதையுங் கூட்டியே தானெழுந்து
பஞ்சாங்க வேதியன்போல் பஞ்சாங்கங் கைபிடித்து
மிஞ்சாய் நடைநடந்தான் மேதினியோர் சோர்ந்துவிழ

## வரவேற்பு

கண்டு பிராமணரைக் கையெடுத்துக் கும்பிடுவார்
வண்டுறையும் பூந்துளசி வாகான பிராமணரைக் 1290
கண்ட மன்னரெல்லாங் கையெடுத்துத் தான்தொழுவார்
அண்ட வரும்படைகள் அப்புறமே தான்விலகும்
வெண்சா மரைக்காரர் விலகி யொருபுறமாய்

---

1271 கட்டபத்தம்—துன்பங்கள் (?)
1278 பத்தமுடன்—உண்மையுடன்
1288 மிஞ்சாய்—செருக்குடன்

குணசாய்முத் துக்கவரி கோகிலமார் தான்விலக
பவழக் கவரியிடும் பாங்கிமார் தான்விலக 1295

## அல்லிக்கு ஆசீர்வாதம் செய்தல்

சவழப்புய அல்லிபக்கல் தான்சென்று வில்விசையன்
அட்சதையைக் கைகொடுத்தான் ஆசாரந் தான்போற்றி
பட்சமுட னெலும்பிச்சம் பழங்கொடுத்தான் அல்லியர்க்கு
அருகாக நின்று ஆசீர் வாதமென்றார்

## அல்லி அவன் அழகைக்கண்டு விசாரித்தல்

குருகுலத்து மன்னவனைக் கண்டு குலப்பெருமாள் 1300
முகத்துத் திருவழகும் மூக்கழகும் பாவனையும்
வகுத்த விழிக்குவளை மலர்போ லிருவழியும்
இராச வடிவும் ரவணிதப் பேரழகும்
இராசலட்ச ணீகரமும் ரவணிதமும் தான்பார்த்து
இந்தப்பி ராமணர்போ லிவ்வுலகில் கண்டதில்லை 1305
எந்தவூர் வேதியரே எனக்கறியச் சொல்லுமென்றாள்

## அர்ச்சுனனின் மறுமொழி

உத்திர பூமி உயர்ந்த அயோத்திபுரம்
சித்திரத் தேரேருந் தசரதனார் பாலருக்கு
பஞ்சாங்கஞ் சொல்லும் பதிவான வேதியரில்
அஞ்சாத வேதன் அர்ச்சுனைய னென்பேரு 1310

## வேட்டைக்குச்சென்று வந்தபின் தானம் தருவதாகக்கூறல்

ஆகிலுஞ் சித்தரே ஆரிய வேதியரே
போகிலும் வேட்டை புகழ்ச்சிகொண்டு வந்தபின்பு
போதான மாகிலும் பூமிதான மானாலும்
ஏதேது தானங்கள் இன்பமுடன் கேட்டாலும்
மனது குளிர் மகிழ்ச்சியுடன் நான்தருவேன் 1315

## தங்கி இளைப்பாறச் சொல்லுதல்

உனது தவிப்பு உடம்பு இளைப்பாற
சத்திரத்தே நீருந் தயவாகப் போயிருந்து
பத்திரத்தே பூசைபண்ணிப் பசியும் இளைப்பாறி
இருமென்று சொல்லி யேந்திழையாள் தானடந்தாள்
விருவென்று சத்தம் வீறுடனே தானெழுந்து 1320

---

1296 சவழப்புயம் — வளைந்ததோள்

1318 பத்திரம் — இலை; 'பத்திரங்கொண்டருச்சித்தே' வெங்கைக்கோ.120

ஆனை நெருங்க அதிரப் படைநெருங்க
சேனை நெருங்கத் திரண்ட படைநெருங்க
வேட்டைக்குக் குழல்காரர் வீரரா மகாகோடி
காட்டைப் படைப்பாவுங் கடுசான வேல்காரர்
அதிரப் படைநடக்க ஆதிசே ஷன்நடுங்க 1325
சிதரப்பூ மிநடுங்கத் திசையெட்டுந் தானதிர
கூமி நடந்து கொடுமிஞ்சிப் போகுதென்று
சோம னுடையதனைச் சுருட்டியே ஓடிடுவார்
அப்புதுமை தன்னை யறிவான வேதியனார்
செப்ப முடன்பார்த்துத் திடமுற்றங் கேதுசொல்வார் 1330

## அர்ச்சுனனும் வேட்டைகாணச் செல்லுதல்

நீணிலத்தை யாளுவதும் நீர்மகனைக் கொன்றதுவும்
காணலா மிந்தக் கட்டழகி வீரியத்தை
கட்டாணி வில்விசயன் கடுகியே ஓடலுற்றான்
பொட்டெனவே பொன்கிரியைப் போய்வளைந்தார் படைத்தலைவர்
நாலா திசையிலும் நாலு மிதில்லையும் 1335
நாலா யிரங்கோடி ராணுவங்கள் தான்கூற

## காட்டில் வேட்டை

பன்றிப் புதையும் பாயும் புலிப்பாரும்
அன்றிக் கலைத்து அலைக்கொட்டி ராணுவங்கள்
பொன்னின் கிரியில் புலிகரடி யுள்ளதெல்லாம்
கன்னிக் கலைமானுங் கால்கடிய சிங்கங்களும் 1340
நீளிய கரடி நெடும்புலியுஞ் செந்நாயும்
ஆளியுஞ் சிங்கமும் அண்டபே ரண்டபட்சி
பத்திர காளிக்குப் பால்பொங்க விட்டாப்போல்
பத்தியே நால்திசையில் இறங்கி நடுங்கியதாம்
ஆலித்துப் பன்றிகுத்தி அலைக்கொட்டி நிற்பாரும் 1345
பாலித்து வேங்கை பருமானைக் குத்திடுவார்

## அல்லி சிங்கத்தை வெட்டி வீழ்த்துதல்

மிஞ்சி யொருசிங்கம் மீறித் தெழுந்திருந்து
அஞ்சு கட்டாப்பை அதிர முறியவிட்டு
வல்லையமும் நேரிசமும் வாகாய்த் துணிதுணித்து
எல்லையில் தானே எதிர்த்தோ ருடல்கிழித்து 1350

---

1324 கடுசான—கடுமையான
1333 கட்டாணி—சமர்த்தன், பெருவீரன்
1348 கட்டாப்பை—வேலி
1349 வல்லையம்—ஈட்டிவகை
நேரிசம்—எறிபடை, அம்பு

கண்கொண்டு வார கடியதொரு சிங்கமதை
பண்புடைய அல்லி பாலித் தெதிர்பார்த்து
சுத்தியே வாளெறிந்தாள் சூட்சமாய்ப் போய்ப்பரிந்து
அத்து யிருதுண்டமாய் அலறி விழுந்ததுகாண்

## அர்ச்சுனனின் பாராட்டும் அல்லி அவனைப் படைத்தளபதி யாக்குதலும்

கண்டு அருச்சுனனார் கைதட்டி யேசிரித்தான் 1355
தண்டிய அல்லி தனஞ்செயரைத் தான்பார்த்து
வேதியரே உம்முடைய வீரியமே வீரியங்காண்!
மீதில் வகையாய் வீரக்குலவையிட்டீர்
வீர மொருவர் பங்கல்லகாண் வேதியரே
பாரிய சேனைக்குப் படைகர்த்த னாயிருப்பீர் 1360
விதறப் பிரியாதே வேதியரே யென்றுரைத்தாள்
பதறி மகிழ்ந்து பார்த்தனுமே நல்லதென்றான்
செப்பரிய வார்த்தையிது திருவுளமே யல்லாமல்
ஒப்பரிய கிருஷ்ணர் உகந்த செயலிதுவே
உண்மை யுடன்நினைந்து உதிச்சுத் தன்மனதில் 1365
நன்மை மறவாதான் நல்லபுத்தி யென்றுசொல்லி
கூடத் தொடர்ந்தான் குலப்பெருமாள் போகுமிடம்
சாடித்துப் பவனம்விட்டுத் தாண்டியே போகையிலே

## வேங்கையை வெல்லுதல்

கால்கடிய வேங்கையொன்று கல்பாருக் குள்ளிருந்து
கோல்கொடிய கண்சிவந்து குடுகுடென்று வாய்விடுத்து 1370
ஆலித் தெழுந்திருந்து அதட்டியே ஆர்ப்பரித்து
சீலித்து மன்னவரைச் சீறியிரண் டாய்க்கிழித்து
அந்தப்புலி தனைக்கண் டதரசூரப் பெண்பெருமாள்
மந்திர வாளு மணிக்கேட யம்பிடித்து
தந்திரமாய்ப் பார்த்துநின்று தப்பாமல் வீசலுற்றாள் 1375
முந்தி விலகி மூர்க்கமுள்ள வேங்கையிது
எதுப்பாரி யாக எதிர்த்துக் குரலெழுப்பி
சதியாய் முழங்கைமேல் தாண்டியே வீசவுடன்
வீசின கையை விதமாய்த் தரித்துவிட்டாள்
கூசினாப் போலே குகையில் நுழைகிறதை 1380
பின்காலைப் பற்றிப் பிறகே பிடித்திழுத்து
முன்காலைச் சேர்த்தி மீட்டினாள் ரெண்டுதுண்டாய்
அண்டிவந்த வேதியனார் அதட்டிக் குலவையிட்டார்
கண்டுவள னாடிதன் கழுத்தில் சரப்பணியை
வெற்றிகொண்டா னென்று விசயன் கழுத்திலிட்டாள் 1385

---

1358 வீரக்குலவை—விசேட காலங்களில் மகளிர் நாவாற் குழறியிடும்மகிழ்ச்சி [யொலி
1360 பாரிய சேனை—மிகுதியான படை

பத்தி வெகுமானித்துப் பரிந்து குதிகுதித்தான்
அந்த வனங்கடந்து ஆயன்வனம் போய்ப்புகுந்தான்

## அறுபதடிப்பன்றி

அந்த வனத்தில் அறுபதடிப் பன்றியொன்று
ஆனை மலைச்சீர்மை ஆனமழை யில்லாமல்
கானல் நிலங்காய்ந்து கருகிநிழ லில்லாமல் *1390*
பெட்டையும் ஆணும் பிரிந்து இனத்தைவிட்டு
சட்டையும் பண்ணாமல் சதிராக அவ்வனத்தில்
மலையோரம் பாரில் மந்தாரக் குடகுதனில்
நிலையாய்க் கிடைபரித்து நேராக வாழ்ந்திருக்கும்
பெரிய குளஞ்சித்தூர் பேர்போன செந்நெல்லுண்டு *1395*
அரிய ரசதாளி அச்சீனிக் கரும்புமுண்டு
துஞ்சு பலாச்சுளைகள் சூழ்ந்தகனி கொள்ளையுண்டு
அஞ்சு குட்டியீன்று அடவாய்க் கொழுத்திருக்கும்
பெண்பெருமாள் வேட்டைவர புதன்கிழமை ராத்திரியில்

## பெண்பன்றி கனாக்கண்டு ஆண்பன்றிக்கு அறிவுறுத்தல்

பெண்பன்றி யாதேசங் கண்டலறிப் பேதலித்து *1400*
தன்னுடைய நாயகனைத் தட்டிமுட்டி யேயெழுப்பி
என்னரசே என்கணவா எனக்கான நாயகரே
வேப்பிலைக் கொம்பா வெள்ளிக் குளம்பழகா
கூப்பியே குன்னுக்கல் குறித்ததிரு மேனியரே

## பன்றியின் ஆற்றல்

பன்றி வருகுதென்றால் படையும் பயப்படுமே *1405*
தன்றிப் புலியெதிரோ தார்பெரிய கொம்பாநீ
ஆளியுஞ் சிங்கமும் அதிருமே உன்னைக்கண்டால்
ஊழியுடன் பேர்கேட்டால் உலகோ ரெதுக்காரே
வலுவான சீலனென்று மாயன் வடிவெடுத்தார்
மலுவான வீரரென்றால் வையகத்தை ஆள்பவர்கள் *1410*
பிழையில்லா வார்த்தை பெண்சொல்லைத் தட்டார்கள்
கழைபொல்லாச் சொப்பனங்கள் கண்டேனே யென்கணவா

---

1393 மந்தாரக்குடகு—மலை
1394 கிடைபரித்து—இடம்
1396 ரசதாளி—வாழைப்பழவகை
1400 ஆதேசம்—கட்டளை
1407 ஆளி—சிங்கம்

## களரத்திறம் உரைத்தல்

பாண்டிப் பெருமாள் பவழசேனைத் தோழியர்கள்
தூண்டிய அதரசூரித் தோழியா றாயிரம்பேர்
சதுரங்க சேனையளுந் தளமான சேவுகரும் 1415
விதுரங்க வில்கோடி வேலைக்காரர் பத்துலட்சம்
வேவுக்கு மிகுத்த வேட்டைநாய் மகாகோடி
தீவுக் குருவு சித்துளிநாய்க் குட்டியொன்று
உன்பிடனி மேலிருந்து பிடித்திழுக்கக் கண்டேன்நான்
நீயிடறி மலைநோக்கி யிழுத்தோடக் கண்டேன்நான் 1420
வேண்டும் புதைகிடந்து வெளிப்பட்டுப் போகையிலே
பாண்டிய ராசன்மகள் பதிவான அல்லியம்மன்
குலவீர லெட்சுமியாள் குதிரையின்மேல் கால்போட்டு
வலுவீர வாளெடுத்து மாயமாய்த் தான்வளைந்து
குத்திக் குலவையிடக் கண்டேன்நான் கொம்பழகா 1425
பத்தி யிழுத்துன்மேல் பெருங்கட்டை போட்டெரித்து
கருக்கிப் பொசுக்கிக் கழுவிக் குளிப்பாட்டி
நறுக்கிவா றுஞ்சதையும் நன்றாகத் தானறிந்து
கூடித்த பேர்க்கெல்லாங் கூறுபோடக் கண்டேன்காண்
ஆடித் தவசிருந்து அஞ்சுகுட்டி யீன்றேன்நான் 1430
குட்டிக ளோடே கூடியே போய்ப்பிழைப்போம்
அட்டிபண் ணாதென்ன அலைகொம்ப னேதுசொல்வான்

## ஆண்பன்றி வீராவேசத்தோடு பெண்பன்றிக்குப் பதிலிறுத்தல்

போதுநீ சொன்ன பொட்டையுடன் புத்தியது
ஆதி பிரமனல்ல அரனல்ல விட்டுணுவல்ல
பெட்டையுன்னைப் போலொருத்தி பெட்டச்சி வாராளென்று 1435
தட்டி யெழுப்பினான் தலைமறையப் போவேனோ
கோடிபடை வந்தாலுங் கொரைகுத்துங் கொம்பாலே
ஆடிக் கிழித்து அலைப்படுத்தி விட்டிடுவேன்
பேடிக் குளிர்பிடித்தால் பெட்டச்சி போய்ப்பிழையும்
வாடி மொழிகேட்டு வன்பெட்டை யேதுரைக்கும் 1440

---

1416 பத்தியிழுத்து—பற்றியிழுத்து
1417 வேவு—ஒற்று
1418 சித்தளிநாய்க்குட்டி—
1419 பிடனி—பிடரி
1432 அட்டி—தாமதம்
1436 சொரை-குரை —ஒலி, பெருமை

## பெண்பன்றி பிறர் அழிவை எடுத்துரைத்தல்

எண்ணாத வீரன் இரணியசூரன் தன்பலத்தை
நண்ணாய் நரசிங்க நாராயணர் கைதனில்
துஞ்சிநகத் தில்பிளந்த துருசுநீர் கேட்டிலையோ
கஞ்சனும் தன்பலத்தால் காலம்வந்து நேர்ந்ததினால்
மருமகனார் கைதனிலே மாண்ட தறியீரோ *1445*
கெருவிதத்தால் ராவணன் கிட்டிடநா கந்தேடி
ரகுநாதர் கையில் நருக்கிட்ட தறியீரோ
வெகுதாய் வைதாலும் இருந்தாலு மென்னரசே
போங்காலம் வந்தடுத்தால் புத்திமதி கெட்டுவிடும்
ஆங்கால மானால் ஆனைமலை போய்ப்பிழைப்போம் *1450*
குடைபோல மூஞ்சியுங் கொம்பும் புறப்பாடும்
இடையழகும் பாவனையுமே எருமைக் கிடாப்போலே
கடைவாயில் பல்லழகும் காட்டெருமைக் கண்ணதுபோல்
கடைகெட்ட பாவிநான் கனாவிலையுங் காண்பேனோ
அந்த மொழிகேட்டு அடித்துத் துரத்திவிட்டு *1455*
பந்தமத வானையைப்போல் படுத்திருக்கும் வேளையிலே
கட்டழகி அல்லிதளங் காடு வனம்புகுந்து
தட்டென வேவளைந்தார் சற்தூரி ஐவனத்தை
தீவுக் குருவி சித்துளிநாய்க் குட்டியது
வேவுடனே பார்த்துக்கால் மேல்தூக்கி வாலாட்டி *1460*
பக்குவ மாய்நுழைந்து பாருக்குள் ளேபுகுந்து
கொக்குமேல் ராசாளி குதித்துப் பறந்தாப்போல்
ஆளியைச் சிங்கம் அதட்டிப் பிடித்தாப்போல்
பாளியில்தீ வுக்குருவி பாய்ந்து பன்றியின்மேல்
உளறியே பன்றிஒரு வீரிட்ட சத்தமது *1465*
குளறியே குன்று குசிஞ்சு சிலையோட
சேடிகள் நொறுங்குந் தேக்கமர மற்றுவிழும்
அடிகிளம்பிப் புதையைவிட்டு அப்புறமே போகையிலே
காண்டா வனந்தேடிக் கடியப்பு ரவியைப்போல்
நீண்ட வனமேவி நிசமின்னல் பரந்தாப்போல் *1470*

---

1443 *துருசு—வேலைத்திறன்*
1446 *கெருவிதம்—கர்வம், அகங்காரம்*
1454 *கனாவிலையுங்—கனாவிலும்*
1460 *வேவு—ஒற்று, மோப்பம்*
1462 *ராசாளி—ஒருவிதப்பறவை*

### அல்லியும் பார்த்தனும் பன்றியைத் தொடர்தல்

பண்ணிதனை யல்லியும் பார்த்தனும் பின்துடர்ந்தார்
எண்ணிதமாய்த் தீவுக்குருவி ஏகியே பின்துடர்ந்து
சதுரங்க சேனையுந் தளுங்கிரய போச்சுதப்பா
எதுரங்க மாக ஏகமாய்த் தானோடி
குருக்காட்டிச் சித்துளிநாய்க் குரலெழுப்பி ஊளையிடும் 1475
செருக்காட்டி நின்று திரும்பி அசையாமல்
வரம தன்அல்லி வாரவிசை முஷ்டிகண்டு
பரம சிவன்அல்ல பாரளந்த ராமனல்ல
வேத பிரமனல்ல வெற்றிவடி வேலரல்ல
பேதக மாய்அஞ்சி பின்வாங்கிப் போனமென்றாள் 1480
நம்மை நகையாரோ நன்குலத்துப் பன்றியர்கள்
இம்மைக் கிணையொருவ ரில்லை யெனத்திரும்பி
என்றுவல் லமைபேசி யிருக்குந் தறுவாயில்

### பன்றியினை அல்லி வாளால் வீசிச் சாய்த்தல்

பன்றி தனைஅல்லி பருவாளா லேவீச
அத்து இருபுறமும் அலறியே வீழ்ந்ததுவே 1485
அத்துருசாய் வில்விசையன் அலக்கொட்டி யேநகைத்தான்
கண்டு வளநாடி கனமகிழ்ச்சி யுண்டாகி
கொண்டு பரிந்து குதிரையை விட்டிறங்கி
குதிரைமேல் போட்டிருந்த குங்குமப் பட்டெடுத்து
மதுரை வளநாடி மரத்தடியில் தான்போட்டு 1490
சந்தன மரத்தின்மேல் சாய்ந்தாள் ஒலுகையதாய்

### அல்லியின் மேனியில் மணம் வீசல்

முந்திமுகத் திருவேர்வை முத்துக்கள் போலுருள
உருக்கிய தங்கம்போல் ஒளிவான மேனியெல்லாம்
பெருக்கிய வேர்வை பிரபலமாய்க் கனியவெங்கும்
செண்பகப்பூ வாசஞ் சீதேவி மேனியெங்கும் 1495
மாதுளம்பூ மேனிதனில் மருக்கொழுந்து வாசமெங்கும்
சீதளம்பூ மேனிதனில் சிறந்தமல்லி வாசமெங்கும்

### இனி ஓரடி

குலுங்குதிரு மேனியெங்குங் குருவேர்வை கண்டதனால்
அலுங்குதிரு மேனியெங்கும் அதிரூப மலர்வாசம்

---

1471 துடர்ந்தார்—தொடர்ந்தார்
1480 பேதகமாய்—வஞ்சகமாய்
1484 பருவாள்—பருத்த பெரிய வாள்
1485 அலக்கொட்டியே நகைத்தான்—ஒலியெழுப்பிச் சிரித்தான்
1491 ஒலுகை—தளர்ச்சி

### வில்விசயன் அல்லியின் மணத்தால் சோர்ந்து விடுதல்

வாசம் விளைந்ததனால் வலுவான வில்விசையன் 1500
சோர்ந்துவிழுந் தான்பார்த்தன் சுந்தரப் பூமுடியான்
வேதியரைப் பார்த்து விபரமுள்ள பெண்பெருமாள்
கூடிவந்த சித்தருக்குக் கூட்டுப் பிடித்ததென்று

### அல்லியின் உபசரணை

ஓடிவந்து வேதியரை உகந்து எடுத்தணைத்து
மாத்திரையைத் தானெடுத்து வாயில் அடக்குமென்றாள் 1505
மாத்திரையைத் தானடக்கி மன்ன னெழுந்திருந்தான்
வந்திரு மென்றவளும் மார்புதட்ட வாள்விசையன்

### அர்ச்சுனனின் தந்திரமும் அல்லியின் சீற்றமும்

தந்திர மாய்ப்பார்த்துத் தையல்பக்க மேயிருந்தான்
மயங்கி விழுந்தவனை யெழுப்பினதே மாபாவம்
பித்துப் பிடித்ததோ பேய்கொண்ட பாப்பானே 1510
சற்றும்பய மில்லாமல் சரியா யிருக்க வந்தாய்
வெட்டி யெறிந்திடுவேன் வேறொருவ ரானாக்கால்
பிருமத்தி தோஷமென்று பொறுத்தேன்நான் வேதியரே

### அருச்சுனனின் மறுமொழி

அந்த மொழிகேட்டு அருச்சுனனார் கூறுவாராம்
அதிராத நெஞ்சுடைய அல்லி யிளவரசே 1515
எதிராத வையகமும் எல்லயைர சாண்டாலும்
தக்க மதம்பொழிந்து தனங்கள்கிரி போலெழுந்தால்
வெக்கப் படுவார்களோ வேதத்தி லுள்ளபடி
மல்லிகைப் பூமலர்ந்து வாசமெடுத்த தென்றால்
மலர்வாசம் வீசினால் வண்டு முகராதோ 1520
நெல்லளவு சற்றே நெருப்பு ஒளிவானால்
தொல்லுலகை யெல்லாஞ் சுடாதோதான் தோகையரே

### கன்னிகாதானமே சிறந்த தானம் எனல்

ஒன்பது தானத்தில் ஒருதான மேஒசத்தி
கன்னிகா தானங் கடல்சூழ்ந்த வையகத்தில்
கன்னிகா தானமென்றால் காரிகையே கேட்டருளீர் 1525
தன்னுடைய சரீரந் தானம் உசத்திகண்டாய்
வேண்டிய தன்னுடலை வேதியர்க்கு உள்ளானால்
ஆண்ட பெருமாள் அருள்பெறுவீர் வையகத்தில்

---

1503 கூட்டுப்பிடித்ததென்று—நோய் பிடித்ததென்று
1510 பிருமத்திதோஷம்—பார்ப்பனக் கொலையால் வரும் பாவம்

### அல்லியின் மறுமொழி

வேதியனார் கூற விகற்பமுடன் பெண்பெருமாள்
சாதி உசத்திதான் சதிரான வேதியரே 1530
மட்டு மறியாமல் வாய்மதமே பேசிவிட்டீர்
வெட்டுவே னஞ்சுதுண்டாய் வேறொருவ ரானாக்கால்
சினத்தை அடக்கிவிட்டேன் சீரான வேதியரே

### வேதியனின் அழகால் மயங்கியமை கூறல்

வேதியரே உம்முடைய மெய்யழகு கண்டுமெச்சி
தாழ்த்தேன் மனந்தனிலே சதிரான வேதியரே 1535
பேரான வில்விசயன் பெருமாளைத் தானினைந்து
குளுந்த தளைமுறித்துக் குங்குமப்பூ மேனியர்க்கு
முன்னாக நின்று முகங்குளிர வீசலுற்றார்
அன்பு மிகப்பிறந்து அதிரூப மெல்லியரும்
பத்தியுள்ள சித்தரே பரிவான வேதியரே 1540
பக்தி யுடன்அடியேன் பூமியர சாண்டாலும்
கொஞ்ச வயதடியேன் குலத்தில் பெரியோர்நீர்
பொறுக்குமோ மெந்தனுக்குப் பூங்குலையில் வீசுகிறீர்
பொறுக்காது பொறுக்காது பூமி பொறுக்காது

### வேதியன் தன்னை ஏற்றுக்கொள்ளுமாறு அல்லியை வேண்டல்

பொறுக்குங்காண் பூங்குழலே பூமாதேவி பெண்ணல்லவோ 1545
ராமர் பதம்பிரியாள் லட்சுமியும் பெண்ணல்லவோ
சதுர்முகன்றன் னாவிருக்கும் சரஸ்வதியும் பெண்ணல்லவோ
பரமசிவ னாருடனே பார்வதியுந் தோள்சேர்ந்தாள்
சீராமர் தன்னுடனே சீதையம்மன் தோள்சேர்ந்தாள்
கந்தருக்கு வள்ளியம்மன் கலந்துமிகச் சேர்ந்தாப்போல் 1550
அந்தப் படிக்கு அன்பா யெனைத்தயவாய்
உன்மார்போ டெனையணைத்தால் உகந்தாசை யாண்டிருப்பேன்

### பெண்பெருமாள் வெகுண்டு வேதியனைக் கோபித்தல்

அந்த மொழிகேட்டு அதிரூபப் பெண்பெருமாள்
கொந்தார் குழலாள் குறுநகையாய்த் தானகைத்து
ஏதுதான் வேதியரே எக்கசக்கம் பண்ணுகிறீர் 1555
அத்தை மகளோநான் அம்மான்மகனோ நீரெமக்கு
மெத்தச் சரசவிதம் பண்ணாதே வேதியரே
கண்ணைச் சிமிட்டுவதுங் கடைக்கண்ணால் பார்ப்பதுவும்
பேதங்கள் பேசுறதும் புருவங்கள் போடுறதும்
தாறுமாறு பண்ணுகிறீர் தலையில்புழு வாட்டுகுதோ 1560

---

1530 வாய்மதமே பேசிவிட்டீர்—வாய்த்துடுக்காகப்பேசிவிட்டீர்
1555 எக்கச்சக்கம்—அதிகப்பிரசங்கம், குறும்பு
1559 பேதங்கள்—வேறுபாடு
1560 தலையில் புழுவாடுதல்—தொல்லை அனுபவிப்பீர் என எச்சரிக்கும் மொழி]

வேறு கூறாக வெட்டிடுவேன் உன்னைநான்
அந்தநல் வேளையிலே அல்லி படைத்தலைவர்

## அல்லியின் படைத்தலைவர் பரிவாரங்களோடு வருதல்

விந்தை யுடனே விதமாகத் தான்திரண்டு
தாரைமேல் பத்தித் தளங்கள்வந்து சேர்ந்ததுவே
பன்றி தனையெய்து பைங்கொடியாள் வீற்றிருக்க 1565
கண்டவந்த ராணுவங்கள் கட்டழகி முன்வந்து
தெண்டனிட்டு நின்றார்கள் தேன்மொழியாள் சீரடியை
தெண்டனிட்ட ராணுவத்தைத் தேன்மொழியாள் தான்பார்த்து

## பன்றியினைக் கூறுகளாக்கிப் பலருக்கும்தருதல்

பன்றிதனைக் கூறுசெய்து பகிர்ந்து பொசியுமென்றாள்
பன்றி தனைப்பொசுக்கிப் பதறிக் குளிப்பாட்டி 1570
வாருஞ் சதையும் வகைவகையாய்த் தானறிந்து
கூறு கூறாகக் கூறிட்டு வைத்தார்கள்
பத்திவந்த சித்தரேரீ ரொருபங்கு பிடியுமென்றாள்

## அர்ச்சுனன் அல்லியிடம் வேண்டுதல்

பங்கு பிடிக்கவல்லேன் உம்முடைய பல்லக்கு மேறவல்லேன்
உன்னுடைய—சிங்கா தனத்தில் சிறந்து கொலுவிருப்பேன் 1575
மாளிகைக் குள்ளேநான் வந்து துணையிருப்பேன்
அந்த மொழிகேட்டு ஆரணங்கு தான்நகைத்தாள்
வடதேச மானாலே வாய்மதங்கள் பேசுகிறீர்
செல்லாது செல்லாது தென்பாண்டி ராச்சியத்தில்
மட்டாக நில்லும் வாய்மதங்கள் பேசவேண்டாம் 1580
என்று மிகஅல்லி எடுத்துரைக்கும் வேளையிலே
அஷ்த கிரியில் அலர்கதிரோன் போய்மறைந்தான்

## அனைவரும் மதுரைக்குத் திரும்புதல்

மதுரை நகர்நோக்கி வருகிறாள் பெண்பெருமாள்
நடவும் நடவுமென்று நகாருகள் தான்முழங்க
நடவும் நடவுமென்று நவரிகள் தான்முழங்க 1585
நடவும் நடவுமென்று நாகசுரந் தான்முழங்க
நடவும் நடவுமென்று ராசமக்கள் தேர்நடக்க
நடவும் நடவுமென்று ராணுவங்கள் முன்போக
நடவும் நடவுமென்று நடத்தி வருவோரும்
செல்லும் செல்லுமென்று திறமாய் நடப்போரும் 1590
மெள்ள மெள்ளவென்று விலகி நடப்போரும்

1569 பொசியும்—புசியும்

1581 நகாருகள்—முரசுகள்

ஆனை பரியும் அணிஅணியாய்த் தான்நடக்க
சேனைப் பரிவாரஞ் சேரஅவர் தானடக்க
தேர்க ளசைந்துவரத் தேர்கொடிக ளாடிவர

## கட்டியங்கள் முழக்கம்

விருதுசொல்லிக் கட்டியங்கள் மெல்லியர்க்குக் கூறிவர 1595
விருதுசொல்லிச் சின்னம் மெல்லியர்க்கு ஊதிவர
பதினெட்டு மேளம் பலதிசையுந் தான்முழங்க
புரவி தனிலேறிப் பொற்கொடியாள் தானடத்த
சந்திரனைச் சூழ்ந்து தயங்கும்உடுக் கணம்போல
இந்தஅல்லி யைச்சூழ்ந்து இயல்பான மன்னரெல்லாம் 1600
வந்தார்கள் சூழ்ந்து மதுரா புரிநோக்கி
மதுராபுரி வீதியிலே வகைவள நாடிவர
கண்டிடவே பாண்டியர்க்குக் கனதூதர் வந்துசொல்ல

## அல்லியை வரவேற்றல்

எதிர்கொண்டு வந்து இயல்பான பாண்டியர்கள்
திரண்டமணி முத்தழுத்தித் தீவட்டி கோடிலட்சம் 1605
கைபந்தங் கோடி காளைவிளக் காறுலட்சம்
சீர்பரிய யெக்காளம் திசைக்குத் திசைமுழங்க
தேர்கள் நடக்கத் திசையெட்டுந் தானதிர
ஆனை நடக்க அதிரப் படைநடக்க

## வாணவேடிக்கை

பூவாணங் கோடி பொரிவாணந் தான்கோடி 1610
நட்சத் திரவாணம் நற்பிரபை சோதிமின்ன
ஆகாச வாணம் அண்டமெங்குந் தானதிர
நில்புருசு துண்டு நிலங்க ளதிர்ந்திடவே
சங்கீத வீணை தனுராகந் தான்பாட
இங்கித மான இனிய குதிரைவிட்டு 1615
சித்திரத் தேர்மேலே செங்கமலக் கண்ணாளும்

---

1595 விருதுசொல்லி — சிறப்புப்பெயர்கள் சொல்லி
1606 காளை விளக்காறு — விளக்கு வகை
1607 எக்காளம் — ஊதுகுழல்
1610 பூவாணம்
பொரிவாணம்
1611 நட்சத்திரவாணம்
நற்பிரபை
ஆகாசவாணம்
நில்புருசு
} இவையனைத்தும் மத்தாப்பு வகைகளாகும்

வீற்றிருந்து தேரை விரைய நடத்தையிலே
மகரக் கொடியாட வாள்வீரர் முன்னடக்க
பாங்கி வளநாட்டில் பாங்கான அல்லியரும்
மதுராபுரி வீதியிலே வைகைவள நாடுவந்தாள் *1620*
எதுகொண்டு வந்தார்கள் எட்டுத்திசை மன்னவர்கள்
வந்த மன்னரெல்லாம் வணங்கி யவர்விலக

## பல்வேறு தெருக்களைக் கடந்துசெல்லல்

தேரோடும் வீதி தெருவும் மிகக்கடந்து
பட்டு விலைகூறும் பவழக் கடைகடந்து
முத்துகள் விலைகூறும் முயன்று வச்சிரக்கடைகடந்து *1625*
வர்த்தகர் தனவீதி வணிகர் தெருக்கடந்து
முத்தழகுங் கோபுரமும் மூப்பிமார் வீதிகளும்
எல்லாங் கடந்து இயல்நகரி முன்புவந்து
தேர்விட்டுத் தானிறங்கி தெய்வரம்பை போல்நடக்க
பாங்கான தோழி பவழசேனை கைகொடுத்தாள் *1630*
பத்துலட்சங் கோடி பாங்கியர்கள் சூழ்ந்துவர

## ஆலத்தி எடுத்தல்

ஆறாயிரம் பாண்டியர்கள் அருமையாய் வந்துநின்று
முத்தினா லாலாத்தி முன்னாகச் சுத்திவைத்தார்
பவழத்தா லாலாத்தி பாங்காகச் சுத்திவைத்தார்
பவழங்கள் சுத்திப் பலதிக்கும் விட்டெறிந்தார் *1635*
மஞ்சநீ ராலாத்தி வகையாகச் சுற்றியிட்டார்
ஆலாத்தி சுற்றி அணியிழைமார் போனபின்பு
பாண்டிப் பெருமாள் பதிசேர்ந்த பின்பாக

## தனஞ்செயன் ஆதிநாராயணரிடம் வேண்டுதல்

தர்மர் சகோதரனார் தனஞ்செயனார் கூறுவராம்
கூட்டம் பிரிந்த கோலவிழி மான்போல *1640*
பதிவா யினம்பிரிந்த பஞ்சவர்ணக் கிளிபோல
செந்தா மரைநீர்போல் தியங்கி மயங்கிவிழ
ஏக்க மெடுத்து இனம்பிரிந்த மான்போல
ஆதிநா ராயணரை அம்பலத்தில் வந்துகண்டு
கையார வேதொழுது கடைக்கண்ணில் நீர்ததும்ப *1645*
ஆயரே மைத்துனரே ஆதி ரகுபதியே
பச்சை நிறமாலே பார்வதி சகோதரனே

---

1621 எதுகொண்டு— எதிர்கொண்டு

1634 ஆலாத்தி—ஆரத்தி

1642 தியங்கி—சோர்ந்து

## அல்லியை எப்படியாவது மணம்முடித்து வைக்க வேண்டுதல்

பிறவா முடிதரித்த பெண்பெருமாள் சேதியைக்கேள்
ராசநல்ல உத்திரமும் ரவணிதமாய்ப் பேரழகும்
பாசை பதினெட்டும் பலராகந் தானறிவாள் *1650*
சற்பன்ன பாசைமுதல் சதிராய் அவளறிவாள்
ஒன்றுக்கு ஒன்று உயர்த்தியுள்ள வார்த்தைகளும்
தம்பூரு மீட்டுறதுந் தனுராகம் பாடுறதும்

## அல்லியின் நறுமணம்

திருமேனி யெங்குந் திகட்டாத தெள்ளமிர்தாய்
தென்றல்சற்றே வீசினால் செண்பகப்பூ வீசுதைய்யா **1655**
பாங்காய் மலர்வாசம் பதிங்காதம் வீசுதைய்யா
வஞ்சி யுடலெங்கும் வஞ்சியப ரஞ்சியய்யா

## அல்லியின் ஆபரணம்

அவள்–சருவா பரணமுந் தட்டான் கைப்பட்டதல்ல
செகத்குரு வாசாரி சிஷ்டித்த ஆபரணம்

## அல்லியின் வீரம்

அவள்–சிங்கத்தை வெட்டுந் திறமையைநா னென்சொல்லுவேன்
அவள்–அளியை வெட்டும் ஆண்மையைநான் என்சொல்லுவேன்
நீர்மகனைக் கொன்றதுவும் நீதியர சாளுவதும்
பொய்யல்ல தோழர் பூங்குழலாள் சேவுகத்தை
அல்லியரைப் பார்க்க ஆயிரங்கண் வேணுமையா
அல்லியுட ஆண்மை அனேகமுண்டு மெத்தயின்னம் **1665**
ஏந்திழையாள் வீரியத்தை ஈரேழுலகில் கண்டதில்லை

## அல்லியின் அழகுவருணனை

மொய்குழலாள் நெற்றிதனில் மூன்றாம் பிறைபோல
நெற்றியில் சுட்டியிலே ஒருநீலரத்தினம் பூத்திருக்கும்
கூரிய மூக்கும் குவளைமலர் போல்விழியும்
வெற்றிவடி வேலருட வேல்போல் விழிகளிரண்டும் **1670**
ஆணிமுத்து போலே அழுத்தியவாய் பல்வரிசை
அவள்-சொல்லுறுதி யானால்நான் சொல்ல முடியாது
வில்போல் மேற்புருவம் மேவுகன்னங் கண்ணாடி

---

1649 *உத்திரம்—உத்தரம், மறுமொழி*
1650 *சற்பன்ன பாஷை—பாம்பு பேசும் மொழி*
1657 *அபரஞ்சி—பொன்*
1659 *சிஷ்டித்த—சிருஷ்டித்த, உருவாக்கிய*
1667 *முதல் 1700 வரை அல்லியின் அழகு வருணனை கேசாதி பாதமாக வருணிக்கப்பட்டுள்ளமை சுவைபட விளங்குகின்றது.*

அஞ்சனங்கள் தீட்டி அலங்கரித்த பாவனைபோல்
கருக்குருவி போலே கடைக்கண்ணு மையெழுதி 1675
வளர்மதியைப் போலிருக்கும் வடிவுள்ள நன்முகத்தில்
கத்தூரிப் பொட்டுமிட்ட காரணத்தை யென்சொலுவேன்
கமுகு திரண்டதொரு கன்னி இளங்கழுத்தும்
கண்ட சரமாலை கனகரத்தினஞ் சோதிமின்ன
அடிக்கழுத்துத் தாவடங்கள் ஆபரணஞ் சோதிமின்ன 1680
கன்னிக்குப் பச்சைக் களைபோ லிருதோளும்
அவள்-காறை துலங்கக் கழுத்திலங்கும் பாவனையும்
அவள்-சூறைகொள்ளும் பொற்கடகந் தோள்வந்தி தன்னழகும்
தங்கக்குடம்போல் தனகிரிகள் இரண்டழகும்
குடமயிலாள் மார்புதனில் கும்பத் தனங்களிரண்டும் 1685
வடகயிலை யங்கிரியோ மகுடமோ நானறியேன்
குடகரியோ குஞ்சரத்தின் கோடோ தெரியாது
பூங்குழலாள் மார்பில் புடைத்தெழுந்த தனகிரிகள்
பொங்கு மடப்பள்ளியில் பொற்குடமோ நானறியேன்
வெள்ளிக் குடம்போல விம்முதுகாண் மார்பிரண்டும் 1690
தண்ணீக் குடம்போலத் தளும்புவது கண்டடியேன்
தண்ணீர் குடியாமல் தகைத்துவந்தேன் என்தோழா
அவள்-வெல்லு மதரசூரி வீரபராக்கிரமத் தனகிரியாள்
அவள்-கொல்ல வரும்யானைக் கோடென்றே அஞ்சிவந்தேன்
அன்றுநீர் பள்ளிகொண்ட ஆலிலைபோ லேவயிறும் 1695
கொங்கை சுமக்குங் கொடிபோலச் சிறுமருங்கு
செவ்வாழைத் தண்டதுபோல் சேர்ந்த இருதுடையும்
முத்துப் பதித்தாப்போல் முழங்கால் திருவழகு
பொன்சிலம்பு பூண்ட பொற்பாதம் புஸ்தகம்போல்
பாக்கியத் தாலுயர்ந்த பாஞ்சால ராயன்மகள் 1700
அனலில் பிறந்ததொரு ஆரணங்கு மொப்பலவே
எண்ணு மிவள்பிறகே ஏங்கித் திரிவதற்கு
பெண்ணுரு வாய்க்காமன் பிறந்தானோ நானறியேன்
கொன்று உயிர்பறிக்குங் கொலைகாரி தன்பிறகே
மெய்க்கூ டெனுமுயிரை விரும்பித் திரிவதற்கு 1705
பொய்க்கூட்டைக் கொண்டு புலம்பிநா னிங்குவந்தேன்

## ஆயனின் ஆறுதல்மொழி

அந்த மொழியை ஆயருந் தான்கேட்டு
சிந்தை கலங்காதே தேர்விசயா உன்னாணை

---

1680 தாவடங்கள்—கழுத்தணி மாலைகள்
1682 காறை—பெண்களும் குழந்தைகளும் கழுத்தில் அணியும் அணி
1683 சூறை கொள்ளும்—உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்
1687 குஞ்சரம்—யானை
1692 தகைத்து—வாடி

அஞ்சாறு நாளையிலே அல்லியர சானைதன்னை
உந்தனுக்கு மாலையிட உபாயம்நான் சொல்லுகிறேன் 1710
அந்த மொழிகேட்டு அர்ச்சுனரு மென்சொல்லுவான்

## காலம் கடத்த வேண்டாமென வேண்டுதல்

அய்யோ பெருமாளே அஞ்சாறு நாள்பொறுக்கேன்
என்மோகம் பொறுக்காமல் என்னாகந் தளருதய்யா
ஏக்கமொரு நாளையிலே யேந்திழையைக் காணாட்டால்
போக்கி விடுவேன்நான் பொன்னுலகுக் கென்னுயிரை 1715

## அல்லியின் பெருமை

ஆறுலட்சம் கோடி ஆரணங்கு மீதோள்சேர்ந்தேன்
ஆறாயிரம் பாண்டியர்க்கு அருமைமகள் அல்லியைப்போல்
கண்டதில்லை கேட்டதில்லை கரிய திருமாலே
ஆண்டர்தில்லை அம்பலவர் அருள்பெற்ற பெண்மயிலு
சொக்கரருள்பெற்ற சுந்தரப்பூஞ் சாயல் நல்லாள் 1720
அங்கயற்கண் ணம்மன் அருள்பெற்ற ஆரணங்கு
பூவி லூதித்ததனால் பூவாச மேவிளைந்து
பூவாசம் பட்டுப் பொருந்தியெந்தன் திரேகமெல்லாம்
மெத்த மயங்கி விதனம் மிகப்பெருத்து
நான்-பாவி சரீரம் பதைபதைத்துத் துடிதுடித்து 1725
சோபமே மூடிச் சோர்ந்து மயங்கிவிட்டேன்
என்னை-வாரி யெடுத்துமெள்ள அவள்மார்போடு தானணைத்து
மாத்திரைகள் வாயில் வலுவிலே தான்கொடுத்தாள்
மயக்கந் தெளிந்துஅவள் மார்போ டணைந்துநின்றேன்
செண்பகப்பூ வாசஞ் சீதள மழுந்துதையா 1730
அல்லி மலருக்கு அடிக்காம் பழுந்துதையா
குங்குமப் பூவுக்குக் கொடிக்காம் பழுந்துதையா
முன்னாள் பெருமாள் முடிநாகம் பள்ளிகொண்டார்
இந்நாளில் அல்லி யிளமார்பில் பள்ளிகொண்டேன்
முன்-பள்ளிகொண்ட ராமர் பாவனைபோல் தானாச்சு 1735
அப்படிக்கு மேனியவள் அதிரூப வஞ்சிஅய்யா
அவள்-செப்புடைய மார்பில் சிறந்து விளையாட

## உயிரைக் காக்க வேண்டல்

எப்படியுஞ் சேர்த்தி என்னுயிரைக் காருமையா
நாளைமற்ற நாளையிலே நாயகியைச் சேரவைத்தால்
என்பிறப்புக் கெல்லாம்நீர் ஏகச ரீரங்கண்டாய் 1740
உன்மனதும் என்மனதும் ஒருமித் திருப்பங்கண்டாய்
உயிரொன்றாய் நான்பிறப்பேன் உமக்குஊழியஞ் செய்திடுவேன்

---

1724 விதனம்—கவலை
1730 சீதளம்—சந்தனம், குளிர்ச்சி

அயிரா பதத்தோனே ஆயரே இப்போது
எனக்குத் துணையாக ஏதொரு காரியமும்
இப்போதென் காரியமும் நிச்சயம் செய்யுமென்றார் 1745

## எட்டாத கொம்புத்தேன்

அப்போது மாயவரும் அவரு மெடுத்துரைப்பார்
தப்பா ரசவட்டந் தனஞ்சயனே நீபோடா
எட்டாத கொம்பி லிருக்கின்ற தேன்தனக்கு
கொட்டாவி கொள்ளுங் குறுநரிக்குச் சிக்குமோதான்
சற்பன்ன பாசைகற்றுத் தரணி முழுதாளும் 1750

## அல்லியை மறந்துவிடு எனல்

விற்பன்ன மான விரதிஅல்லி சற்றறிந்தால்
பெரியதொரு வாளெடுத்துப் பிளப்பா ளொருபிளவாய்
வீண்பாடு அத்தனையும் விசையா மறந்துவிடு
என்றுரைக்கத் தானும் இனிய தனஞ்சயனும்
தீராது தீராது திட்டமுள்ள எம்பெருமாள் 1755
எந்த விதமும் எனக்குமணஞ் செய்யுமென்றான்
நன்றுநன்று அர்ச்சுனனே நல்மணமுஞ் செய்யுகிறேன்
அல்லியென்ற ஆசை அர்ச்சுனனே விட்டுவிடு
சிந்தையிலும் எண்ணாதே தேன்மொழியாள் அல்லிதனை

## வேறு பெண்ணை மணம் செய்வித்துத்தருவதாகக் கூறல்

உனக்குமணஞ் செய்வதற்கு உற்றகன்னி வேறேயுண்டு 1760
நாக நல்லலோகம் நவமணிசேர் பட்டணத்தில்
செகத்குரு வாசாரி சிஷ்டிக்குந் தன்மகளாள்
தேவாதி தேவ தெய்வலோகப் பசுங்கிளியாள்
கோடிசூ ரியப்பிர காசம்உண்டு குலக்கொடியாள்
ஆரிய குலத்து அதிரூபப் பெண்பெருமாள் 1765
இவள்தனிலு மெண்மடங்கு ஏந்திழையு மாதுநல்லாள்
அவள்தனையு முந்தனுக்கு ஆனமணஞ் செய்யுகிறேன்
விசையாநீ வாடா விருதாவில் நாமிவட்கு
அல்லும் பகலுமிவள் அடிப்பிறகே திரிந்தாலும்
உந்தனுக்கு மாலை யிடுவதில்லை காணுமிவள் 1770
வாடா அர்ச்சுனாவென்று மாயவருந் தானடந்தார்

---

1751 விற்பன்னம்—விவேகம், அறிவு
1751 விரதி—நோன்பு மேற்கொண்டவள்
1762 சிஷ்டிக்கும்—சிருஷ்டிக்கும்
1768 விருதா—வீணாய்,'விருதா வலைந்துழலும்அடியேன்'-திருப்புகழ்,266

### அருச்சுனன் மாயவனை மறித்துக்கெஞ்சுதல்

சுளித்தாப்போல் மாயவனுஞ் சுருக்காக வேநடந்தார்
மறித்துக் குறுக்காட்டி மாயருட தாள்பணிந்து
அய்யோ பெருமாளே ஆதி ரெகுபதியே
பொய்யதனைச் சொல்லியென்னைப் பொருந்தியிங்கே
கூட்டிவந்து 1775

### அல்லியைச் சேராவிட்டால் வாளால் குத்திமடிவேன் எனல்

ஏழா யிரம்பெண்ணை இச்சித்துக்கொண்டாலும்
அல்லிதோள் சேராட்டால் என்-ஆவிஉயிர் நில்லாது
வாரதில்லை உன்பிறகே மாயவரே கேட்டருளும்
கூறுரெண்டா யென்னுயிரைக் குத்திக் கிழித்திங்கே
மாய்ப்பேன் சரீரமென்று வாளெடுத்துக் கைப்பிடித்தான் 1780
கரிய பெருமாளுங் கையிரண்டுந் தான்பிடித்து
ஓடவொட்டார் மீளவொட்டார் ஒட்டாரம் பண்ணுகிறார்
தேடக் கிடையாது தென்மதுரை எல்லையிலே
இருக்குமிட மெல்லையிலே இரண்டுகுட்டை போடுறது
தப்பாது போடுறது தனஞ்சயனே கேட்டருள்வாய் 1785
நானுமுன்-கூட வரவேண்டாங் குட்டையும் போடவேண்டாம்

### மடல் எழுதுவதாகக் கூறல்

நான்-இப்போ மடலை எழுதிடுவேன் மாயவரே
வடிவுள்ள பேரழகாய் மடலெழுதி நின்றாலும்
மகரக்கொடி மல்லர்களை வலுவிலே ஏவிவிட்டு
நொக்கு நொக்காக நொறுக்குவாள் தப்பாது 1790
அல்லவென்று சொல்லி ஆதரவு சொன்னாலும்
பொல்லாத புத்தி போர்வந்து சூழ்ந்ததடா
ஆரை யனுப்புகிலும் ஆனையைத்தா னேவுகிலும்
பிரியமுடன் மடலெழுதப் போறேன்காண் மாயவரே
சேர விடைதாராய் செய்ய பெருமாளே 1795
மண்ணுலகை யுண்ட மாயவரே நீர்நினைத்தால்
பெண்ணுருவ மான பேதை யொருபொருட்டோ
வாழ்த்திவிடை தாருமென்று மாயருட தாள்பணிந்தான்

### மாயவனின் வாழ்த்து

வெத்திலையு மரிபிளவும் விரும்பியவன் கைகொடுத்து
எத்திசைக்கும் வல்லஅல்லி இளவரசு உந்தனுக்கு 1800
மாலையிடுவாள் நாளையென்று வாழ்த்தி விடைகொடுத்தார்

---

1772 சுருக்காக—வேகமாக
1773 மறித்து—இடையிட்டு
1782 ஒட்டாரம்—பிடிவாதம்
1790 நொக்கு நொக்காக நொறுக்குவாள்—மிகுதியாக அடிப்பாள்
1799 அரிபிளவு—பாக்கு

## விசையன் நீராடல்

விடைபெற்றுத் தாள்பணிந்து விசய னெழுந்திருந்து
வைகை நதியில் மகாதீர்த்தந் தானாடி
ஈரத் துகில்களைந்து இளையநல்ல பட்டுடுத்தி
வாரியே கூந்தல் மயிர்முடித்துப் பின்போட்டு 1805
கீறி மயிராத்தி கெந்தம் புகைபிடித்து
நாறுந் துளசி நற்கரந்தை மாலைகொண்டு
தேறும் பெருமாளைச் சிந்தையுள்ளே தான்நினைந்து
அங்கயற் கண்ணிதனை அடவாகத் தெண்டனிட்டு
மீனாட்சி தன்னை விரும்பியே நெஞ்சில்வைத்து 1810
தேவேந் திரனைச் சிந்தையில் தானினைந்து
அய்யரே யென்சுவாமி அருள்பெற்ற நாயகரே

## அல்லியைப்போல் மடல்எழுதத் தவமிருத்தல்

மெய்யான அல்லியைப்போல் விரும்பி மடலெழுத
பொய்யாத நாராசஞ்-சூரியும்-பொன்னேடுகள் வேணுமையா
மெய்யாத உத்திச்சு விசயன் தவசிருந்தான் 1815

## தேவேந்திரன் அருச்சுனனின் தவத்தை அறிந்து இந்திராணியிடம் கூறுதல்

தெய்வலோக கத்தரசன் தேவேந்தி ரன்தனக்கு
பொன்னாலே நாராசம் போதவே தான்காய்ச்சி
இருபுறத்துச் செவியிலையும் இங்கிதமாய்ப் பாய்ந்தாற்போல்
திடுக்கென்று தன்னாலே தேவேந் திரனெழுந்து
அடுத்துநின்ற இந்திராணி ஆரணங்கைத் தான்பார்த்து 1820
பாராய்நீ மாதே பாண்டிவள நாடு தன்னில்
கூந்த லழகி குலப்பெருமாள் அல்லியர்க்கு
பித்தெடுத்து உன்புதல்வன் பேய்பிடித்துக் கொண்டாற்போல்
வைகைக் கரையருகே மகாதபசு பண்ணுகிறான்
மடலெழுத வேணுமென்று மகாதபசு பண்ணுகிறான் 1825
கண்டாயோ மாதே காளையுட புத்திதனை
ஆங்காணும் நாயகரே அரிய திருவுலகில்
தந்தையர்க்கு முள்ளகுணம் மைந்தருக்கு மில்லையோதான்

## அருச்சுனர்க்கு இடையூறுகள் வராதபடி இந்திராணி வாழ்த்தல்

எந்த னருச்சுனர்க்கு இடறுகள் வராாமல்
வாரவுஞ் சூரி வடிவெழுத நாராசம் 1830

---

1806 கெந்தம் — கந்தம், மணப்பொருள்
1814 நாராசம் — எழுத்தாணி
சூரி — எழுதும் ஓலையில் துளையிட உதவும் கருவி
1815 உத்திச்சு — எண்ணி (?)

தீர அபரஞ்சி தீர்க்கமுள்ள வெள்ளேடு
கோபங்கள் வந்து கொடுமை நினைந்தாலும்
செந்தலை நாகன் சேஷந்தான் வந்தாலும்
பேரால் மிகுத்த பெருமாளைத் தீங்குசெய்த
பேரால் மிகுத்த பேரானை வந்தாலும் 1835
வலுவான அல்லி வாளாலே வீசுகிலும்
புத்திரரைக் கண்ட புவியாளு மன்னவரும்
மங்கையர் மோகிக்க வாழ்நாள் வளந்தேற
மாற்றரசர் தோற்றுவிட மைந்த னரசாள
வெற்றிகொள்ள அவ்வருமே வேட்டவிடக் கர்த்தனென்று 1840
சத்திய வாசகந் தவிராதே வாழவென்று
அர்ச்சுனனும் மன்மதனார் அல்லியும் ரதியெனவே
வரிசை யுடனே வாழ்ந்திருக்க வேணுமென்று

## பொன்தகடும் நாராசமும் இந்திராணி தருதல்

ஆயிரம்மாத் துப்பொன்னில் அபரஞ்சி தானெடுத்து
தாராய திரட்டித் தகடெட்டுந் தானாக்கி 1845
வச்சிரச் சூரி வகையாகத் தானெடுத்து
சூரிக்குப் புத்திசொல்வாள் சுரிகுழ லிந்திராணி
செம்பொன்னெழுத் தாணிக்குச் சேதியு மிகவுணர்த்து
பதினா றிரண்டு ரூபம் பரிபூரணமாக
எழுதிக் கொடுங்களென்று ஏந்திழையாள் தான்கூற 1850
நல்லதென்று தெண்டனிட்டு நமஸ்காரம் போற்றிசெய்து
வலுவான வல்விசயன் வலதுகையில் சேர்ந்ததுவாம்

## விசயனின் களிப்பும் மடல்எழுதத்தொடங்குதலும்

நாராசஞ் சூரிமுதல் நாகரீகப் பொன்னேடு
கண்டு விசயன் களிகூர்ந்து சிரசில்வைத்து
பூங்கா வனத்தில் பூஞ்சோலைக் குள்புகுந்து 1855
தீங்கில்லாச் செண்பகத்தில் இருமருங்கு முல்லைமலர்
பாங்காகச் செண்பகத்தில் பாவனையாய்த் தானெடுத்து

## மாயவரையும் விநாயகரையும் நினைந்து தொடங்குதல்

மாயவரே என்னுடைய மைத்துனரே யெனநினைந்து
மூசிக வாகனனை மூத்தோனைக் கைதொழுது
வாசிக மான வடிவுள்ள அல்லியைப்போல் 1860

## பொன்னேட்டில் அல்லியின் உருவத்தை எழுதத்தொடங்குதல்

எழுதவே சம்மதித்து எடுத்தானே பொன்னேட்டை
பழுதில்லா தேவுலகம் பஞ்சவர்ணப் பட்சிமுட்டை

---

1845 தாராய திரட்டி— ஒழுங்காகத்திரட்டி

உருண்டு திரண்டாற்போல் உச்சந் தலையெழுதி
வாருற்ற கூந்தல் மயிரெழுத மாட்டாமல்
சீருற்ற வில்விசையன் செங்கீரை போல்சோர்ந்து 1865
சோர்ந்த அருச்சுனனார் திக்கென் றெழுந்திருந்து
கவரிமான் போலக் கருங்கூந்தல் தானெழுதி
பெண்பெருமாள் போலே பிறகே முடிதிருத்தி
வில்போலப் புருவமும் வேல்போல் விழியெழுதி
கொந்தளம்போ லேதுலங்கக் கூரிய மூக்கெழுதி 1870
நெத்தி யெழுதி நீலமுத்துச் சுட்டிகட்டி
காந்தள்மலர் போலிருக்குங் கடைக்கண்ணில் மையெழுதி
ஓலைச் சுருள்போலே ஒழுங்குமிரு காதெழுதி
வள்ளிக் கொடிபோலே வளர்ந்த இருகாதிலேயும்
செம்பொன்னி னாற்பணிதி சிங்காரஞ் சோதிமின்ன 1875
மாணிக்கக் கொப்பெழுதி வச்சிரம்போல் தொங்கல்விட்டு
பன்னிப் பதித்தாப்போல் பவழம்போல் வாயெழுதி
முத்துப் பதித்தாப்போல் முன்னான்கு பல்லெழுதி
பல்லொளியைக் கண்டு பார்த்தனுமங் கேசோர்ந்தான்
சோர்ந்த அருச்சுனனார் சுருக்கென் றெழுந்திருந்து 1880
கன்னி இளங்கமுகு போலே கழுத்தெழுதி
கன்னிக்குப் பச்சைக் கணைபோலிரு தோளெழுதி
கன்னிக்கு மார்பெழுதி கனதனங்கள் இரண்டெழுதி
ஆலிலை போலே அமர்ந்த வயிறெழுதி
குங்கும வஞ்சிக் கொடிபோ லிடையெழுதி 1885
செவ்வாழைத் தண்டதுபோல் சேர்ந்த துடையெழுதி
பண்பா யிருகையும் பத்து விரலெழுதி

## அணிகலன்

நவமணிகள் சேர்ந்த ரத்தினக் கலையெழுதி
அல்லியர்க்கு ஏற்ற ஆபரண மேதேது
கண்டசரம் பொன்னுருட்டுக் காம சரம்பூண்டு 1890
மோகன மாலை முத்தாப ரணமுடன்
பஞ்சாரந் தொங்கல் பவழத்தா வடம்பூண்டு
அய்யா யிரந்தொங்கல் ஆணிமுத்துத் தாவடங்கள்
அஸ்தக் கடையம் அபரஞ்சி தொளுவந்தி

---

1870 கொந்தளம்—மாதர் தலை மயிர்ச் சுருள்
1876 கொப்பு—மகளிர் காதணி வகை
1890 கண்டசரம்—கழுத்தணி
பொன்னுருட்டு—பொன் மோதிரம்
1894 கடையம்—கடகம்
அபரஞ்சி—பொன்
வந்தி—தோளணி

வெள்ளிச் சரியுமின்னல் வெள்ளி யாலுருட்டும் 1895
பொன்வளையல் தொட்டுப் பொரிரத்தினக் காப்புமிட்டு
கணையாழி மோதிரங் கலக்கட்டு மோதிரங்கள்
பொத்தகம்போல் சேர்த்தகையில் பொன்சிலம்பு மின்னியெழ
அல்லியிட தன்னழகு ஆபரணஞ் சோதிமின்ன

## மடலுருவத்தையே கட்டியணைந்து மகிழ்தல்

கண்டந்த வில்விசையன் கட்டியே போயணைந்தான் 1900
எழுதிய சித்திரமும் இயல்பாய்த் தனஞ்செயனும்
மண்ணில் விழுந்து மதிமயங்கி யேயுருண்டு
பின்பு எழுந்திருந்து பேர்போன வில்விசையன்

## தோழியரைப் படத்தில் வரைதல்

அல்லியிட பக்கலிலே அழகுநல்ல தோழியர்கள்
பவழசேனை தோழியரைப் பாங்காகத் தானெழுதி 1905
அல்லியுட தோழியும் அருகாக நிற்கிறதை
இருவரையும் பார்த்து இருள்மூடிக் கொண்டதுபோல்

## தோழியர் படத்தைப் பார்த்துப் பிதற்றல்

பெண்மையுள்ள பார்த்தன் பிதற்றுகிறான் வாய்திறந்து
பவழசேனை தன்னுடனே பார்த்தனுமங் கென்சொலுவான்
அல்லியுட தோழியரே அழகான பெண்ணேகேள் 1910
வித்தாரப் பெண்ணேநீர் விதரூப அல்லியரே
உத்தார மாக உடன்படுத்தி வைத்தீரென்றால்
பாங்கியரே உந்தனுக்குப் பசும்பொன்னா லாபரணம்
பாங்கியரே உந்தனுக்குப் பட்டுப்பட் டாவளியும்
சருவா பரணமுந் தங்கமுத்து மாலைகளும் 1915
உசந்த சரிகைப்பட்டு உச்சிதமாய் நான்தருவேன்
பேசாமல் நிற்கிறாய் பெருமையோ பெண்மயிலே
செப்பினால் வாய்முத்துச் சிந்துமோ செண்பகமே
என்-ஆக முருகுதிப்போ அங்கம்புண் ணாகுதுகாண்
சோகமாய் வருகுதையோ சொல்லாயோ செண்பகமே 1920

## படத்திலுள்ள அல்லியழகைப் பார்த்துப் பிதற்றல்

அல்லியழ கைப்பார்த்து ஆணழக னென்சொல்லுவான்
சொல்லரிய கோகிலமே சோலைப் பசுங்கிளியே
காமன் மதிரதியே கன்னியப ரஞ்சியரே
வீமனுக்கு நேரிளையோன் விசைய னடியேனும்
ஆரென் றிராதேநீர் அதிரூப வஞ்சியரே 1925

வாரா யெனவே வலக்கையைப் போய்ப்பிடித்தான்

## படமும் அவனும் சேர்ந்து வீழ்தல்

இழுத்தான் விசையனப்போ இலங்கிய பொற்படத்தை
பொற்படமுங் கீழேவிழப் போய்விழுந்தான் மெல்விசையன்
அல்லி படமும் அவள்தோழி தன்படமும்
வில்லி அருச்சுனரும் விதமாக வேயுருண்டு 1930
தாழ்வில்லா வில்விசையன் தடுமாறி யேயெழுந்து
எடுத்து மிகப்படத்தை இணைசேர யூணிவைத்து
தொடுத்துக் குரோதந் தோகை இளங்குயில்மேல்
அடுத்து மடலருகே ஆணழகன் போயிருந்து
மட்டில்லாப் பதமுடைய மதுரைக்கு நாயகமே 1935
தேடக் கிடையாத தென்மதுரை நாயகியே
சொன்னதெல் லாங்குற்றஞ் சோதி மணிமுடியீர்
கொண்டொறுக்க வேணுமென்று குலமான வில்விசையன்
காலுரெண்டும் பூண்டு கொண்டானே காவலனும்
அப்போது மாயன் அவர்செய் யருளாலே 1940
சீரான பார்த்தனுக்குத் தீர்க்கம் நினைவுவந்து
எழுதின பொன்படமும் இணைசேரப் பேசுமோதான்
பழுதுதான் பட்ட பாடென் றறிந்துகொண்டு
சிந்தையுள்ளே தன்தகப்பன் தேவேந் திரனாரை
உச்சிதமா யுச்சரித்து உறுதித்தேர் வேணுமென்று 1945

## தேவேந்திரன் வச்சிரத்தேர் அளித்தல்

அந்தச் சணத்திலேதான் அரியதே வேந்திரனார்
மனதிலே தானறிந்து வச்சிரத்தே ருண்டாக்கி
சித்திரத்தே ருக்குநல்ல சிகரமும் பொன்னாலே
வச்சிரத்தே ருக்குநல்ல மாணிக்க முள்பதித்து
கோர்வைமுத் தாலசல்லிக் குலுங்கித் துவண்டுவிழ 1950
சித்திரத்தேர் முஷ்தேப்புச் சிறப்பா யிடக்கயங்கள்
மட்டில்லாக் கேடயங்கள் மகரக் கொடிபறக்க
சூரியன் போலே துலங்குநவ மணியிலங்க
நட்சத் திரமாலை நல்லமுத்து மாலைகளும்
விபரீத மாக விரைய அனுப்புவித்தார் 1955
குருகுலத்து ராசன் கொடிய விசையன்முன்னே
அதிரூபச் சித்திரத்தேர் அரைச்சணத்தில் வந்ததுவாம்
கண்டு விசையன் கையாற வேதொழுது
எடுத்து மடலை இரத்தின மேலைவந்து

---

1932 ஊணி வைத்து—ஊன்றி வைத்து
1957 அரைச்சணத்தில்—அரைக்கணத்தில்

## தென்மதுரையில் தேரூர்ந்துவரல்

பாண்டிவள நாட்டிலுயர் பாங்கான அல்லியர்க்கு 1960
குருகுலத்து ராசமன்னன் குறுகினான் தேரூர்
பச்சைக் குதிரை பரலோக வெண்புரவி
பூட்டினான் தேரதனில் பொன்னின் ரதமதனை
மீட்டினான் தேரை மின்னல்பாய்ங் தாற்போல்
தீர்க்கமுள்ள பெண்பெருமாள் தென்மதுரை வீதியிலே 1965
வருகுது சித்திரத்தேர் மகரக் கொடிபறக்க
ஆடி வருகுது ஆராய்ச்சி மணியனந்தம்
நாடி வருகுது நவமணிகள் சோதிமின்ன
கலக லெனக்கோடி கனக மணியாட
ஒளிவு பிரகாசம் ஒருகோடி சூரியன்போல் 1970
தென்மதுரை வீதியிலே தேர்வரவு கண்டிவற்கு
அல்லியர்க்குத் தானும் அறிவிக்க வேணுமென்று
ஓடிவந்து சொன்னார் உத்தமியாள் அல்லியர்க்கு
அதர சூரிகேட்டு அதிசயமாய்த் தானெழுந்து

## உப்பரிகையினின்றும் அல்லிபார்த்தல்

ஒண்மலர்க் கண்ணாளும் உப்பரிகை மேலேறி 1975
சித்திரத் தேர்வார திறமைகண்டு பெண்பெருமாள்
உத்திச்சுப் பார்த்தாளே ஒண்மலர்க் கண்ணாலும்
மகரக் கொடியும் மதிரூப நற்கொடியும்
அனுமக் கொடியும் அழகுவெள்ளைப் பாவாடை
கண்டு மனம்மகிழ்ந்து கடுகெனவே தானெழுந்து 1980

## தோழியரிடம் யார் என்று பார்க்குமாறு கூறுதல்

பவளசேனை தோழியரைப் பக்கமே வரவழைத்து
வெள்ளைப்பா வாடைகொண்டு வெற்றி வளம்பெறவே
கள்ளனோ வெள்ளனோ கருங்குயிலே நீபாரும்
வெள்ளனே ஆனாக்கால் வேண்டி வரவழையீர்
கள்ளனே ஆனாக்கால் கடியமழு வால்பிளந்து 1985
அகழியிலே தள்ளிவிட்டு வாரா யெனவுரைத்தாள்

## பவளசேனை இராட்சதர்களோடு சென்று பார்த்தல்

நல்லதென்று பவளசேனை நாயகியைத் தாள்பணிந்து
தன்னுடனே தான்பிறந்த தாழ்வில்லா ராட்சதரை
இலக்கமில் லாச்சேனை ஏழுகோடி ராட்சதர்கள்
மழுவுங் கடுவு மதியில்லாத் தண்டெடுத்து 1990

---

1977 உத்திச்சுப் பார்த்தாள்—உற்றுப்பார்த்தாள்
1990 மழு—கோடாலி
தண்டு—கோல், கதாயுதம்

அதிர்ந்து நடந்துவர அழகுள்ள தோழியரும்
கூடவே சென்றார் கோலமத வாளியைப்போல்
அப்பஅவர் தேரூர்ந்து அதிர்ந்துவரும் வீதியிலே
வீதிகடந் தரண்மனையைச் சென்றணுகி மெய்ப்பாக
நின்ற அருச்சுனரை நீலமணி வண்ணன்கண்டு 1995

## மாயனின் மாயம்

சூட்சமாய் மாயன் சுரைக்குடுக்கை தன்னிலேதான்
விசைய னுயிரை விதமாய்ப் பிடித்தடைத்து

## அவரவர் ஆயுதங்கள் அவரவரையே தாக்கவெனல்

ஆரொருவ ராகிலும் அதட்டிவந்து வெட்டுகிலும்
சீறியே மல்லர்கள்தான் சினந்துவெட்ட வந்தாலும்
அவரவர்கை யாயுதங்கள் அவரவரைத் தாக்கவென்று 2000
ஆனை மதமெடுத்து அஞ்சாமல் கொல்லவந்தால்
ஆனை யறிவுடனே அருச்சுனரைத் தாள்பணிய
வாக்குக் கொடுத்துமிக மாய னுதவிசெய்தார்

## பவளசேனை படத்தைப் பார்த்தல்

பவளசேனை தன்னையப்போ பாங்காக வேயழைத்து
அல்லியுந்தன் னையுமெழுதி வைத்தபொற் படம்பாரீர் 2005
கண்டு வெகுநேரங் கண்குளிரப் பார்த்துநின்று
கொள்ளவந் தானென்று சொன்னாலக் குலப்பெருமாள்
அஞ்சுதுண் டாய்வெட்டி அகழியிலே போட்டிடுவாள்
பார்த்துநாம் போறதல்ல பழிபடுத்த வேணுமென்று

## அவனை வாளால் வெட்டுமாறு பணித்தல்

கள்ள னிவனாரோ கட்டுடனே வெட்டவென்று 2010
தானும்வடி வாளெடுத்துத் தாக்குடனே வெட்டுமென்றாள்

## அவரவர் ஆயுதங்கள் அவரவரையே சாடல்

ஏழுலட் சங்கோடி எண்ணமில்லார் ராட்சதர்கள்
வீசினார் வாளெடுத்து வெற்றிவீரக் குலவையிட்டு
அவரவர்கை யாயுதங்கள் அவரவரைச் சாற்றிடுமாம்
பவளசேனை கைப்பரிசு பகட்டி விடுத்திடுமாம் 2015

## அல்லியிடம் சென்று முறையிடல்

ஓடுகிறா ளபயமிட்டு உள்கோட்டைக் குள்ளாக
வெருண்டோடி வந்தவர்கள் மெல்லியரைக் கைதொழுது

---

2014 சாற்றிடுமாம்—சாத்திடுமாம்
2015 பகட்டிவிடுத்திடுமாம்—அதட்டியோடச்செய்யுமாம்

பெண்கள் பெருமாளே பெருமையுள்ள நாயகமே
வம்பலருங் கொம்பே வளருஞ்சூ டாமணியே
வேறொரு சாதியல்ல வேதியன்போல் தோணுகுது 2020
அல்லியரே உம்மைப்போல் அழகாய் மடலெழுதி
என்னையுந் தன்கூட எழுதி அழகாக
மடலூர்ந்து நிற்கிறான் வடிவான வேதியன்போல்
கண்டு அடியேன் கண்கொள்ளாக் கோபமுடன்
எனக்குத் துணையாக ஏழுலட்சம் ராட்சதரும் 2025
வெட்டவென்று வாள்வீச வித்தைமந்திர தெய்வீகமோ
எங்கள்கை யில்வாளே எங்களையே தாக்குதம்மா
வாளை எறிந்துவிட்டோம் மழுவுகளைப் போட்டுவிட்டோம்
வித்தையிலே வல்ல வித்தாரக் கள்ளனென்றாள்

## அல்லி நாகங்களை அழைத்து அவன் மீது ஏவல்

அந்த மொழிகேட்டு அகோரமாய்ப் பெண்பெருமாள் 2030
சிந்தை கலங்காமல் சிறுகைவடி வாளெடுத்து
சற்பன்ன பாசையிலே சற்பத்தைத் தானழைத்து
அனந்தன்வா சுகிதரதன் ஆனசங்கு பாலனுடன்
காற்கோடன் தன்னுடனே கடியெட்டு வகைநாகம்
ஓடிவந்து உத்தமியாள் ஓலக்கம் வந்துகண்டு 2035
என்ன புத்தியென்று எட்டு வகைநாகம்
நாங்கள் கேட்க நாயகியாள் கூறுவாளாம்
நாகமே கேளீர்காண் நம்முடைய தேசத்திலே
எண்ணாமல் பார்ப்பான் எதிராளி யாகவந்தான்
புண்ணாக வேகடித்துப் புத்தி லவனெலும்பைப் 2040
போட்டுவர வேணுமென்று பொற்கொடியா ளேவிவிட்டாள்
எட்டுவகை நாகம்—இவனைக்—கடித்துத் துணிப்பமென்று
என்னைவிடு உன்னைவிடு மென்றுவரும் வேளையிலே

## நாகங்கள் அருச்சுனனை வணங்குதல்

கண்டது நாகங்கள் காண்டாவன மெரித்தவனை
அருச்சுன சுவாமியென்று அடிவணங்கித் தெண்டனிட்டு 2045
நாகங் குடைபிடிக்க நல்ல-காற்கோடன் தாலாட்ட
அனந்தன்வா சுகிநாகம் அடிமைத் தொழில்கள்செய்ய
மீளாமல் நாகமெல்லாம் விரும்பியே காத்திருக்க

---

2019 வம்பலருங்கொம்பே—வம்பு-மணம், உவமைப்பொருளில் வந்தது
2029 வித்தாரக்கள்ளன்—மாயத்திருடன்
2030 அகோரமாய்—உக்கிரத்துடன், கோபமாய்
2035 ஓலக்கம்—அத்தாணிமண்டபம்
2042 துணிப்பம்—துண்டாக்குவோம்
2043 'என்னைவிடு உன்னைவிடு என்று வரும் வேளையிலே'—நாகங்கள் ஒன்றோடொன்று போட்டியிட்டுக்கொண்டு முந்தி வருவது இங்ஙனம் சுவைபட அமைந்துள்ளது.

## அல்லி அர்ச்சுனன்மீது சூரியனை ஏவல்

அல்லியருங் கேட்டு அதிகமிக்க கோபங்கொண்டு
சூரியனை இங்கேவர வேணுமென்று கைதொழுதாள் 2050
சூரியா தித்தன்வந்து துருசாகப் போற்றிநின்றான்
சூரியனைக் கைதொழுது சொல்லுவாள் அல்லியரும்
ஆதித்தர் ஆரியரே அடியே னுரைகேளீர்
மாயவித் தைக்காரன் மடலூர்ந்து வந்தவனை
தீயா யெரித்துச் சீக்கிரமாய் வாருமென்றாள் 2055
அந்த மொழிகேட்டு ஆதித்தன் கோபமுற்று
ஆயிரங் கண்ணும் அனலாக வேதிறந்து
எதிர்த்து வருகிறார் எதிர்நின்றோர் தான்மடிய
மாயா வுதாரன் மனதிலதை அறிந்துகொண்டு

## சூரியன் அருச்சுனனை வாழ்த்திச் செல்லுதல்

அரூபமாய்த் தோன்றி அருச்சுனன் கிட்டவந்தார் 2060
காரிய மாகக் கலைக்கவந்த சூரியனார்
எண்ணாமல் யாவரையும் எரிக்கவந்த சூரியனார்
பார்த்தனென்று கண்டுடனே பருதிக் குளிர்ச்சியதாய்
பருதி எதிரேவரப் பார்த்தனெதிர் வந்துகண்டு
முக்கால் வலம்வந்து மூவிருகால் தெண்டனிட்டு 2065
பார்த்தனுக்குச் சூரியர் படாகமொன்று தான்போர்த்தி
வலுவான சூரியனார் வாழ்த்தியே போகலுற்றார்
சூரியன் றனைத்தடுத்தான் சூதான கள்ளனென்று

## அல்லி கோபமுற்று மல்லர்களை ஏவுதல்

வாளல்லி கோபமுற்று வலுவான மல்லர்களை
ஏழா யிரங்கோடி இருப்புலக்கை தான்கொடுத்து 2070
நொறுங்க இடித்து நொறுக்கிவிட்டு வாருமென்றாள்
எண்ணெய்க் குடத்தை எறும்புவந்து சூழ்ந்தாற்போல்
மல்லர்கள் வந்து வளைந்தார் தனஞ்செயனை

## இரும்புலக்கை மல்லர்களையே தாக்குதல்

இரும்புலக்கை கொண்டு இடிக்கவந்த மல்லர்களை
அவர்க ளிரும்புலக்கை அவர்களையே தானிடிக்கும் 2075
கதுப்பி லிடிக்கிறதுங் கன்னத்தில் போடுறதும்
ஆற்றாமல் மல்லரெல்லாம் அலறி அபயமிட்டு
கூற்றுவனோ வென்று குலைகுலைந்து ஓடலுற்றார்
கண்டு வளநாடி கடுங்கோபங் கொண்டெழுந்து

---

2066 படாகம்—அழகிய ஆடை
2069 மல்லர்கள்—மற்போர் வீரர்கள்
2076 கதுப்பு—கன்னம்; முடி

## அல்லி ஆனையை அழைத்து ஏவுதல்

ஆனை அழையுமென்றாள் ஆனந்த வாள்மாரி 2080
ஆனை நிலைப்பாகர் அந்நேர மேயோடி
ஆனையைக் கண்டவர்கள் அஞ்சியே தெண்டனிட்டு
அறிவுள்ள வேழரசே அல்லிவரச் சொன்னாள்காண்

## வெள்ளானை விசையனை யாரென ஊகித்தறிதல்

வெள்ளானை தன்மனதில் மெய்ப்பா யறிவுவந்து
மாலைக்குழ லாளுக்கு-இப்போ-மணம்புரிய நாளாச்சு 2085
வல்லி யரிவையர்க்கு மடலூர்ந்தான் வில்விசயன்
ஆணழகன் வில்விசையன் அல்லியரைத் தேடிவந்தான்
சிந்தித்துத் தன்மனதில் சீக்கிரமாய் வந்ததுகாண்
கண்டுமந்த அல்லியருங் கைகூப்பித் தான்தொழுது
முந்தித் தவசிருந்து முடிசூட்டி வைத்தீர்நீர் 2090
பிந்தித் தவசிருந்து பிறவா முடிதரித்தீர்
இந்த விசைபாப்பான் எந்தன்மட லூர்ந்துவந்தான்
மடலூர்ந்து வந்தவனை வதைசெய்து வாருமென்றாள்
கண்டு கொல்லவென்று கடுகி யனுப்பிவித்தாள்

## மதயானை அருச்சுனனை மதுரைநகரில் ஊர்வலமாகக் கொண்டு வரல்

பாண்டி மதவானை பார்த்த னெனவறிந்து 2095
மகளுக்கு நாயகனார் மருமக னென்றறிந்து
ஒருகாதுங் கண்கரமும் ஒஞ்சரித்த பார்வையுமாய்
முக்கால் வலம்வந்து மூவிருக்கால் தெண்டனிட்டு
அல்லிய ழகுக்குஇவர் ஆனமண வாளனென்று
மருமகனைத் தூக்கி மத்தகத்தின் மேலேவைத்து 2100
மதுரைநகர் வீதியிலே வலமாகச் சுற்றிவந்து

## அல்லியின் சிம்மாசனத்தருகே அருச்சுனனை அமர்த்துதல்

அல்லி யிருக்குமந்த ஆசாரக் கொலுவுதனில்
வலது புறமாக வைத்துக்காண அருச்சுனரை
மாயன் பெருமாளும் மச்சினனார் தன்னருகில்
வந்திருக்கும் வேளையிலே வல்விசைய னப்போது 2105

## தனஞ்செயன் நினைவுவந்து கண்ணனிடம் விளக்கம் கேட்டல்

தன்னினைவு வந்து தனஞ்செயனார் கூறுவாராம்
என்பெரு மாளே எனக்கான மைத்துனரே
நன்பெருமா ளேயுதவும் நாரா யணமூர்த்தி
மடலெங்கே தேரெங்கே வந்தவகை சொல்லுமென்றான்

---

2092 இந்தவிசை —இந்தமுறை
2097 ஒஞ்சரித்த பார்வை—ஒய்யாரப்பார்வை

## ஆதிநாராயணரின் அரூப மொழி

ஆதிநா ராயணரும் அரூபமாய் நின்றுகொண்டு 2110
அல்லி சினந்துஉன்னைக் கொல்லவென்று ஆனைவிட்டாள்
ஆனைதனை ஏவிவிட அறிவுள்ள வெள்ளானை
கொண்டுவந்து சிம்மா சனத்தி லிருத்தியதே
மட்டுக் கடங்காளவள் மனதிலேநீ எண்ணாதே

## பூவினை அல்லிக்குத் தருக எனக்கூறல்

பூவிதமாய்க் கட்டிமுதல் போக அனுப்பிவிடு 2115
மற்றநாள் அப்பூவை வகையாக நீகொடுபோய்
பிரியமாய்க் கையேந்தி வாங்குகிற வேளையிலே
எதிர்த்து உனைப் பார்ப்பா ளீசுமாய் நகைத்துவிடு
கண்டு மயங்கியவள் கைவசமாய்த் தான்சேர்வாள்
மற்றநாள் பொழுதில் மாலையிடு வாளுனக்கு 2120
புத்தி யுடன்சொல்லிப் போனார் பெருமாளும்

## அருச்சுனன் தேவேந்திரனிடம் வகைவகையாகப் பூக்களைக் கேட்டல்

அந்தப் படியே அருச்சுனனும் நல்லதென்று
சிந்தை மகிழ்ந்து தேர்விசைய னப்போது
தேவேந் திரனாரைச் சிந்தையுள்ளே தானினைந்து
பொன்னுலகில் வாசமுள்ள புட்பங்கள் வேணுமென்றான் 2125

## பூ வகைகள்

முல்லை யசோகு முழுநீலச் செண்பகமும்
மகிழம்பூப் புன்னை மணமான காந்தள்மலர்
தீவுசிறு செண்பகமும் சீரான செவ்வந்தியும்
மருவுங் கொழுந்தும் மதிமயக்கும் வெட்டியின்வேர்
வாசமுள்ள புஷ்பம் வகைவகையா யுள்ளதெல்லாம் 2130
ஏதேது கேட்டதெல்லாம் இந்திரனு மனுப்பிவித்தார்.
இந்திரனார் கொடுத்துவிட்ட இயல்பான புட்பமெல்லாம்
வந்து விசையன்முன் வகைவகையாத் தான்குவித்து
கண்டு விசையன் கதலிநார் வேணுமென்று

## பூக்களைத் தொடுத்தல்

அப்போ—ஈனாத வாழை இளவாழை நாரிழைத்து 2135
துரையான அல்லிக்குத் தொடுத்தான் துடாமாலை
முகந்துவிளை யாடியபின் மோகம் விளையாட

---

2134 கதலிநார்—வாழைநார்
2136 துடாமாலை—பெரிய மாலை

விதமாகப் பூமுகர வெட்டிவேர் மதிமயக்க
வித்தார மாய்முகர விரகதாப மவிமீற
பித்தாய் விரகமதம் பிடித்திழுக்கப் பூத்தொடுத்தான் 2140
விந்தை விந்தையாக விதமா யனுப்பிவித்தான்

## பூவை முகர்ந்ததும் அல்லிக்கு விரக வேதனை ஏற்படல்

பூவை முகர்ந்து பொற்கொடியா ளல்லியரும்
விரகதாபம் மீறி விதவிதமாய்ப் புத்தியெண்ணி
சொக்கர்பங்கி லேவளருந் துய்யதொரு மீனாட்சி
அங்கயற்கண் ணம்மை அகிலாண்ட ஈசுபரியே 2145
சிற்றின்ப தாபமென்னைச் சிறக்கவே மூடுதம்மா
ஆணழகன் வில்விசையன் அருச்சுனனார் வாராரோ
தாகந் தணியேனோ-அவர்-தங்கமுகம் பாரேனோ
மோகந் தணியேனோ-அவர்-முன்னழகைப் பாரேனோ
எண்ணாது எண்ணி இளங்கீரை சோர்ந்தாற்போல் 2150
பஞ்சணை மெத்தையின்மேல் பைங்கிளியுங் கண்வளர்ந்தாள்

## ஆதிநாராயணன் அல்லிக்குச் சொப்பனம் உண்டாக்குதல்

ஆதிநா ராயணனார் அவுதான மாகவொரு
சோதனை யாகவொரு சொப்பனமுண் டாக்குவித்தார்
பாம்பாக வந்து படுத்துவிளை யாடினதும்
வேட்டைக்குப் போம்போது வேதியனாய் வந்ததுவும் 2155
மதியாமல் சற்றும் மடலூர்ந்து வந்ததுவும்
தர்மர் சகோதரனார் தனஞ்செயனே யென்றறிந்தாள்
அதிகால மேபொழுதில் ஆனசுக்கிர வாரமதில்
சிங்கா சனத்துமுனனே சிலபெண்களும் அல்லியர்க்கு
கொண்டுவந்து பூச்செண்டு கொடுக்கவே வாங்கையிலே 2160
சரசமாய் வில்விசையன் சற்றே நகைகள்செய்து
சோர்ந்து விழக்கண்டு துடித்து எழுந்திருந்து
திரும்பி யெடுக்கச் சினந்துமுகம் பார்க்கையிலே
சுக்கிரன் வாரமதில் தோன்றிய பாவனைபோல்
வித்தார மாகஅப்போ விசைய னெழுந்திருந்தான் 2165
பித்தாய மனதில் பெருமாளைத் தானினைந்து
மகாதீர்த்த மாடி மதுரை நதிமூழ்கி
தீர்த்தங் ளாடிச் சிவனை மனம்நினைந்து
தந்தையரை நோக்கித் தவமாக வேநினைந்து
பொன்னுலகில் புட்பம் போதவே வரவழைத்து 2170
சிற்றடியி னால்வாழைச் செவ்வாழை நாருரித்து
பத்து விரல்கொண்டு பாங்காய் மலரெடுத்து

---

2144 சொக்கர்பங்கிலே—உமையொருபாகத்தில் இருக்கும் நிலை
2152 அவுதானம்—அவதானம்
2165 வித்தாரமாக—திறமையாக

கொல்ல வரும்புலிபோல் கோபித்துப் பார்த்தாலும்
காமக் குரோதங் கண்முழிகள் தான்சோர
முல்லை யசோகு முழுநீலச் செண்பகமும் 2175
அல்லி மலரோடே அனங்கனைய புட்பமைந்தும்
முன்பின் னாய்ப்பார்த்து முன்னாலே ஆபரணம்
பத்தியே பூச்செண்டு பாங்காய் மலரெடுத்து
சித்திர மான தெய்வரம்பை தான்போல
இளமை பதுமை இந்திரலோகக் கிளிபோல 2180
சருவா பரணமுந் தங்கப்பிர காசமின்ன
ஒளிவான சிற்றிடையில் உத்திராட்சப் பட்டுடுத்தி
கொண்டையிலே குப்பி குலுங்கி அசைந்தாட
கோர்வை முத்துமாலை குலாவிய பூச்சரங்கள்
கண்ட சரமாலை கழுத்தில் தகதகென்ன 2185
மாணிக்க நிறப்பதக்கம் மார்பிலே சோதிமின்ன
பொன்சிலம்பு கலகலெனப் பொற்சதங்கை கொஞ்சிவர
கொப்பிட்டு வாளியிட்டு கொந்தளப்பொன் னோலையிட்டு
காலாழி பீலி கனத்த மயிலடியும்
தோகைமயி லாடுகின்ற சோலை நடுவாக 2190
கோகநக மாகவொரு கொஞ்சுகிளி யாகுமென
மோகாதி யென்ன மொய்குழலாள் சூழ்ந்துவர
அன்னம்போல் சாயலிவ ளாமென நடந்துவந்தாள்
பெண்வடிவு கண்டுசில பெண்கள் மயங்கிவிழ
நட்டனையுங் கைவீச்சும் நாடகமுந் தோதகமும் 2195
பட்டு விழப்பார்க்கும் பருவேல் விழிகள்ரெண்டும்
கருக்குருவி வாலதுபோல்-கடைக்-கண் ணுக்கு மையெழுதி
சந்தனமுங் குங்குமச் சவ்வாது பரிமளமும்
பூவாசங் கண்ட பூங்கிளியுஞ் சோர்ந்துவிழ
செண்பகப்பூ வாசஞ் சிலதுபெண்கள் சோர்ந்துவிழ 2200
வித்தாரஞ் சென்றுகண்டு விசையனும் போய்நடந்தான்

---

2174 கண் முழிகள்—கண் விழிகள்

2183 குப்பி—சடைக்குச்சு

2185 கண்டசரமாலை—கழுத்தில் அணியும் அணிகலன்

2188 கொப்பு, வாளி, கொந்தொளப் பொன்னோலை — மகளிர் காதணி வகை

2189 காலாழி, பீலி — மகளிர் காலில் அணியும் அணிகள்

2191 கோகநகம்—செந்தாமரை

2195 தோதகம்—சாலவித்தை

## முத்து மண்டபத்தில் அல்லி ஊஞ்சலாடுதல்

அல்லியெனும் பெண்பெருமாள் ஆணிமுத்து மண்டபத்தில்
பொற்பிர காசம்மின்னப் பொன்னூஞ்சல் தன்மீதில்
ஒருகோடி சூரியனும் ஒன்றாய்த் திரண்டாற்போல்
அரிவையர்கள் தாலாட்ட அல்லியூஞ்ச லாடுகிறாள் 2205
விருதமுத் துச்சல்லி வெண்சா மரம்வீச
பவழமுத் துச்சல்லி பதினா யிரம்வீச
சங்கீதம் பாடத் தனுராகந் தான்பாட
சிற்றடி வீணை சிலவீணை தான்முழங்க
எல்கைதி லோத்தமைபோல் ஏந்திழையாள் அல்லியரும் 2210
நவமணிசேர் பொன்னூஞ்சல் நாயகியா ளாடையிலே
நவமணிச் சித்திரங்கள் நாதகீ தம்பாட
பூச்செண்டு கையில்கொடுத்துப் போவாரும் மீள்வாரும்

## அருச்சுனனின் மோகினி வேடம்

அந்தநல்ல வேளையிலே அருச்சுனனார் மோகினிபோல்
சந்தடியில் கையைத் தட்டியே வாங்கிவிட்டான் 2215
வெறுங்கை யைக்கண்டு வீரரதி கோபங்கொண்டு
ஏறிட்டுப் பார்த்தவளும் எரிபறக்க வேவிழித்தாள்
தன்னிலையும் எண்மடங்கு தாதியிவ ளல்லவென்று
வெட்டவந்த கையை விபரிதமாய்த் தாழ்த்திவிட்டாள்

## அருச்சுனனின் சிரிப்பால் அல்லி மயங்குதல்

திட்டமென வேநகைத்தார் தீர்க்கமுள்ள பல்லொளியை 2220
கண்டு மயங்கியே விழுந்தாளே அல்லியரும்
கைசோர்ந்து மெய்சோர்ந்து கையில் வளைசோர்ந்து
உடுத்த கலைசோர்ந்து உள்ளம்மதி வேறுபட்டு
மோகிச்சு வீழ முற்குழலாள் சூழ்ந்துகொண்டார்

## பவளசேனை கோட்டைக் கதவுகளைச் சாத்துமாறு ஆணையிடல்

பாங்கான தோழியவள் பவளசேனை யோடிவந்து 2225
பெண்ணாக வந்துஅவன் புகுந்தானே கள்ளனென்று
தலைவாசல் கோட்டை சாத்து கதவையென்றாள்
சாத்தினார் கோட்டைத் தலைவாச லாயிரம்பேர்

## பஞ்சவர்ணக்கிளிபோல் பறந்து கோபுரத்தில் அமர்தல்

கண்டு அருச்சுனனார் கலங்கியே தன்மனதில்
பஞ்சவர்ணக் கிளியதுபோல் பறந்து அருச்சுனனார் 2230

---

2210 எல்கை—ஒளிமிக்க
2224 மோகிச்சு—மோகித்து, விருப்பம் கொண்டு

கோபுரத்தின் மீதேறி யிருந்தான் குருகுலத்தோன்
வந்தவந்த பெண்கள் வகையுடனே சோதிச்சார்கள்

## அருச்சுனன் தன்னுடைய வரலாற்றைக் கூறல்

அந்தநல்ல வேளையிலே அருச்சுனனார் கூறுவாராம்
வாருங்கோ பெண்ணே மாயனுட மைத்துனன்நான்
தர்மருக்கு நேரிளைய தனஞ்செயனா ரென்பேரு 2235
வீமருக்கு நேரிளைய விசையன்அடி யேன்பேரு
பரிநகுலன் முன்பிறந்த பார்த்தனடி யென்பேரு
சகாதேவன் முன்பிறந்த தனஞ்செயனா ரென்பேரு
நாளையே சோபனங்கள் நாலுதிக்கும் ஓலைவிட்டு
மோகசுப மாலைதனை மொய்குழலாள் அல்லியர்க்கு 2240
சூட்டுவது தப்பாது தோகையரே கேளுமடி

## மைத்துனன் கண்ணனிடம் சேர்தல்

என்றுபறந் தருச்சுனனார் எம்பெருமாள் தன்னருகே
மாயமாய்த் தான்பார்த்து மைத்துனரைக் கண்டபின்பு
போற்றியே தாள்பணிந்து புகழ்பார்த்தன் நிற்கையிலே

## கண்ணன் காயா பழமா எனக்கேட்டல்

காயோ பழமோசொலக் கடிய அருச்சுனனே 2245
காயா யிருந்ததிப்போ கனியாச்சு யெம்பெருமாள்

## சிரிப்பால் அல்லி மயங்கியதைக் கூறல்

மேற்புருவம் வில்லாய் விழியிரண்டு மம்பெனவே
கொல்ல அதர்சூரி கோபமாய்ப் பார்க்கையிலே
பல்லொளியும் மார்பில் பட்டுருவி வீழ்ந்தளைபா
கதித்தமுடி அல்லியரைக் காயப் படுத்திவந்தேன் 2250

## ஆதிரகுராமர் அருச்சுனரைப் பாராட்டல்

ஆதிரகு ராமர்அப்போ அருச்சுனரைக் கொண்டாடி
ஆணழகா பேடியுந்தன் ஆண்மையே ஆண்மையடா
பாரடர்ந்த சண்டையல்ல பகைத்தாரு யுத்தமல்ல
பேரழகி பெண்களுடன் பேராசை பூட்டிவெட்ட
குருவில்லா உபதேசங் கொண்டாடிக் கற்றதுநீ 2255
திருவளருந் தென்மதுரை திறம்பெற்ற நாயகியாள்
அருச்சுனரே யென்னவுந்தான் அலறி யெழுந்திருந்து

---

2232 சோதிச்சார்கள்—சோதித்தார்கள்
2239 சோபனங்கள்—சுபச்செய்தி

## அல்லி தான்கண்ட கனவினைத் தோழியிடம் உரைத்தல்

தனக்குக் கவரியிடுந் தாதி முகம்நோக்கி
வயிரக் கவரியிடும் மங்கை முகம்நோக்கி
தாய்போல் வளர்த்தெடுத்த தாதி முகம்நோக்கி 2260
ஒரு-சொப்பனங் கண்டேன் துன்று குழலாரே
குந்தமா தேவி குலப்பெரிய தேவேந்திரரைச்
சிந்தையிலே தானினைந்து சிவனே யெனவிரும்பி
பிண்டந் தனையெடுத்துப் பிரியமுட னேவிழுங்க
பார்த்தன் பிறந்தார்அவர் பல்லொளியும் பேரொளியும் 2265
தாரார் தனஞ்செயனார் தர்மர் சகோதரனார்
பார்வீம ருக்கிளையோர் பரிநகுல சாமியண்ணர்
முற்காலம் பிற்காலம் முயற்காலம் மூன்றினையும்
தப்பாம லேயுரைக்குஞ் சகாதேவர் தங்களண்ணா
ஆதிநா ராயணர்க்கு அன்பான மைத்துனனார் 2270
அனலில் பிறந்ததொரு ஆகாச தேவதையாள்
தோரா ரவழகி துரோபதைக்கு நாயகனார்
ஸ்ரீராமர் தங்கை சுபத்திரைக்கு நாயகனார்
பேரழகன் வில்விசையன் பெருமா ளுடனிருவர்
மதுரை நகரிலிப்போ வந்திருக்கக் கண்டேன்நான் 2275
கலியாண மென்னக் கடுகி முரசறைந்து
அம்பத்தாறு தேசத்து அரசர்வந்து சூழ்ந்துநிற்க
பேருலகை யுண்ட பெருமாளுந் தேரூர
சீரழகன் வில்விசையன் சித்திரத்தே ரேறிவர
வெள்ளானை மேலேறி விசயனுக்கு மாலையிட 2280
தெள்ளாருந் தேன்மொழியே கண்டேன் தெரிசனத்தில்
பள்ளி யறையில் பருமுத்து மண்டபத்தில்
கோவைக் கனியிதழைக் கொய்து விளையாட
பூத்த மலர்தனிலே போனவண்டு முகர்ந்தாப்போல்
தீர்க்கமுள்ள வில்விசையன் திருவாசங் கொண்டாண்டி 2285
செண்பகப்பூ போலிருக்குஞ் செம்பொன் திருமேனி
காளை விசயனுக்குக் காட்டிக் கொடுத்தேண்டி
வெட்டுஞ் சமத்தும் வீரியமும் நான்போட்டு
கட்டுங் கனமுங் காலள்ளி பட்டேண்டி
தெள்ளும் புகழும் திறல்வீரம் நான்போட்டு 2290
தெள்ளும் புகழ்மார்பில்-சில-கிள்ளுமிகப் பட்டேண்டி
அல்லி மலருதித்த அரியமலர் வாசமெல்லாம்
வில்லி அருச்சுனனார் விதமாகக் கொண்டாண்டி

---

2282 பருமுத்து—பெரிய முத்து
2288 வெட்டுஞ்சமத்தும் வீரியமும்—திறமையும், வீரத்தன்மையும்

## கண்ட கனா பலிக்குமெனத் தாதி கூறுதல்

அந்த மொழிகேட்டு அவள்தாதி கூறுவளாம்
விந்தையுள்ள பெண்பெருமாள் விபரிதமாய்க் கண்டகனா 2295
உத்தமியாள் கண்டகனா ஒருநாளும் பொய்யாது
சித்தம் மகிழ்ந்துமிகச் சீதேவி உன்பொருட்டால்
வாள்விசயன் தன்கழுத்தில் மாலையிடு வாய்நாளை
மன்மதனும் ரதியும்போல் வாழ்வீர் மகிழ்ந்திடுவீர்
என்னுடனே சொன்னமொழி இயல்பு மிகவரிவும் 2300
அருச்சுனரைக் கண்டுஅல்லி அதிமோக மானாளென்று
ஆறாயிரம் பாண்டியரும் அறிந்து மனம்மகிழ்ந்து
இன்றைக்குப் பத்தாநா ளென்றே கலியாணம்

## வீதி அலங்காரம்

கொட்டி யலங்கரித்துக் கோவிலெங்கும் பூசுவித்து
வீதிக்கு வீதி விதமாய்க் குறிஞ்சிகட்டி 2305
வீதிக்கு வீதி விதமாகச் சித்திரத்தேர்
வீதிக்கு வீதி விதமாகத் தோரணங்கள்
வீதிக்கு வீதி விதமாகச் சித்திரங்கள்
மதுரைக்கு நாலுதிக்கும் மகரமேரு உப்பரிகை

## சோபன ஓலை விடல்

மதுரைஅம்பத் தாறுகாதம் ஆளோலை போகவிட்டு 2310
தேசமம் பத்தாறு தேசத்து ராசருக்கும்
சேரனுக்குஞ் சோழனுக்கும் செய்ய பெருமாளுக்கும்
அசுபதி கெசபதிக்கும் ஆன நரபதிக்கும்
திரியோ தனனார்க்கும் திறல்வீர ரைவருக்கும்
அயோத்தி ராசருக்கும் ஆனைகுந்தி ராசருக்கும் 2315
சொல்லுறுதி நிச்சயமாய்ச் சோபன ஓலைவிட்டு
தீவுபதி னாலுக்குந் தீர்க்கமாய் ஓலைவிட்டு
ஏழு கடலுக்கும் எழுகடல்சூழ் நாடுகளுக்கும்
தட்டி முரசறைந்து தங்கத்தா லோலைவிட்டு
அங்கங்கி லுள்ள அரசர்படை ராணுவமும் 2320
சங்கங் திரண்டு சந்தோஷ மாய்க்கூடி
வந்தார் தேசத்திலுள்ள மகாகோடி ராசாக்கள்

## துரியோதனன் ஓலைகண்டு வரல்

தேசத் தழகன் துரியோ தனப்பெருமாள்
சோபன ஓலைகண்டு துடியா யெழுந்திருந்து

---

2305 குறிஞ்சி — பூவகை

2316 சோபன ஓலை—சுபச்செய்தியமைந்த ஓலை

அம்பத்தார் படைத்தலைவர் அத்தனையுங் கூட்டமிட்டு 2325
பதினெட்டு அக்குரோணி படைமன்னர் கூட்டமிட்டு
வந்து இறங்கினார் வைகைக் கரையோரம்

## அரசர்களின் கூடாரங்கள்

வைகைக் கரையோரம் வளைத்தடித்தார் கூடாரம்
சோழனுட கூடாரம் சோதி நவமணிகள்
ஒன்பது ரத்தினமும் ஒளிவுபிர காசமின்ன 2330
ஒன்பது தானமிந்தாவென் றொற்றைமணி யோலமிட்டு
சிவசிவா வென்று சிலமணிக ளோலமிட
இராமசெய மென்று நாலுதிக்குங் கொடியாட
ரதகெச பதாதியுடன் நாலுதிக்கும் கோடிபடை
சேரனுட கூடாரஞ் செம்பொன் தகதகென்ன 2335
கீர்த்தியா யுயர்ந்த கெருடக் கொடிபறக்க
சங்குசக்கர ஆலவட்டஞ் சதுரக்கொடி தான்துலங்க
ஆனை குதிரை அதிவீர ராசாக்கள்
குருகுலத்து வேட்டுவர்கள் கோடி படைத்தலைவர்
மதுரைக்கு மேல்புறமாய் வந்திறங்குங் கூடாரம் 2340
தேசத் தழகன் துரியோ தனப்பெருமாள்
தான்கொள்ள வேணுமென்று தங்கப்பூ அல்லியரை
பதினெட்டு ஆனையின்மேல் பாங்காகப் பொன்னனுப்பி
அஞ்சானை மேலே ஆபரணந் தானனுப்பி
பத்தானை மேலே பட்டுப்பட் டாவளிகள் 2345
ஆனைப்பெருக் கத்துக்கு ஆனைதிரேகம் பொன்னாலே
குதிரை எழுநூறும் குலத்துஅப ரஞ்சியினால்
பசும்பொன் ரதமும் பவழத்தால் வண்டிகளும்
தங்கத்தால் வண்டிகளுந் தகதகென்று சோதிமின்ன
சீவுஅப ரஞ்சியினால் தீவுசிங்கம் பொன்னாலே 2350
ஆயிரம்மாத் துள்ளதங்கம் ஆளிபத்துத் தானெழுதி
வெள்ளிரதம் பொன்னுரதம் வேணுமென்ற தொருகோடி
உடுபுடவை முன்னனுப்பி உலகமெங்குங் கூட்டமிட்டு
ஆனகுரு தன்புதல்வன் அசுபத்தா மாவுடனே

---

2326 அக்குரோணி—சேனையின் பேரளவு

2334 ரதகெசபதாதி—இரதம், கஜம், பதாதி

2354 அசுபத்தமா—அசுவத்தாமா

## விருத்தம்*

(1)

ஆனை தேரும் பரிகரியும்
அம்பத் தாறு ராசாக்கள்
வான கேசரி திரிகர்த்தன்
வரிவில் வல்ல கேசரியும்
தானங் குடைக்கைக் கர்ணனுடன்
சகுனிதம்பி தொண்ணூற் றொன்பதுபேர்
சேனை யக்குறோணி காவலரும்
துரியோ தனனும் நடந்துசென்றார்

(2)

எதிரிட் டரசர் கிரிசுழல்
எல்லை யிடங்கொள்ளாச் சித்திரத்தேர்
அதிரிட் டுலகங் கிடுகிடென
ஆதி சேஷன் தலைமாற்ற
பதினெட் டக்குறோணிப் படையுடனே
பாரில் மதுரா புரிநகரில்
சதிநெட் டெதிராப் பாளையமுஞ்
சர்ப்பக் கொடியோன் பொடிவித்தான்

(3)

வான முட்டக் கோட்டையிட்டு
மந்தர கிரிபோ லுப்பரிகை
சேனைக் கிரியும் படைதிரண்டு
திரளா யேழு கடல்போல
ஆன செம்பொன் தகதகென
அனந்தங்கூ டாரஞ் சோதிமின்ன
வானவர் தேவர் கொண்டாட
வளைத்து அடித்தான் கூடாரம்

நடை

துரியோ தனப்பெருமாள் சேனையும் ராணுவமும் 2355
மதுரா புரிநகரில் வந்திறங்கி ஒருபுறமாய்
சதுராகப் பாங்காய்த் தாணையம்போட் டிருக்கையிலே
அல்லியுடன் சோபனங்கள் அதிகமுடன் எல்லவரும்
எல்லையில்லா ராச்சியமும் ஈரே ழுலகம்வர

---

* இடையே இதனைத் தொடர்ந்து மூன்று விருத்தங்கள் அமைந்துள்ளன.

## தர்மருக்குச் சகாதேவன் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறல்

தர்மரது கேட்டுத்தம்பி சகாதேவ னைப்பார்த்து 2360
இன்பமுடன் இவ்வோலை ஏது கருமமென்றார்
சகாதேவர் தானெழுந்து தர்மரிடம் தாள்பணிந்து
உள்ளங்கை சாத்திரத்தை உத்து மிகப்பார்த்து
தெள்ளிமை யாகச் சேதி விரித்துரைப்பான்
வில்லி யருச்சுனனார் விரக மிகவெடுத்து 2365
அல்ல யரசாணி ஆண்மையுள்ள வீரியமும்
கண்டு மயல்கொண்டு கலியாணம் பண்ணவென்று
அல்லிவிர கங்கொண்டு ஆயரையும் கூட்டிக்கொண்டு
நெல்லி நிழலாடும் நேர்மதுரை உள்புகுந்து
ஆய னுபாயமுற்று—அருச்சுனர்—அல்லி மடலூர்ந்து 2370
மெல்லி மயங்கி விழுந்தாள் மயில்போலே
அப்பச்—சோபனங்க ளென்று தொல்லுல கோரறிய
மாலையிட வேணுமென்று மண்டலத்தி லோலைவிட்டார்
சேதி தனைக்கேட்டுத் துரியோ தனப்பெருமாள்
வல்லிதனைக் கொல்லவென்று மன்னவர்கள் தான்சூழ 2375
பதினெட் டக்குரோணிப் படையும் படைத்திரளும்
தென்மதுரை வீதிக்குச் சிங்கா சனமுமிட்டு
மன்னன் துரி யோதனனும் மண்டலத்தில் அரசரெல்லாம்
மாலையிடு வாளென்று மணக்கோல மானார்கள்

### விருத்தம்

தேச தேசத் துராசர்
துரியோ தரனுந் திரண்டாலும்
வாசம் பொருந்தும் அருச்சுனர்க்கு
மாணிக்க வெண்முத்தி னால்மாலை
ஆச மொத்த அல்லியரும்
அன்பா யெவரு மகிழ்ந்திருக்க
நேச முடனுஞ் சூட்டுதற்கு
நேரே ராசர் தான்சூழ்ள்வார்

### நடை

தம்பி யுரைக்கத் தர்ம ரதுகேட்டு 2380
இன்பங் குளிர்ந்து எவ்வுலகும் ஓலைவிட்டு
சர்க்கரைப் பந்தலிலே தேன்மழை பொழிந்தாற்போல்
தன்மர்முதல் வீமருஞ் சகலபரி நகுலருடன்
இன்பமுட னைவருமொத் தின்பமணித் தேரணுகி
மெய்ப்பான பூஷணமும் வேணுமென்ற திரவியமும் 2385
ஒப்பான பூவுலகில் உசந்த பணுதிகளும்
தப்பாத சொல்லுடையான் தனஞ்செயனார் தன்தேரில்
செப்பாருங் குவிமுலையாள் திரௌபதியுஞ் சுபத்திரையும்

2363 உத்து—உற்று
2372 அப்ப—அப்பொழுது

வித்தார மாக விரையவே தேரில்வைத்து
தேரும் பரியுந் திரண்டுமிகச் சூழ்ந்துவர 2390
தப்பாத் சொல்லுடைய தர்மர்தேர் ஏறினராம்
மெய்ப்பாய் வலியுடைய வீமன்தே ரேறினராம்
ஒப்பான பரிநகுலன் உயர்ந்தமுகில் வரவழைத்து
தப்பில்லா வெண்புரவி தான்சமைய வேணுமென்று
பொன்மாரி பெய்யும் பொறந்தமுகில் வரவழைத்து 2395
நன்மாரி பரியாக நகுலனைவந் தடிபணிந்து
வன்மாரி நன்றாய் வட்டமிடும் புரவியென
பொன்மாற் றுயர்ந்த பொற்குதிரை யானதுவே
மேகங் குதிரையென மின்னல் சவுக்கெனவே
காரிடி டமடமெனக் காமன்சிலை வில்லாக 2400
பாரதிரப் பரிநகுலன் பருமேகப் புரவியின்மேல்
சாத்திரத்தில் வல்ல சகாதேவன் தேரேறி
ரத்தினமணி சோதிமின்ன ரவணிதங்கள் சூழ்ந்தாற்போல்

## விருத்தம்

1

அஷ்ட கெசங்கள் திரண்டிடவே
ஆதி சேஷன் தத்தளிக்க
இஷ்ட மாகவே சித்திரத்தேர்
ஏழு லோகங்கள் கிடுகிடென
துஷ்டன் அரவக் கொடியோனுஞ்
சூழப் பதாதியுந் திரண்டோட
திட்ட முடனே அய்வரசர்
தென்மது ராபுரி நகர்சேர்ந்தார்

2

தங்கக் கிரிபோற் கூடாரந்
தகத தெனவே வந்துநின்றே
வெங்கக் கதிரோன் மண்டலத்தில்
விசும்பு முட்ட டாலோங்க
துங்கப் பரிவாய் மன்னரெல்லாஞ்
சூழ நின்று மகிழ்ந்தோங்க
மங்கை துரோபதை சுபத்திரையும்
வந்து மதுரா புரிசேர்ந்தார்

3

வட்டக் கடல்வந்து சூழ்ந்ததென்ன
மாயன் தங்கை சுபத்திரையும்

---

விருத்தம் 1 பதாதி—படைகள்
2 வெங்கக்கதிரோன்—சூரியன்

இட்ட முடனே அருச்சுனர்க்கு
ஏற்ற பெண்கள் அனைவோரும்
திட்ட முடனே வந்ததனால்
தென்னன் மதுரா புரிப்பெருமாள்
பட்டுப் பணுதி யெதிர்வைத்துப்
பரிவாய் வந்து கண்டார்கள்

4

தென்ன மதுரா புரிநகரைத்
தெருக்கள் தூத்து அலங்கரித்து
அன்னக் கொடியள் நாலுதிக்கும்
அசன மிந்தா வென்றாடச்
சொர்ணக் கொடியள் நாலுதிக்குஞ்
சூரை சூரை யென்றாடக்
கன்னி தானமிந் தாவெனவே
காமக் கொடியு மாடிடுமாம்

5

கோதான மிந்தா வெனவே
கொடிக ளாடி யழைத்திடுமாம்
போதாம் பூமி தானங்கள்
பூமி யிந்தா வென்றாடும்
வேதப் பிராமணன் றனையழைத்து
விரும்பி யாடை கொடுத்தாடும்
நீதம் மிகவே தானம்மிக
நிறையக் கொடுக்கும் மதுராபுரியே

6

பூமி யெங்குந்திண் ணைபோட்டுப்
பொன்னைத் திரட்டிக் கால்நிறுத்தி
நாம மதியா வானுலகம்
நட்சத் திரம்முட்டப் பந்தலிட்டு
சோம னிலவும்பிர காசமெனத்
தோன்ற மறைந்தார் மேல்கட்டு
காமக் கொடிவெண் சாமரையும்
கட்டி யழகா யலங்கரித்தார்

நடை

மாறாப் பதமுடைய மன்னவர்கள் பாண்டியர்கள்
ஆறாயிரம் பாண்டியரும் அன்புடனே தானெழுந்து 2405

---

4 தூத்து—சுத்தம் செய்து
அசனம்—வேங்கை
5 நீதம்—நீதி, முறைமை

அல்லியிட தாதைமார் ஆறாயிரம் பேரும்
அல்லியர சாணியர்க்கு அழகுமணஞ் செய்யவென்று
சொக்க ரருள்பெற்ற சுந்தரப்பூஞ் சாயநல்லாள்
அங்கயற் கண்ணம்மன் அருள்பெற்ற பெண்மயிலி
மீனாட்சி பாதம் விரும்புகின்ற தேன்மொழியாள் 2410

## அல்லியின் நிலை

பாங்கான வில்விசையன்-பல்-லொளிவுகண்ட நாள்முதலாய்
மானம் மறந்தாள் வையகத்தில் சொல்மறந்தாள்
தேசம் பராமரிப்புச் சிவபூசை தான்மறந்தாள்
அந்திக் கொலுமறந்தாள் ஆண்மையுள்ள சொல்மறந்தாள்
வித்தாரம் தான்மிகுந்த விளையாட்டும் தான்மறந்தாள் 2415
அஞ்சு பஞ்சபூதம் அறிவுகளும் மெய்மறந்தாள்
மெய்க்கூட் டெனுமுயிரை விசயனுங் கொண்டுசென்றான்
வீரமுந் தான்குறுகி விறுக்கு விறுக்கெனவே
பொய்க்கூடு கொண்டு புலம்பித் தயங்குகிறாள்
தலைகோதிக் கட்டாமல் தங்கமுடி சூடாமல் 2420
அலைகடலில் துரும்பதுபோல் ஆரணங்கு வீற்றிருந்தாள்
மேலான தாதியர்கள் மெல்லியரை வந்துகண்டு
திங்கள் நுதலார் திருமேனி தீண்டவல்லார்
இஷ்ட முடன்மாலை யிடுவிப்பேன் தப்பாது
அந்த மொழிகேட்டு அய்வரும் நல்லதென்றார் 2425

## துரியோதனனின் செய்தியறிந்ததும் அல்லி கோபமுறுதல்

துரியோ தனன்சொன்ன சேதிஅல்லி தான்கேட்டு
கண்கள் சிவந்து கடுங்கோப மாய்த்துடித்து
மப்பொன்று தட்டி வாளுருவிக் கைப்பிடித்து
சித்திரத் தேரேறிச் சீக்கிரமாய்த் தானடத்தி
வகைக்கொரு வில்லும் வாகான அஸ்திரமும் 2430
பாங்கான வில்லும் பகவதி அஸ்திரமும்
வாங்கு பிடியம்பும் வளைதடியுங் கைப்பிடித்து
ஓங்கு பிடியம்பும் ஒருகோடி அஸ்திரமும்
வீரமா சூரர்வென்ற வெற்றிவே லாயுதமும்
சூரமா காளியுட சூலா யுதமழுவும் 2435
சிங்கார ரூபி சிவலோக பற்பினியை
தேரூரச் சொல்லிச் சித்திரத்தே ரேறினளாம்
சிங்கத்தைப் பூட்டிச் சித்திரமாய்த் தேர்நடத்தி

---

2415 வித்தாரம்—திறமை
2418 விறுக்கு விறுக்கெனவே—அச்சக்குறிப்பு
2428 மப்பொன்று தட்டி—மப்பு-செருக்கு
2435 காளியுட—காளியினுடைய

ஆங்கார பற்பினியாள் அமட்டினாள் சித்திரத்தேர்
சேஷ்ன் கொடியுடைய துரியோ தனன்மேலே 2440
வாசம் பொருந்தியசீர் வைகை வளநாடி
அல்லிதேர் கண்டு ஆணழகன் வந்தெதிர்த்தான்

## அல்லி பகவதி அஸ்திரத்தை விடுதல்

வேல்பொருதுங் கண்ணாள் வெகுண்டுமிகக் கோபமதாய்
பகவதி அஸ்திரத்தைப் பாங்குடனே தானெடுத்து
ஓமம் வளர்த்தி உபசரித்தா ளப்போது 2445
தூபங் கொடுத்தாள் சுவாமி தனைநினைந்தாள்
நாணேற்றி னாளல்லி நாகலோகங் கிடுகிடென
அப்போ-விட்டாள்-கணைமாரி விச்சித்திரமாக
சேனை நொறுங்கடித்து-அவன்-சேனைதனைத் துரத்தி
கொன்று உழக்கிக் கூறிட்டே ஓட்டிவிட்டாள் 2450

## கணையால் நேரும் அழிவுகள்

தொட்டகணை யார்ப்பரித்துச் சுரலோகம் பூலோகம்
மாய மழுவாலும் மகரபூதம் பிடிகளென
அக்கினியும் பெருங்காற்றும் அஷ்டதிக்கும் வளைந்தாற்போல்
சித்திரத் தேரெல்லாஞ் சேர நொறுங்கடித்து
ஆனை பரிகரியும் அதிவீர சூரரெல்லாம் 2455
பட்டுருண்ட பேர்கோடி பகவதி அஸ்திரத்தில்
கெட்டே னெனவிழுந்து கிளிபிடித்து உருண்டிடுவார்
துரியோ தனன்தேரும் திரிகரத்தன் தன்தேரும்
நூலார் கடுந்திரளார் நூற்றுவர்கள் தன்தேரும்
சேர நொறுங்கடித்துத் தீக்கொளுத்திச் சுட்டதினால் 2460
அய்யோ அபயமென்று அலறியே யோடலுற்றார்
ஓடினான் துரி யோதனனும் உற்றபெருங் காற்றெனவே
பட்டவர்கள் போகப் படாதவர்கள் தானோட
நூலார் கடுந்திரளார் நூற்றுவர்க ளோடிவிட்டார்

## அல்லியின் வெற்றி

அல்லார்க்கும் வல்ல அல்லியரும் வெற்றிகொண்டாள் 2465
வெற்றிகொண்டாள் அல்லியென்று வீர முரசறைந்தான்
பாண்டிப் பெருமாள் படைவென்ற வீரியமும்
கண்டார்கள் ராசர் கற்புமிகு வீரியமும்
தேசத்தில் கண்டதில்லை சேவகமும் வாள்சமத்தும்
மதுரைக்கு நாயகியாள் மாலையிட வேணுமென்று 2470
மீட்டினாள் தேரை வீதியிலே நின்றதுவே
பதினெட்டு மேளம் பரிவாய் மிகமுழங்க

2439 அமட்டினாள்—அதட்டினாள்
2451 சுரலோகம்—தேவலோகம்

### வாணவேடிக்கை

ஆகாச வாணம் அண்டமெல்லாம் மின்னிடவே
பூவாணங் கோடி பொரிவாணங் தான்கோடி
நட்சத் திரவாணம் நற்பிரபை சோதிமின்ன 2475
நிலவிருது பெட்டிவிகள் நிலங்க ளதிர்ந்திடவே
எண்ணிக்கை யில்லாத எத்தனையோ வாணவகை
பகல்வத்தி மத்தாப்பு பகல்பஞ்சு தன்னொளிகள்
பட்டப்பகல் போல்பிரபை பாண்டி வளநாடு

### அல்லி மாலையிடல்

பாண்டி வளநாட்டுப் பைங்கிளியாள் அல்லியரும் 2480
நாமக் கொடியாள் நட்சத்திர மாலைகொண்டு
காமக் கொடியாள் கருணையுடன் மாலையிட
சொக்கர் தனைநினைந்தாள் சுற்றினாள் மாலைதன்னை
வில்லி யருச்சுனர்க்கு மெய்ப்பா யவர்கழுத்தில்
போய்விழுக வென்று பூவாணங் தனைத்தொடுத்தாள் 2485
ஆயனுங் தேரூர அர்ச்சுனன்தேர் மேலிருக்க
பஞ்சவர்கள் சூழப் பலதேருஞ் சூழ்ந்துவர
அம்பத் தாறுதேசம் ஆளுமன்ன ராசரெல்லாம்
சேசே யெனத்திரளாய்த் தேவர்பூ மாரிபெய்ய
ஆலாத்தி சுத்தியவள் அர்ச்சுனர்க்கு மாலையிட்டாள் 2490
மெய்ப்பான அல்லி விசயன் கழுத்திலிட
தன்மர்ச கோதரனார் தனஞ்செயனார் தன்கழுத்தில்
மாலையிட்டா ளல்லியென்று வானவர்பூ மாரிபெய்தார்
அம்பத் தாறுதேசம் ஆளும்மன்ன ராசரெல்லாம்
இன்பங் குளிர்ந்து எல்லாருங் கண்டுநின்றார் 2495
அர்ச்சுனனார் தேரும் அல்லியுட தன்தேரும்
தென்பாண்டி நாட்டுத் தெருவில்வல மாகவந்து
அரண்மனைக்கு முன்பு அவர்கள்ரதம் வந்திடவே
வர்னம் லெட்சம் ஆலாத்தி வகையாய்ச் சுத்தியிட்டார்
தேர்விட் டிறங்கினாள் தென்மதுரை நாயகியும் 2500
குருகுலத்து மன்னன் குலப்பெருமாள் அர்ச்சுனரும்
ரதம்விட்டுத் தானும் ரவணிதமாய்த் தானிறங்கி

### இருவருக்கும் ஆரத்தி எடுத்தல்

அல்லியரும் அருச்சுனரும் அணிசோடாய் நிற்கையிலே
முத்தினா லாலாத்தி முப்பதி னாயிரமும்
சுத்தி யெறிந்தார்கள் தோகையர்க்கும் காளையர்க்கும் 2505

---

2476 பெட்டிவிகள்—வாணவகைகள்

2490 சேசே யெனத்திரளாய்—ஜேஜே என்னும் மொழி திரண்ட கூட்டத்தினரைக் குறிப்பது.

2503 அணிசோடாய்—ஜோடியாய்

பஞ்சவர்ண ஆலாத்தி பஞ்சவர்க்கும் அல்லியர்க்கும்
வஞ்சமறச் சுற்றி வாரி யெறிந்தார்கள்
பட்டுகள் சுற்றிப் பலதிக்கும் விட்டெறிந்தார்
மஞ்சள்நீ ராலாத்தி வாங்கி யெறிந்தார்கள்
ஆலாத்தி சுற்றி அரண்மனையி லுள்புகுந்தார் 2510

## மங்கலநாண் சூட்டல்

மணவறையில் கூட்டிவந்து வைத்தார்கள் ஆசனத்தில்
ஓமம் வளர்த்தி ஒருகோடி தானஞ்செய்து
மாயவரும் அருச்சுனரும் மற்றுள்ள ராசர்களும்
வேதியருஞ் சோசியரும் விண்ணவருங் கொண்டாட
ஆறா யிரம்பேர் அணிபிரியாப் பாண்டியர்கள் 2515
திரௌபதை சுபத்திரையுஞ் சுற்றமுள்ள கிளையுடனே
தர்மருடன் வீமருஞ் சகாதேவர் நகுலருமாய்
இன்பங் குளிர்ந்து இருதோளும் பூரிதமாய்
ராம ரகுநாதரை நன்றாய் நமஸ்கரித்து
மறையோர்கள் கூடி மணப்பந்தல் உள்ளிருந்து 2520
நிறைவாய்க் கணபதிக்கு நெய்வேத்தியம் பூசைசெய்து
மாணிக்க மங்கிலியம் மன்னர்கையி லேகொடுத்து
ஆணிக்கை யான அருச்சுனருந் தான்வாங்கி
மாணிக்க வல்லிஅல்லி மங்கையர்க்குத் தான்தரித்தார்

## இல்வாழ்க்கை

நாலாநாள் சீர்செய்து நல்ல முகூர்த்தமிட்டு 2525
தோகைஅல்லி அருச்சுனருஞ் சுகமுடனே வாழ்ந்திருந்தார்
அல்லி யரசாணி அருச்சுனர்க்கு மாலையிட்டு
வில்லி யருச்சுனர்க்கு மெய்ப்பான அல்லியரும்
கலவி மிகச்செய்து கடியசுக மாயிருந்தார்
மன்மதனும் ரதியும்போல் வாழ்ந்து செழித்திருந்தார் 2530

## வாழ்த்து

அல்லி யரசாணி அருச்சுனருக்கு மாலையிட்ட
நல்லதொரு இக்கதையை நன்றாகக் கேட்டவரும்
கேட்டோருங் கற்றோருங் கிளையுடனே வாழ்ந்திருப்பார்
இன்பமுடன் கேட்டோரும் எழுதிவைத்துப் படித்தவரும்
வாசமிகும பூவுலகில் வாழ்வுமிக வாழ்ந்திருப்பார் 2535
அங்கயற்கண் மீனாட்சி ஆதிசொக்கர் பதம்வாழி
அய்வர் சகாயன் ஆதிகிருஷ்ணர் தாள்வாழி
கேட்டோருங் கற்றோருங் கிளையுடனே தான்வாழி.

---

2518 பூரிதமாய் — மகிழ்வாய்

2522 மங்கிலியம் — தாலி

2523 ஆணிக்கை — மேன்மை

அர அர

இந்த அல்லி கதையேடு ஓரடியாயிருந்ததை இரண்டு பங்கு ஈரடிப்படுத்தியும் ஒருபங்கு ஓரடியாயும் சோபகிருது வருடம் ஆடி மாதம் 31-ஆம் தேதி வெள்ளலூரிலிருக்கும் கப்பினிபதி பிள்ளை கையெழுத்தாக யெழுதி முடிந்தது. சந்திரவாரத்தில் சம்பூரணம். சொக்கநாத சுவாமியும் எம்பெருமாளும், மீனாட்சியம்மனும் பூர்ணகடாட்சமாய்த் துணையிருந்து ரெட்சிக்கவும்,

வெற்றிவேலுற்ற துணை

விருத்தம்

1

வாழி வலம்புரி தண்டெரி
சக்கரம் வாழிரு கைப்படையும்
வாழி நெடுஞ்சிலை வாழி
யடுங்கணை வாழி மலர்பதுவும்
வாழி தலம்புகழ் வாழி
சவுந்தரி வாழி மலர்த்திருவும்
வாழி நலந்திகழ் பாட
லுயர்ந்தவர் வாழி தவத்தவரே.

2

வாழி வாழி குந்தி மைந்தன்
வலவன் வாழி வாழியே
வாழி வாழி யவனி யுந்த
வந்த நாதன் வாழியே
வாழி வாழி காள மேக
வண்ணன் வாழி வாழியே
வாழி வாழி வாசு தேவன்
மதலை வாழி வாழியே.

3

மன்னுபாஞ் சால ராசன்
மனத்துய ராற்ற வந்த
மின்னுரு மிடையா யிந்த
மேதினிக் கொளியாய் நின்றாய்
மன்னுமா மணியே நீதி
மறைமொழிக் கற்பி னாளே
அன்னையே யெந்தன் முன்பு
அனுதினந் தோன்று வாயே,

4

ஆரணப் பொருளே யிந்த
அவனியி லன்பர்க் கெல்லாம்
காரண மாக நின்ற
கண்ணுத லானாய் போற்றி
பூரண குருவே ஞானப்
புண்ணிய முதலே போற்றி
தாரணி யுள்ளார் போற்றுந்
தர்மனே சரணந் தானே.

5

உற்பனப் பொருளே யெந்தன்
உள்வினை தீர்ப்பாய் போற்றி
கற்பகத் தருவாய் நின்ற
கருணைவா ருதியே போற்றி
பொற்புரு கற்பி னாள்தன்
புனிதனே போற்றி போற்றி
தற்பரா யெந்தன் முன்பு
சடுதியில் தோன்று வாயே.

6

பொருவரிய பாஞ்சாலன் பெற்றெடுத்த
தெய்வமே போற்றி போற்றி
மருவரிய துளவணிந்த மாதவன்கூ
டப்பிறந்த மயிலே போற்றி
கருதரிய துஷ்டர்குலங் கட்டழிக்க
வந்தபெருங் கனலே போற்றி
தருவெனவே அருளருளுந் திரௌபதைத்தாயே
மாயேஉனது சரணம் போற்றி.

7

சிட்டர்புகழ்ந் திலங்கவரும் ஐவருக்கும்
பத்தினியாந் தேவி போற்றி
விட்டதுஷ்ட ராய்ச்செனித்த நூற்றுவர்தன்
குலமுடிக்கும் விஷமே போற்றி
மட்டவிழுங் கற்புமிகு மாதருக்கெல்
லாம்ராச மயிலே போற்றி
அட்டதிசை யோர்வணங்கும் திரௌபதைத்தா
யேமாயே ஆயே போற்றி.

அல்லி கதை
முற்றும்.

அல்லிகதை

# பொருளகராதி

(எண்கள்: பக்க எண்கள்)

# கதைப்பாடல்கள்
## நூல்கள் பட்டியல்

அகண்டவெளிக்குறம்
அசுவமேதயாகக்கதை
அஞ்சன சோரன் கதை
அண்ணன் சரிதை
அண்ணன்மார் சுவாமி கதை
அந்தோணி அம்மானை
அபிமன்னன் சுந்தரிமாலை
அமராவதி கதை
அமிர்தவல்லி மாலை
அரவான் அம்மானை
அரிச்சந்திரன் கதை
அல்லி கதை
அல்லியரசாணி மாலை
அழகேசராசாக்கதை
அன்னரு பொன்னரு கதை
அனகர் பெருமாள் கதை
அனந்தன் காடு சரித்திரம்
அனந்தை கதை
ஆத்திமாடன் கதை
ஆதிரையர் அம்மானை
ஆமையம்மானைக்கதை
ஆரவல்லி சூரவல்லி கதை
இசக்கியம்மன் கதை
இடைச்சி கதை
இந்திராயன் படைப்போர்
இபுனியந்தன் படைப்போர்
இரக்கி கதை
இரவிக் குட்டிப்பிள்ளைப்போர்
இராமகாதை
இராமப்பய்யன் அம்மானை
இராமர் அம்மானை
இராமாயண ஓடம்
இராமாயண சிந்து
இராமாயணப்பாட்டு
ஈனமுத்துப்பாண்டியன் கதை
உச்சிப்படைப்போர்
உச்சினி மாகாளி அம்மன் கதை
உத்திரகதை
உருக்குமாங்குதன் கதை
ஏணியேற்றம்
ஐவர் இராசாக்கள் கதை
ஓசியத்துக்கதை
கட்டபொம்மன் கதைப்பாடல்
கட்டபொம்மன் கூத்து
கட்டபொம்மு பெட்டிவிருத்தம்
கட்டையேறும் பெருமாள்கதை
கண்டிராஜன் ஒப்பாரி
கண்ணகி அம்மன் ஊஞ்சல்
கண்ணகியம்மன் குளுத்திப்பாட்டு
கண்ணகி வழக்குரை
கண்ணப்பர் அம்மானை
கந்தர் அம்மானை
கப்பல் பாட்டு
கபாலக்காரன் கதை
கபில கதை
கபில காவியம்
கர்ணமகாராஜன் சண்டை
கருங்கிடாக்காரன் கதை
கலியுக மகாகாவியம்
கள்ளழகர் அம்மானை
கன்னடியன் படைப்போர்
கன்னிமார் கதை

காகுத்தன் கதை
காஞ்சன் அம்மானை
காஞ்சி மன்னன் அம்மானை
காத்தவராயன் கதைப்பாடல்
காந்திமகான் கதை
காமாட்சியம்மன் தவமகிமை
அம்மானை
கால கன்னியம்மன் கதை
காலசாமி கதை
கான்சாகிபு சண்டை
கித்தேரியம்மாள் அம்மானை
கிருஷ்ணன் தூது
கிருஷ்ணாவதார அம்மானை
கீசகன் கதை
குசலவ வாக்கியம்
குசலவன் அம்மானை
குசலவன் கதை
குயில்பாட்டு
குயில் ராமாயணம்
குருக்காளாஞ்சி கதை
குருசாமி கதை
குருசேத்திர மாலை
குலைவாழை இசக்கிக்கதை
கூற்றை உதைத்த கதை
கோமதி அம்மன் தவ மகிமை
அம்மானை
கோவிலன் கதை
கௌதல மாடன் கதை
சங்கலிப் பூதத்தார் கதை
சதமுக ராவணன் கதை
சந்தன மகாராசன் கதை
சந்திமாடன் கதை
சராசந்தாதி அசுவமேதைக்கதை
சாரங்கதாரன் கதை
சாவித்திரி பாதம்
சாஸ்தா கதை
சித்திரபுத்திரன் கதை
சித்திரலேகா கதை
சிந்தாமணி மாலை
சிவகங்கை அம்மானை
சிறுத்தொண்டன் கதை
சின்னத்தம்பி கதை
சின்ன நாடான் கதை
சுகுணன் கதை
சுசீலவள்ளல் அம்மானை
சுடலை மாடன் கதை
சுடலையாண்டி கதை
சுந்தரர் வேடுபறி
சுந்தரி கதை
சூரபத்மன் கதை
சூலூர் சுப்பாராவ் சிந்து
செங்கிடக்காரன் கதை
செய்தத்துப் படைப்போர்
சேத்திர பாலன் கதை
சேர்வைக்காரன் கதை
சொட்டுக்கதை
சோழன் பசுக்கதை
ஞான அம்மானை
ஞான சௌந்தரியம்மாள் கதை
ஞான ரத்தினக் குறவஞ்சி
டேவிட் அம்மானை
தக்கன் கதை
தக்கைப்பாட்டு
தசரதராமன் கதை
தடிவீரன் கதை
தமிழறி மடந்தை கதை
தமிழறியும் பெருமாள் கதை
தர்மாம்பாள் குறம்
திரௌபதி குறம்
திவான் வெற்றி
துருபத மகாராஜா கதை
துரௌபதி சுயம்வரம் கதை
தேசிங்குராஜன் அம்மானை
தேசிங்குராஜன் கதை

தேவ மாதா அம்மானை
தோட்டுக்காரி அம்மன் கதை
நபிஅவதார அம்மானை
நபுசு படைப்போர்
நல்ல தங்காள் கதை
நளச்சக்கரவர்த்தி அம்மானை
நளன் கதை
நளாயினி கதை
நாசிகேது புராணக்கதை
நாலு மந்திரி கதை
நீலி கதை
பகவதியம்மன் களவுமாலை
பச்சையம்மாள் கதை
பஞ்சபாண்டவர் வனவாசம்
பத்திரகாளியம்மன் கதை
பரசமயக் கோளரியார் அம்மானை
பலவேசக்காரன் கதை
பவளக்கொடி மாலை
பாசவவிலாசன் கதை
பாஞ்சாலன் குறிச்சி சண்டை
பாஞ்சாலன் குறிச்சி சிந்து
பாடும் பரசி கதை
பாமாருக்மணி கதை
பார்வதி அம்மன் சோபன்
பாரத அம்மானை
பாரத ஏலப்பாட்டு
பாரதக்கட்டியம்
பாரதக்கதை
பாரதம் அசுவமேதக்கதை
பாரிசேண குமாரர் கதை
பாலநாகம்மாள் கதை
பிச்சைகாலன் கதை
புரூரவ சக்கரவர்த்தி கதை
புரூரவாயின கதை
புலந்திரன் தூது
புலந்திரன் களவு மாலை
புவனேந்திரன் அம்மானை
பூம்புகார் பத்தினி
பூரண மகரிஷி கதை
பூலங்கண்டான் கதை
பூலுத்தேவன் சிந்து
பெரியண்ணன் சின்னண்ணன் கதை
பெருமாள்சாமிகதை
பெலமாடன் கதை
பேசா மடந்தை கதை
பொன்னிறத்தாள் கதை
பொன்னுருவி மசக்கை
போஜராஜன் அம்மானை
மகாபாரத அம்மானை
மகாபாரத ஏலப்பாட்டு
மதனகாமராஜன் கதை
மதுரைவீர சுவாமி கதை
மந்திரமூர்த்தி கதை
மம்பட்டியான் கதை
மயில்ராவணன் கதை
மரிக்கருத்தாள் அம்மானை
மரியாதைராமன் கதை
மருது பாண்டியர் கதை
மன்மதன் ஒப்பாரி
மன்மதன் கதை
மன்னன் கருங்காலி கதை
மன்னன் மாடிப்பன் கதை
மாகாளியம்மன் கதை
மாசானசாமி கதை
மாணிக்கவாசகர் அம்மானை
மார்க்கண்டன் கதை
மார்க்கண்டன் தவசுக்கதை
மார்க்கண்டேயர் அம்மானை
மாரியம்மன் கதை
மாருதி விஜயம்
மாலையம்மை கதை
மின்னொளியாள் குறம்
மீனாட்சி திக்விஜய அம்மானை

முத்தாரம்மன் கதை
முத்துப்பாட்டன் கதை
முப்பத்திரண்டு பதுமை கதை
முலைப்பாட்டு
முனியம்மாள் கதை
முனீஸ்வரன் கதை
மூட்டை சுமந்த முடிமன்னர் கதை
மூவர் அம்மானை
மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை
மைராவணன் கதை
மோகினி கதை
யாத்ராகமம்
ராமாயணக்கதை
ருக்மாங்கதன் அம்மானை
ரூத் அம்மானை
லலிதாம்பாள் சோபனம்
லூர்துமாதா அம்மானை
வண்டி மலைச்சி கதை
வயிரவநாதன் கதை
வலங்கையர் கதை
வல்குன்னி அம்மன் கதை
வல்லரக்கன் கதை
வல்லவர் கதை
வள்ளால மகாராசன் கதை
வள்ளியம்மன் கதை
வன்னியடி மறவன் கதை
வன்னிராசன் கதை
வாலி மோட்சக்கதை
விக்கிரமாதித்தன் அம்மானை
வித்தகக்கதை
வித்வான் குறம்
விநாயக புராணக்கதை
விநாயக சதுர்த்தி கதை
விருது கதை
வில்கதை அம்மன் கதை
விஜயராகவ நாயகர் முலைப்பாட்டு
வீணாதி வீணன் கதை
வீமன் கதை
வீர குமரன் கதை
வீர துரங்கராசன் கதை
வீரபாண்டிய கட்டபொம்மு கதைப்பாடல்
வீரபோக வசந்தராயர் கதை
வீரய்யன் அம்மானை
வீரராசன் கதை
வெங்கலராஜன் கதை
வெட்டும் பெருமாள் கதை
வெள்ளைக்காரச்சாமி கதை
வேதப்பொருள் அம்மானை
வேதாகம புராணக்கதை
வேதாளக்கதை
வேம்பத்தூர் அய்யா அம்மானை
வேளாளர் அம்மானை
வைகுண்ட அம்மானை
வைகுண்டக்கதை
ஜகதீஸ்வர அம்மன் கதை
ஜீவரத்தினம்
ஹித்தாபஸன் கதை

---